உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுரவே நம:

# இராமதத்வதீபிகையினது

## ஆபாசவிளக்கம்

முதற்பாகம்.

இஃது,

ஸ்ரீ ல ஸ்ரீ

சோமசுந்தரநாயகரவர்களது

மாணாக்கருளொருவராகிய

நல் - சுப்பிரமணியமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு,

சென்னை

வேதாகமோக்தசைவசித்தாந்தசபையாரால்

வெளியிடப்பட்டது.

MADRAS.
PRINTED BY S. RUTHNA CHETTIAR,

AT THE MADRAS RIPON PRESS.

1888.

சிவமயம்.

# புத்தகவிளம்பரம்.

| | | |
|---|---|---|
| சிவதத்வசிந்தாமணி.<br>சிவாதிக்யரத்நாவளி முதற்பாகம்.<br>ஷை இரண்டாவதுபாகம். | 2 | 8 |
| சைவசூளாமணி | 1 | 8 |
| கூரேசவிஜயபங்கம். | 1 | 8 |
| ஆசாரியபிரபாவம். | 2 | 0 |
| சித்தாந்தபூஷணம்.<br>உத்தமவாததூலவாதூலம். | 1 | 0 |
| சிந்தாந்தசேகரம்.<br>சமரஸஞானதீபம். | 0 | 12 |
| அர்ச்சாதீபம். | 0 | 12 |
| ஆளுடையபிள்ளையாரந்தாதி. | 0 | 3 |
| இராமதத்வதீபிகையினது ஆபாசவிளக்கம், முதற்பாகம். | 0 | 8 |
| ஞானபேதத்தெளிவு. | 0 | 2 |
| ஞானபேதத்துணிவு. | 0 | 2 |
| சிவநாமாவளி. | 0 | 1 |
| ஆக மொத்தம் ... | 11 | 0 |

இவைகளை எம்மிடத்தில் விலைக்குவாங்கிக்கொள்ளலாம். இவை முழுதும்வாங்குபவர்க்கு 4 - ரூபா தள்ளிக்கொடுக்கப்படும்..

---

இராமதத்வதீபிகையினது ஆபாசவிளக்கம் 2-வது பாகம்.

இராமாயணஸம்சிகாபங்கம்.

நூர்வேததாற்பரியஸங்க்ரஹம் (தமிழ்ப்பாடல்)

இவைகளை இப்போது அச்சிட்டுவருகிறோம்.

நல். சுப்பிரமணியமுதலியார்.

கசக - வீரராகவமுதலிதெரு,

திருவல்லிக்கேணி.

சிவமயம்.

# பிழைதிருத்தம்.

## (முதற்பாகம்.)

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ | உக | ஆவணி | ஆனி |
| ,, | உரு | பாக் | பாக்கி |
| ரு | ஙரு | பின்லிடார் | பின்னிடார் |
| ,, | உஉ | பரத்மா | பரத்வமா |
| கஅ | உச | வரமனமவாதி | வாமனமாதி |
| ,, | ஙக | பரோத்யதா | பரோத்யாதா |
| உக | உ | ஸ்தா | ஸ்தாப |
| ஙக | உசு | பெண்ணுகிய | பெண்ணுக்கிய |
| சச | ஙசு | மான | ஸமான |
| சஎ | ஙக | பார்ப்பபது | பார்ப்பது |
| ,, | ஙசா | யோமமு | யோகமு |
| ருo | உக | பிரயோப | பிராயோப |
| ருசு | உ0 | தான | தாக |
| ,, | ஙக | பிசாதி | பிசாசாதி |
| சுரு | உகூ | துவாத | துவாதச |
| சுஎ | சு | சிவாரான | சிவாராதன |
| ,, | எ | விழுபகின்றான் | விடுபடுகின்றான் |
| எங | கசு | ஆயர்தேதம் | ஆயுர்வேதம் |
| எச | உ | இர | இரண் |
| எசு | கூ | மஹிமாவர்ணக்க | மஹிமாவர்[illegible] |
| ,, | கஉ | மரமாத்மா | பரமாத்மா |
| எஎ | உ0 | உத்கர்ஷ்டம் | [illegible] |
| அ0 | ஙரு | சுபாவபாவ | சுவபாவ |
| அஉ | ங | ஈரிலழுத | ஈரிலழுத் |
| அஎ | உங | ஈமதன்ப | ஈமதன்பர் |
| அகூ | ஙங | பூஷித்தர் | பூஷித்தார் |
| கூங | கச | விரா | வீரா |
| க00 | உ0 | அக்ஜுனன் | அர்ஜுனன் |
| ,, | [illegible] | ஜீவித்திங்க | ஜீவித்தியங்க |
| க0ரு | [illegible] | விளேவின் | விளேயின் |

శివాయ పరమగురవే నమః

---

## శ్రీరామలింగ స్తవం

---

అత్రప్రసాదమకరోత్ప్రభురిత్యవోచ
ఉద్దిశ్యయంజనకజాం ప్రతిరామచంద్రః
ప్రోవాచచానుజమహేశ్వరమర్చయామః
తంరామలింగమనిశంశిరసానతోస్మి ॥

కామారికార్శ్యఘనవిభాగకర్త్రీ
సోమావళీరాజతియస్వతుండే
రామాదిభిః పూజితపాదపద్మః
సోమార్ధచూడస్సభవేత్సుఖాయ ॥

ప్రపూజ్యపుండరీకాభం
నేత్రముత్పాట్యభక్తితః
పుండరీకాక్షనామాభూ
ద్విష్ణుస్తంప్రార్థయామహే ॥

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானஸம்பந்தகுருப்யோநம:.

# இராமதத்வதீபிகையினது

## ஆபாசநிரோக்ஷகம்.

—:(*):—

(முதற்பாகம்.)

---

காப்பு.

ஸ்ரீகண்டநாதர்.

வளைமகள் பயந்த வாரண முகத்தோன்
மருமலர்ப் பதத்தை வணங்குதி மனனே.

ஸ்ரீராமர்.

பொன்னி லங்கு புரிசடைப் புண்ணியன்
றன்னை யன்பொடு சேதுவிற் றாழ்ந்துமுன்
பின்னு மாகத் தொடர்பிர மக்கொலை
யின்ன றீர்ந்தவன் பாதமி றைஞ்சுவாம்.

---

## முகவுரை.

"ஸ்ரீராமர்சிவபூசைசெய்தது" என்னுமோர் சைவஸ்தாபந பத்திரிகை எமது ஸ்ரீலஸ்ரீ, சோமசுந்தரநாயகரவர்களால் வெளியிடப்பட்டிருக்கின்றது. அதனை வெளியிட்டதற்கு அந்தப்பத்திரிகையிற்றானே காரியகரவர்கள் காரணம் விளக்கியிருக்கிறார்கள். அதனுண்மை யாவருக்கும் இனிதுவிளங்குமாறு யாம் அதனை ஈண்டு முன்னர்வரைந்து, அதுபற்றிய ஏனை விவகாரங்களைப் பின்னர் வரைவாம்.

## ஸ்ரீராமர் சிவபூசை செய்தது.

"சென்னை ஸ்ரீமத் ஏகாம்பரநாதஸ்வாமிஸந்நிதி மாடவீதியில் ஓர்சாஸ்திரியார் சிலமாசங்களாக இராமாயணப் பிரசங்கஞ்செய்துவந்தார். அவர் அந்தஅக்கிரகாரவீதியில் இப்போதுநடந்துவரும் சூதஸம்ஹிதாபடனத்தில் அருமையநிகரித்து அதனைத்தூஷித்தார். நெற்றியிலே நீறுபூசி உருத்திராக்ஷமாலையைக் கழுத்திலணிந்து, சிவா

லயதரிசனம் விடாது செய்துவரும் இவருக்குச் சிவபுராணமாகிய சூத ஸம்ஹிதையில் விரோதபுத்தியுண்டானது ஆச்சரியம். தனது கணவன்கட்டியதாலி தன்னுடையகழுத்திலும் அவனுடைய அடையாளங்களாகிய மஞ்சள் குங்குமங்கள் தன்னுடைய முகத்திலுந் தரிக்கப்பெற்ற வோர்பெண் அந்தக்கணவனிடத்தில் அன்பு பாராட்டாமலும், வேறுபுருஷனிடத்தில் அன்புபாராட்டியும், தனதுகணவனை நிந்தித்துக்கொண்டும் (விபசாரி) என்று பேரெடுத்துப் புலரும்பழிக்கத்திரிவதுபோலன்றோ [illegible]பூண்டுதிரியுஞ் சாஸ்திரியார் விஷயமும் முடிந்திருக்கின்றது? இவர் ஸ்மார்த்தராகத் தம்மையெண்ணியிருப்பதாலும், தமது ஆசாரியஸ்வாமிகள் ஸ்ரீசங்கரபகவத்பாதரென மதித்திருப்பதாலும், உடம்பெல்லாம் சைவசின்னங்களைத் தாங்கியிருப்பதாலும் இவருக்குச் சிவமகிமையாகிய சூதஸம்ஹிதையில் ஹேயபுத்திவந்தது அபராதமெனவும், இவருக்குச் சிவகேசவர் ஸமமெனவாவது, கேசவனைக்காட்டிலுஞ் சிவன்தாழ்ந்தவரெனவாவது விபரீதஞானமுண்டாவது கூடாதெனவும் யாம் ஓர்பத்திரிகையில் நல்லறிவுச்சுடர்கொளுத்தினும். இப்படியே சூதஸம்ஹிதாபடனஞ் செய்துவரும் எதிசுவரர் சிவாகமநிந்தை-தமிழைப்பழித்தல் முதலியகாரியங்கள் செய்தல் கூடாதெனவும் அறிவித்தோம். இங்ஙனமாக, இராமாயணசாஸ்திரியார் பந்தயம்போட்டுக்கொண்டு சிவத்வேஷத்தை வளர்க்கத்தொடங்கினர். எங்ஙனமெனின், அவர் (கடந்த ஆவணிமீ ௩௦ உ நடத்தியபிரசங்கத்தில்) "அத்ரபூர்வம் மஹாதேவ:-ப்ரஸாதமகரோத்ப்ரபு:" என்னும் இராமவசனத்திற்குப் பதயோஜனிவியாக்யானஞ்செய்தனர். ஸ்ரீராமபத்திரருக்கு இராவணவதாநந்தரம் பிரஹ்மஹத்தி பிராப்தியாயினமையால், தந்நிவிர்த்தியர்த்தம் அவர்ஸேதுவில் சிவாராதனம்புரிந்து ஹத்தியைப்போக்கிக்கொண்டாரெனவும், அது இராமேசுவரம், இராமலிங்கம், இராமநாதர் என்னும் பெயர்வழக்குகளாலும், (அத்ரபூர்வம்) என்னும் இராமாயணவழக்காலும் ஸ்திரப்படுகிறதெனவும் சிலர் சொல்லுகின்றார்களெனவருவித்து அவர் சமாதானங்கூறிய அருமையை அவரது பிரசங்கத்திற் பெருங்கூட்டமாய்ச் சேர்ந்திருந்த (ஸ்திரீபுருஷவர்க்கங்களில்) முந்தியவர்க்கத்தாரே மெச்சத்தக்கவர்கள். அவரது நியாயவளப்பத்தைப் பின்னர்விவகரிப்பாம்.

அவரது பட்டாபிஷேகப்பிரசங்க பத்திரிகையில், அவர் ஒரிடத்தில் ஸ்காந்தப்பிரசங்கஞ்செய்ததாகப் பிரஸ்தாபஞ்செய்யப்பட்டிருந்தது. அவரிடத்திலும் ஸ்காந்தப்பிரசங்கங்கேட்கலாமா? அவரிடத்தில் அதனைக்கேட்பதிலும், துலுக்கர் கிறிஸ்தவர்களிடங்கேட்

பது விசேடமென்க. அவர்களுஞ் சிவனிடத்தில் அன்பில்லாதவர்
கள். இவருஞ் சிவனிடத்தில் அன்பில்லாதவர். இவரைக்காட்டி
லும் அவர்களைச்சிலாகித்தது எற்றுக்கெனின், அவர்கள் உள்ளும்வெ
ளியும் ஒரேதன்மை யுள்ளவர்கள். இவர் வெளியிலே சைவவேட
மும், உள்ளே சிவத்வேஷமுமுள்ளவர். இவரது தன்மையறிந்
தவர்கள் இவரது சைவவேடத்தை மதியாரென்க. இவர் ஓரிடத்
தில் (இராமாயணத்தைப் பிரஸங்கித்தவராயால் ஸ்காந்தத்தைப் பிர
ஸங்கிப்பதென்றால், எனக்கு அவமான[illegible]யிருக்கின்றது. ஆயினும்
ஜீவனத்தை யோசிக்கவேண்டியது) என்று கூறியிருக்கின்றனர். அ
ன்றியும், (விபூதிருத்ராக்ஷங்களைத்தரித்தவர்கள் சண்டாளர்கள்) என
வும் ஓரிடத்தில் பிரஸ்தாபித்தனர். யாரிடத்தில் அந்தச்சண்டாளத்த
ன்மையணுகாவிடினும் ஸ்காந்தத்தையும், விபூதிருத்ராக்ஷங்களையும்
அங்கீகரித்துப் பின்பு அவைகளைத்தூஷிக்குமிவரிடமணுகுமென்பது
ஸத்தியம். இனி இவர் தமது சிவத்வேஷத்தைப் பிரகாசிப்பித்து.
விவகரித்த மற்றவைபவத்தையுங் கொஞ்சம் பிரகாசப்படுத்துவாம்.

ஸ்ரீராமர் இராவணனைக்கொன்று சீதையை மீட்டுக்கொண்டு
திரும்புகிறமார்க்கத்தில், சீதையைப்பார்த்து(அத்ரபூர்வம்)என்னும்
வாக்கியத்தைச் சொன்னமையால், அதிற்போந்த(பூர்வம்)என்னும்
பதம் இராவணவதத்திற்குப் பூர்வம் எப்படி பிரயோசனப்படுமென
வும், தன்னிடம் அது விரோதிக்கின்றமையால், அதனை ஸ்ரீராமர்
அன்னியவிஷயமாகச் சொன்னாரென அறியவேண்டியதெனவும்
நமதுசாஸ்திரியார் இராமாயணஸாரத்தைப் பிழிந்தார். இந்தவசனத்
திற்குப் பாஞ்சராத்திரபண்டிதர்களெழுதிய வியாக்கியானத்தில் (ம
காதேவசப்தத்தை)வருணனிடம் ஸமர்த்தித்து ஸந்தோஷித்தார்கள்.
அப்படி நமதுசாஸ்திரியாருந் தொலைத்திருந்தால் உபத்திரவமில்லா
மற்போம். அங்ஙனஞ்செய்யாமல் அதனைச் சிவவாசகமாகவேகொ
ண்டு ஒருகதிகல்பித்தார். அதனைப்பேதித்தெறிந்து [illegible]மை
யை நிறுத்துவாம். ஸ்ரீராமர் சீதையைக் காட்டிற்பறிகொடுத்து
அலைந்துகொண்டிருக்கையில், அகஸ்தியரது ஆசிரமத்தையடைந்
து அவரைப்பணிந்து தனதுகுறைகளையெல்லாமெடுத்து அவரிடம்
விண்ணப்பஞ்செய்துகொண்டனர். அதனைக்கேட்டருளிய அக
ஸ்தியபகவான் ஸ்ரீராமரது சித்தப்பிரமந்தொலையும்படித் தத்துவ
ஞானமுபதேசித்துத் தெளிவித்துப் பின்பு அவருக்கு விரஜாதீக்ஷை
செய்து, சிவாராதனஞ் செய்கவெனப் பிரஸாதித்தனர். அவ்வாறே
அவர் சிவனைப்பூசித்துவருகையில், அவருக்குச் சிவபெருமான் உ
மாதேவியாரோடு வெளிப்பட்டுப் பாசுபதமுதலிய அஸ்திரங்களும்

சீதையை அடையும்வழமுங்கொடுத்து மறைந்தருளினரென்று பாத்முத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வுண்மைபோதரவே சீதையைப்பார்த்து இராமர் (அத்ரபூர்வம்) என்னும்வாக்கியத்தைச் சொல்லியருளினர். பூர்வம் இவ்விடத்தில் நான் சிவாராதனஞ்செய்தமையால், அப்போது மஹாதேவர் உன்னையடைவதாகிய பிரஸாதத்தை எனக்குச்செய்தருளினரென்று பொருள்கொள்வதேஅமைவுடைத்து. இவ்வர்த்தத்தில் (பூர்வம்) என்கிறபதம் பாதியாமையால், நமதுசாஸ்திரியார்விடுத்துக்கொண்ட வுழைப்புக்கு வைவஸ்வதன் கூலிகொடுக்கவேண்டியகஷ்டம் அவனுக்குவந்து ஸம்பவித்துவிட்டது. பாஞ்சராத்திரிகளதிர்ஷ்டம் இராமபத்திரருக்குப் பிரஸாதிக்க வருணனைத்தேடினர்கள். நம்மவரது அதிர்ஷ்டம் வைவஸ்வதன்கிடைத்தனன். இனி, மகாதேவராகியசிவன் தனக்குப் பிரஸாதியாமல் வேறொருத்தருக்குப் பிரஸாதித்ததை இராமர் ஆண்டுப்பிரஸ்தாபித்ததாயின், இன்னருக்குப்பிரஸாதித்தாரென என்விளங்கவுரைத்திலர்? பிரஸாதத்தையடைந்தவர் இவரெனத் தமக்கு விளங்காமையினலோ?வேறுஎதனலோ?நமது சரஸ்திரியார் தெரிவித்திலர். அதவா அப்படியே நாம் கொள்ளுமிடத்து அந்தராமவாக்கியத்தால் ஸித்திக்கும்பயன்யாது?அது ஒருபயனையுந்தராதாயின், அந்தவாக்கியத்தைஅவலமாக இராமர்உரைத்தாரெனவன்றோ கூறுதலமையும்? அதற்குப்பயனுண்டென நாட்டுகையில், பின்வருமாறு கோடலேஅமையும். எங்ஙனமெனின், பூர்வம் இவ்விடத்தில் ஒருவருக்கு மகாதேவர் பிரஸாதித்தாரென்கையால், மகாதேவர் யாவருக்கும் பிரஸாதிக்கின்றவரெனவும், ஆயினும் அது அவரை ஆசிரயித்தவர்க்கே கூடுமெனவும், அப்படியே ஒருவர் சிவனை ஆசிரயித்தமையால் பூர்வம்அவருக்கு அம்மஹாதேவர் பிரஸாதித்தாரெனவும், அதனை ஸாக்ஷியாகக்கொண்டு நானும் அவரை ஆசிரயிக்கிறேனெனவும், நீயும்என்னேடு ஆசிரயிக்கக்கடவாயெனவும் இராமபத்திரர் பிரகாசப்படுத்தினர் என்று ஸமர்த்திக்கவேண்டியது. அப்போதுதான் இராமவாக்கியத்துக்குப் பலனுண்டாகும். அந்தவாக்கியத்தை இப்படி ஸமர்த்தித்துத்தழுவுகையிலும், இராமர் சிவனைப்பூசிக்கின்றவர் என்னும் வாய்மைவிட்டொழிந்திலது. எப்படியோடியொதுங்கினும் சிவபூசை இராமரைவிடாது தொடர்கின்றமையால், அந்தவாக்கியத்துக்கு (இவ்விடத்தில் பூர்வம் மாதேவர் எனக்குப் பிரஸாதம்பண்ணினர்) என்று பொருளுரைத்தலேஅமைவுடைத்து. வேறொருத்தருக்குச் சிவன்பிரஸாதித்தாரென அவர்கூறின்மொழிக்கு ஆதாரமிலையாமையாலும், தனக்குப்பிரஸாதித்தா

ரான அவர்கூறினரென்பதற்குப் பாத்மமுங் கூர்மமும் ஸாக்ஷிகூறி க்கொண்டிருக்கின்றமையாலும், யுக்த்யநுபவங்களும் இதற்கே ஒத் திருக்கின்றமையாலும் நமது சாஸ்திரியாரது அர்த்தம் பண்டித சபையேறமாட்டாது மடிந்ததென்க.

இராமர் சிவபூசைசெய்தார் என்றுயாம்கூறுதலால்,இராமரு க்கு ஸேவகத்வமும்,சிவபெருமானுக்கு ஸேவ்யத்வமும், ஸித்திக்கின் றன. இதனால் இராமனைக்காட்டிலும் சிவன் உயர்ந்தவரும், சிவ னைக்காட்டிலும் இராமர் தாழ்ந்தவருமாகிய தாரதம்யமேவெளியாகி ன்றது. இராமனைக்காட்டிலுஞ் சிவன்உயர்ந்தவர் என்று சாதித்த லே எமதுகடமையாகையால், இராமாயணவசனத்தை நமதுசாஸ் திரியார் எப்படிப்புரட்டி அர்த்தஞ்செய்தாலும் எமதுபட்சம் கெ டாமல் நிலைநிற்பதைப்பார்த்து யாம் ஸந்தோஷிக்கின்றோம். அந்த வாக்கியத்தில் இராமர் சிவபெருமானைப் பிரஸ்தாபிக்கையில் (மகா தேவர்) என்று பிரஸ்தாபித்தார். அன்றியும், அவனைப் (பிரபு) என்று துதித்தார். அவ்வளவிலமையாது அவர் (பிரஸாதித்தார்) என்றுகூறினார். இராமர் மனுஷ்யரேயன்றி வேறில்லை. அவர் விஷ் ணுவினது அவதாரமாகையால் தேவரெனின், அவர் (மஹாதேவர்) எனச் சிவனைப்பிரஸ்தாபிக்கையால்,தேவராகியதமக்கும்,மற்றத்தே வர்கட்கும் அருளத்தக்க வாற்றலுடையவரென அவர் சிவனைமதித் திருக்கும் வாய்மைவெளிப்பட்டது. அன்றியும்,அவர் சிவனைப்பிரபு என்கையால், அவருக்குத் தாம் அடிமையென்பதுவெளியாகியது. அன்றியும், சிவன்பிரஸாதித்தாரென்கையால், அது அந்தப்பிரஸா தத்தைத் தாமெதிர்பார்க்கின்றவர் எனத் தெரிவிக்கின்றது. இவை களை யோசிக்கிறபோது இராமர்தாழ்ந்தவர், சிவன்உயர்ந்தவர் என் று யாருஞ்சாதிக்கலாமாகையால், இதனையுணராமல் உயர்ந்தவரா கிய சிவனைத் தாழ்ந்தவராகிய இராமர்பூசித்தாரென்பதில் சாஸ்திரி யார் துக்கப்பட்டது பரிதாபமென்க. சிவனைக்காட்டிலும் இரா மர் பெரியவராயிருக்கும்பட்சத்தில் சாஸ்திரியாருக்குத் துக்கமுண் டாகலாம். அங்ஙனமில்லாதபோது அவருக்குண்டாகிய துக்கத் திற்குக்காரணம் அவரது விசாரணையின்குறைவேயாம். தலைவன் அடிமையை (மஹான்) எனவும், (பிரபு) எனவும், (பிரஸாதித்தார்) எனவுங்கூறுதலமையுமோ? அடிமையேயன்றோ தலைவனை அவ்வா றெல்லாங்கூறி மகிழ்வன்? இவ்வுண்மையுணர்ந்தபேர் இராமர் சிவ னைப்பூசித்துச் சிவப்பிரஸாதத்தையடைந்தார் என்று பொருளுரை க்கப் பின்னிடுவார்களோ? ஒருபோதும் பின்னிடார்! பின்னிடார்!! இதனால் நமது சாஸ்திரியாரதுபிரலாபம் அவலமாகியதென்க.

இராமர் பிரஹ்மஹத்தி நிவிர்த்தியின்பொருட்டேயன்றி எப்போ துஞ் சிவனை ஆராதிக்கின்றவராகையால், (அத்ரபூர்வம்) என்னும் இராமவாக்கியம் இராமருக்குச் சிவபூசையை ஸ்தாபித்துவிட்ட தென்க. விரிக்கிற்பெருகும்.

இனி, நமதுசாஸ்திரியார் (இராமருக்கு ஹத்திவந்ததுமெய்யா கில் அதனையும், அதுதொலைய அவர் சிவபூசைசெய்ததையும் வான்மீகி ஏன்சொல்லவில்லை) என்றார். இராமாயணம் இராமரது பெருமையை விரிப்பது. அவரது பெருமைகூறவந்தமுனிவர் அவரது இழிவுகூறுதல்கூடாது. இழிவுயாதெனின், இராமர் இராவண வதாநந்தரம் சிவபூசைசெய்தாரெனின்,ஏன்செய்தாரென்னுங் கடா நிகழும். அதற்கு அவர் இராவணனைக்கொன்ற பாவந்தொலைக்க வென்று முத்தரமுண்டாம். இவ்வாறு விளக்குவது இராமருக்கு இகழேயன்றிப் புகழாகாமையின், இராவணவதாநந்தரம் இராமர் சிவபூசைசெய்ததை வால்மீகர் சொல்லாமல்விட்டனர். அவர் வாளாவிடுத்ததுகொண்டே இராமருக்குமகிமைசிறவாது. இராமர் சிவனைப்பூசிக்க வில்லையெனவாவது, அல்லது இராமனைச் சிவன்பூசித் தாரெனவாவது அம்முனிவேந்தர் எங்காவதுபடித்ததுண்டெனின், இராமருக்கு மகிமைசிறக்கும். அங்ஙனமின்மையால், சாஸ்திரியாரது பிரஸங்கம் நிஷ்பலமென்க. இதனால், ஹத்திநேர்ந்ததும் அது தொலையுமாறு அவர் சிவபூசைசெய்ததும் அம்முனிவரது ஹ்ருதயமாகாமற்போகாது. இவ்வுண்மைகளை விசாரியாமல் இராமர் சிவபூசை செய்ததை வான்மீகர் சொல்லவில்லையென்று சாஸ்திரியார் ஸந்தோஷித்தது அல்பஸந்தோஷமாயிற்று. இராமருக்குப் பிரஹ்மஹத்திப்பிராப்தியைக் கூறுவதில், வால்மீகர் கொஞ்சம் மரியாதைபாராட்டினரேயன்றி, அவருக்குச் சிவபூசையைக்கூறுவதில் பின்னிடைந்திலர். (அத்ரபூர்வம்) என்னுஞ் சுலோகத்திலிருக்குஞ் சிவாதிக்யத்தை அதிகமாக யாம் விளக்கிக்காட்டிநேமாகையால், இராமருக்கு வால்மீகர் சிவபூசையையொப்பவில்லையென்று பூர்வபட்சிகள் மனப்பால்குடிப்பது பெரும்பேதைமையேயாம். வால்மீகிபகவான் சிவாதிக்யந்தோன்றக்கூறிய வசனங்கள் பலவுள. அவற்றுள், (ஸ்ரீமதோ நீலகண்டஸ்ய) என்னும்வசனத்தில் இராமர் சிவபெருமானை (ஸ்ரீமத்) என்னுங் கௌரவவாசகத்தால் பிரஸ்தாபித்து, அச்சிவபிரானது திருவாணையைத் தாமும், மற்றையருங் கடக்கமுடியாத அருமையையெடுத்துப்பிரகாசப்படுத்தினர். அன்றியும், (க்ருதாபிஷேக:) என்னும்வசனத்தால் (பகவானும் ஈசுமானயாமேச்வரர் பார்வதி யாருடன் ஸ்நானஞ்செய்து நந்தியுடன்கூடி விளங்கியதுபோல்

இராமர் ஸீதையுடன் கோதாவரியில் ஸ்நானஞ்செய்து லட்சுமண ருடன் கூடிவிளங்கினார்) என்றுபெறப்படுகின்றது. இதில் இராம ருக்கு மகிமைமிகுக்கவேயன்றோ சிவனைவருவித்துக்கூறினார்? அன் றியும், ஸீதைக்குமகிமையுண்டாகப் பார்வதியாரையும், லட்சுமண ருக்கு மகிமையுண்டாக நந்திபகவானையும் அவர்வருவித்தலால், இராமர்முதலினோர் தாழ்ந்தவரும், சிவன்முதலாயினாருயர்ந்தவரு மாதல் அவரதுஹ்ருதயமாயிற்று. இராமாயணமாகிய பிரமாணத் திற்கு இராமர் பிரமேயமாய்நிற்றலால், எடுத்துக்கொண்ட பிரமேய த்திற்கேற்ப அவரிடம் வால்மீகர்கொஞ்சம் மரியாதைபாராட்டின ரெனவறிக. இவ்வுண்மைதேராது பலவாறுபேசுதல் பண்டித ரவைக்கட்பயன்பெறாதென்க. விரிக்கிற்பெருகும். இங்ஙனநிற்க.

இராமாயணத்தில் இராமர் சிவனைப்பூசித்தாரென்று கூறா மையால், அதற்குமாறாகக்கூறும் புராணங்களை யாமொப்போமென் றார். இராமாயணத்தில் இராமருக்குச் சிவபூசைகேட்கப்படவில்லை யென்றது நமதுசாஸ்திரியாரது விபரீதமேயன்றி வேறில்லை.. வால் மீகியினது ஹ்ருதயத்தை யாம் பரிஷ்கரித்து விளக்கினோமாகையா ல், இராமாயணத்திற்கும், புராணங்களுக்கும் விரோதமுண்டா காமை வெளிப்பட்டது. இராமாயணத்தில் இராமர் சிவபூசை செய்யவில்லையெனவும், புராணங்களில் இராமர் சிவபூசைசெய்தா ரெனவும் பெறப்படுமாயின், அவற்றினது விரோதங்களைப் பரியா லோசிக்கலாம். அங்ஙனமின்மையால், சாஸ்திரியாரது தெளிவின் மைக்கே துக்கிக்கவேண்டியது. நமதுசாஸ்திரியார் இராமாயணத் திற்குண்டாகிய யோக்கியதை புராணங்களுக்குக் கிடையாதென் னுங்கருத்துடன் அப்புராணங்களைத் தூஷித்தாராகையால், அதனை யுங்கொஞ்சம் யோசிப்பாம். இராமாயணத்தைநோக்கப் புராணம் தாழ்ந்ததென்னுங்கால், எல்லாப்புராணங்களுக்கும் தோஷமுண்டா கி இராமனது புகழைக்கூறும் விஷ்ணுபுராணங்களும் இழிவெய் தும். வைஷ்ணவபுராணங்கள் ஸாத்விகமென்பாராயின், சைவபுரா ணங்கள்ஸாத்விகம் என்னும்வாதம் நிகழும். நிர்விவாதசிரஸ்தமான ஆதாரவுகாட்டி வைஷ்ணவபுராணங்களைச் சாதித்தலன்றோ கனம் பெறும்? அங்ஙனமில்லாமையேயன்றோ நமதுசாஸ்திரியார் சிவ புராணமாகிய ஸ்காந்தத்தை அநாதரவுசெய்தது! அந்தஸ்காந்தம் சூதஸம்ஹிதைமுதலிய பகுதிகளையுடையது. அவற்றுள், சூதஸ ம்ஹிதையை எடுத்துப்பார்க்கவும் நமது சாஸ்திரியாருக்குத் திற மையுண்டா? குருடனுக்கு ஒளி பகையானாற்போலன்றோ அவர் அந்தச்சூதஸம்ஹிதையையும், அதின்மூலமாகிய ஸ்காந்தத்தையும்,

அதற்கினமாகிய மற்றைப்புராணங்களையுந் தூஷிக்கவெளிவந்தனர்?
இராமாயணம் வெறுங்கதையாகையால், கதைசொல்லுவதில் சாஸ்
திரியார் ஸிம்ஹந்தான். ஸ்காந்தத்தில் கதாபாகங்கொஞ்சமும், தத்
வநிர்ணயபாகம் அதிகமுமாகையால், அவருக்கு வாய்குமட்டியது
போலும். அதனால், அவர் ஸ்காந்தாதிகளைத் தூஷிப்பது அவருக்கு
ஸஹஜதர்மந்தான்.

அவர் இவ்வளவிலமையாது வேறுவிதத்தாலும் இராமாயண
த்திற்கு மகிமைகூறினர் என்னெனின், இராமாயணம் ஆதிகாவிய
மெனவும், புராணங்கள் வியாஸரால் பின்னருண்டாயினவெனவும்,
அதனால் புராணங்களைநோக்க இராமாயணமே உயர்ந்ததெனவும்ஸந்
தோஷித்ததேயாம். புராணங்கள் (சதகோடிப்பிரவிஸ்தரம்) என
வும், துவாபரயுகந்தோறும் அதனைவியாஸர் நாலுலட்சங்கிரந்தமா
கத் தொகுக்கின்றனரெனவும் உண்மைநூல்கள் கூறுகையால், இ
ராமாயணத்திற்குப் பிந்தியவை புராணங்களென்றது தெரியாமை
யேயாம். அன்றியும், வியாஸரால்செய்யப்பட்ட பிந்தியநூலாகிய
பிரஹ்மஸூத்திரத்தின்முன்னர் இராமாயணத்தை யொருபொரு
ளென வேதாந்தவித்யாபாரங்கசிலர் மதியாராகையால், நமதுசாஸ்
திரியார் இராமாயணத்திற்கேற்றிய கௌரவம் இறங்கிவிட்டது.
புராணத்தைத்தாழ்த்தி இராமாயணத்தையுயர்த்தி நம்மவர் ஸந்தோ
ஷித்துவிட்டதனாலேயே அந்தஸந்தோஷம் ஸந்தோஷமாய்விட
மாட்டாது. நமதுசாஸ்திரியார் இராமாயணத்திற்குக்கற்பித்தவுயர்வு
புராணங்களைநோக்கியேயன்றிச் சுருதிஸ்மிருதிகளை நோக்கியன்றா
கையால், அந்தச்சுருத்யாதிகளைநோக்க இராமாயணத்தினுயர்வு
விபசரித்துவிட்டது. உயர்ந்தபொருள் எப்போதுந் தனதுநிலை
கெடாது நிற்றலவசியம். சுருதிஸ்மிருதிகளுக்குமுன்னர் இழிந்து
போகும் இராமாயணம் விபசாரதோஷம்பெறாதது யாங்ஙனம்?
(உயர்வு) என்னுஞ்சொல் இராமாயணத்தின்றலையினின்றுமிறங்கி
வேதத்தின்காலிற்போயடைகின்றமையால், இராமாயணம் உயர்
ந்தது, ஸ்காந்தம் தாழ்ந்தது என்றுகொண்டாடியது நிண்டாடியதா
யிற்று. நமதுசாஸ்திரியார்தூஷித்த புராணத்தின் கதியை அவர
இராமாயணமும் அடைந்தமையால், இனி அவருக்குத் துக்கமன்
றிச் சுகமுண்டாவது கஷ்டமென்க.

இதுகாறும் சாஸ்திரியாரது [illegible]த்தை[illegible]த்துப்
[illegible]ன்றோம். இனி எமது[illegible]த்தை[illegible] கொஞ்ச
கூறுகின்றோம். வேதம் முதனூல், புராணம் வழிநூல், இராம

யணம் சார்புநூல். முதனூல் உயர்ந்ததும், வழிநூல் அதனிற்றாழ்ந்ததும், சார்புநூல் அதனினுந்தாழ்ந்ததுமாம். இதற்கு விரோதமாகச் சார்புநூலாகிய இராமாயணத்தை வழிநூலாகிய புராணங்களைக் காட்டிலுமுயர்ந்ததெனல் யாங்ஙனம்? அங்ஙனமாயின், முதனூலாகிய வேதத்தைக்காட்டிலும் வழிநூலாகிய புராணம் உயர்ந்ததெனவன்றோ துணியப்படும்.? நம்மவர் புராணத்தைத் தூஷிக்கத் தலைப்பட்டு, அதற்காதிக்கங்கற்பித்தவராயினர். அதனால், அவரது விசாரம் பெருங்குழப்பமென்க. இனி யாமொன்று கூறுகின்றோம். இராமாயணம் இராமரதுகதை. பாரதம் தருமரதுகதை. உலகில் இராமாயணம், பாரதம் என்னும் இரண்டையும் வாசித்துவருகின்றார்கள். பாரதத்தில் தருமருடையகதையை வாசிப்பவர்கள் அத்தருமரைத் தெய்வமெனத்துணிவதுண்டா? அதனோடுசேர்ந்த இராமாயணத்தில் இராமர்கதையை வாசிப்பவர்கள் அவ்விராமரைமாத்திரம் தெய்வமெனத்துணிதல் யாங்ஙனம்? தருமர்-இராமர் என்பவர்கள் ஸமானயோக்யர்களாகையால், அவர்களது சரிதங்களைப் போதிக்கும் பாரதராமாயணங்கள் நீதிகளைத்தெரிவித்து உபகரிக்குமென்க. அவைகளிற்பெறப்படுஞ் சிவவிஷ்ணுக்களுடையவுபாஸனைகள் (தருமர்-இராமர்) முதலினோர் அனுசரித்ததென்க. இராமாயணத்தில் எங்காவது இராமரை இருடியர்வணங்கினார்கள் என்று கூறப்பட்டிருக்கின்றதா? இராமரேயன்றோ சிவனடியார்களாகிய அவ்விருடியரை வணங்கினரென்று பலவிடங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது? இந்தவுண்மையேயன்றோ தருமரிடத்திலுஞ் சிறக்கும்? இவ்வுளவறிந்தபேர் தருமரோடுசேர்த்து இராமரையுந் தெய்வமன்றெனவொதுக்குவரேயன்றிஅவரைத் தெய்வமாகமதியாரென்க. அவர் தெய்வமாகாமையால், அவரது சரிதையாகிய இராமாயணத்தைத் தெய்வத்தின்மகிமையுணர்த்தப்போந்த புராணங்களுக்கதிகமாகப் பூர்வபட்சியாரொப்பியது தப்பிதமாய் முடிந்தது.

இனி, இராமர் விஷ்ணுவினது அவதாரமாகையால் தெய்வமாவரெனின், தருமர் இயமனது அவதாரமாகையால்,அவருந் தெய்வமாயினர். (ஸர்வேதேவா:பசதாமவாபு:) என்கிற சுருதியால் எல்லாத்தேவர்க்களும் பசுக்களாயிடுதல்கேட்கப்படுகையாலும் (ப்ரஹ்மவிஷ்ணுஸுரேந்த்ராத்யை:, ப்சவ:பரிகீர்த்திதா:) என்னும் ஆதித்யபுராணவசனம் விஷ்ணுவை எல்லாத்தேவரோடுஞ்சேர்த்துப்பசுவென்று காட்[illegible]யாலும் தருமராகியபசுவுக்கும், இராமராகியப்பசுவுக்கும் ஒரு பதமுமில்லையென்றறிக. இத்தப்பசுக்களை அடக்கி

யர்ளுந்தலைமையைநோக்கியே (ஸ்வதச்சிவஃபசுபதி;) எனவும், (ஸ்வயம்தஸ்மாத்பசுபதிஸ்ஸம்பபூவ) எனவும், (தஸ்மாத்ருத்ர: பசூநாமதிபதி:) எனவும் வேதங்கள் சிவனைக்கூறின. அன்றியும், நாராயணனைத் தியாதாவெனவும், சிவனைத் தியேயனெனவும், நாராயணரது ஹிருதயத்தில் பரமாத்மா வசிக்கின்றானெனவும், அந்தப்பரமாத்மா (ஈச - ருத்ர - மஹேசுவர - ஊர்த்வரேத - விரூபாக்ஷ) நாமங்களால் வெளிப்படுகின்றானெனவும் வேதங்கள் இனிது பிரகாசிப்பித்தலறியாது நமதுசாஸ்திரியார் தசரதன்சேயாகிய இராமருக்குப்பரத்துவங்கல்பிக்கவந்தது அவர்வேதமிருந்தவூரிற் குடியிருந்தறியாத அவைதிகராதலை வியக்தமாக்கியது. நாராயணனைத் (தியாதா) என்று சுருதிகூறுகையால், அவரது அவதாரமாகிய இராமருந் (தியாதா) ஆவரேயன்றி வேறில்லை. அவர் (தியேயர்) ஆகிய சிவனைப்பூசித்தல் வேதத்தின் ஸம்மதம். இதனை வேதமறியாத சூத்திரபிராயர்களே மறுக்கத்தக்கவர்கள். இவ்வுண்மைகளை இனியேனும் நமதுசாஸ்திரியார் ஊன்றிவிசாரித்து க்ஷேமப்படுவாராக. இனி, இராமர் தெய்வமன்று. அவர் ஸாமான்யமாகிய ஓர் ஜீவனே யென்பதை வேறுநியாயத்தாலும் பிரகாசப்படுத்துகிறோம். பாரதம் ஸபாபர்வத்தில், (தஸ்யாம்ராஜர்ஷய:) என்னும் வசனத்தால் எமதர்மராஜன்சபையில் சுத்தராயும், புண்ணிய சொரூபராயுமிருக்கின்ற தேவரிஷிகள், ராஜரிஷிகள் முதலினோர் வைவஸ்வதன் என்னும் அந்த எமதர்மராஜனை ஸந்தோஷத்துடன் உபாசித்துக்கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் (யயாதி-நகுஷன் - புரூரவன் - மாந்தாதா-ஸோமன்-இராமன்-லட்சுமணன்-பிரதர்த்தன்) முதலினோர் என்று பெறப்படுகிறது. இதில் இராமர் ஜீவகோடிகளிற் படிக்கப்பட்டார்; இயமனையுபாசித்துக்கொண்டிருந்த இராமர் சிவனையுபாஸித்தார் என்றுல் துக்கங்கொண்டாடிய சாஸ்திரியார்தன்மை வியக்கற்பாலதே. இராமரைப்போலவே கிருஷ்ணருஞ் சீவனேயென்பதை நிரூபிக்கின்றோம். கிருஷ்ணர் அர்ச்சுனனைப்பார்த்து (ததச்சார்ங்கம் தநுச்ரேஷ்டம்) என்னும்வசனத்தால் "வராய்அர்ஜுனு! அதற்குப்பின்பு என்னுடையகையிலிருந்த சார்ங்கம் என்னும்வில்லானது நழுகி விழுந்துவிட்டது. அப்போது மூர்ச்சையடைந்தவனாகி நான் தேரினது அடித்தட்டிலே போய்விழுந்தேன்" என்று சாலுவயுத்தத்தில் தானடைந்தகதியைச் சொல்லிக்கொண்டதை ஆரண்யபர்வத்தில் வெளிப்படுத்தியிருக்கின்றது. அன்றியும், அந்தக்கிருஷ்ணர் ஓர் வேடனது அம்பால்இறந்தார். அனந்தரம் அவருக்கு அர்ஜுனனால் பிரேதகிருத்யங்கள் நடத்தப்பட்டன. இந்தக்கிருஷ்ணருடைய உயிரை

வாங்கியவேடன் பூர்வஜந்மத்தில் வாலியாகியகுரங்காகையால் அப்போது செடிமறைவிலிருந்து தன்னுயிரைவாங்கிய இராமனை யேயன்றோ அவர் கிருஷ்ணராய்வரப்பார்த்துப் பழிக்குப் பழிவாங்கிக்கொண்டான்? இராமருக்கு வாலியைக்கொன்றபோது வானசுக்ரீவர்களுடைய அடையாளந்தெரியாமற் போயினமையாலும் வாலியை நேர்நின்றுகொல்லும் ஸாமர்த்தியம்போதாமையாலும் அப்படியே கிருஷ்ணருக்குத் துர்வாசருடையசாபத்தைக் கடக்கமுடியாமற்போயினமையாலும், வேடன் சரந்தொடுத்தது தெரியாமற்போயினமையாலும், துர்மரணமடைந்தமையாலும் இரண்டுபேரும்சேதனவர்க்கத்தில் படிக்கப்பட்டனர். இவ்வுண்மைகளையோசித்தவர்கள் இராமரிடத்தில் ஜீவைகதேசதர்மத்தை இனிது துணிவார்களாகையால், (இராமனைச் சீவனென்றுகூறுமவர்கள் சண்டாளர்கள்) என்று நமதுசாஸ்திரியார் தமதுபிரஸங்கத்திற் பிரஸ்தாபித்ததைக்கேட்டுச் சிரிப்பார்களென்க. இராமனையும், கிருஷ்ணனையும் ஜீவர்களென்று பிரஸ்தாபித்தவர் வியாஸரேயாகையால், அந்தமஹர்ஷியையே அவர் தூஷித்தவராயினர். சாஸ்திரதர்மந்தெரியாமல் அந்தச்சாஸ்திரத்தையும், அதனைச்செய்தருளியமுனிவரையுந் தூஷித்தவர்க்கே சண்டாளத்தன்மை பிராப்தமாவதுஸித்தம். இதற்குப்பரிகாரந்தேடி நமது சாஸ்திரியார் குணப்படுவாராக. இவ்வுண்மைகளை இனிதுவிசாரியாமல் இராமனையும், இராமாயணத்தையும் அளவுக்கதிகமாக எண்ணிக்கொண்டு அவர்மனஸ்தாபத்தைத் தேடிக்கொண்டது பரிதாபமென்க.

இனிச்சுருதிக்கும் ஸ்மிருதிக்கும் விரோதமுண்டாகில் ஸ்மிருதியைத்தள்ளிச் சுருதியைக்கொள்ளவேண்டியது என்று மீமாம்ஸாசாஸ்திரம் எல்லைகூறுகின்றது. சுருதிகள் பெரியஇருடியாகிய சிவனுரைத்த திருவாக்கும், ஸ்மிருதிகள் இருடியரது திருவாக்குகளுமாகையால், மேற்போந்த எல்லை அமைவுடைத்தே. புராணங்களை நோக்க இராமாயணம் உயர்ந்தது என்பதற்கு இவ்வாறு எல்லை கற்பிக்கப்பட்டிருக்கின்றதா? எல்லைகற்பிக்கும் ஓர்விதியும் போதாமையின், புராணங்களைநோக்க இராமாயணமுயர்ந்ததென லமைவுடைத்தன்று. இராமாயணம் என்று ஈண்டு நமதுசாஸ்திரியார் துதிப்பது வான்மீகத்தையேயாம். அத்யாத்மராமாயணம், போதாயனராமாயணம், வாசிட்டராமாயணம் என்பனவாதி வேறு இராமாயணங்களுங்கேட்கப்படுகையால், யாம் அவைகளையும் ஈண்டுவிசாரிப்பாம். இவ்விராமாயணங்கள் இராமரது சிவபூஜையை வியக்தமாகக் கூறுவதால், இவைகளைச் சாஸ்திரியார் விரோதிக்க நியாய

யில்லை. இவை வான்மீகத்துக்கு முந்தியவையாயினும், பிந்திய வையாயினும் எடுத்துக்கொண்ட பிரமேயத்தில் அதனோடு விரோதங்கொள்ளாமையினால், யாவும் ஏகதாத்பரியத்திலேயே பரிவஸானத்தை யடையும். இராமரது புகழை விரிக்கவேயெழுந்த அவை தன் அவ்விராமருக்குச் சிவபூசை இழிவைத்தருமாயின், அதனை யெடுத்திசைத்தல் என்னை? தேவியார் சிவபூசைசெய்தார் முருகக் கடவுள் சிவபூசைசெய்தார் என்பனபோலவன்றோ, இராமர் சிவ பூசைசெய்தார் எனலும் அமையும்? சிவபூசைசெய்தார்களென் கையில், தேவியாருக்கும் ஸ்கந்தருக்குமே அது புகழையுண்டாக்குமாயின், இராமருக்குப புகழையுண்டாக்குமென்பது அதிசயமா? இராமர் சிவபூசைசெய்தது அவருக்குப்புகழேயன்றி இகழாகமாட்டாது. போதாயனர் முதலினோர் (இராமாயணம்) தனித்தனிக்கூறப்புகுந்தது இராமரிடம்வைத்த அன்புகாரணமேயன்றித் துவேஷங்காரணமன்று, அன்புகாரணமாக இராமரைப்புகழவந்தவர்கள் அவரை இகழ்வது யாங்ஙனம்? ஓர்போதும் இகழாராகையால், அன்னோர் இராமருக்குக்கூறிய சிவபூசை அவரது புகழாகவே முடிந்தது. இராமரது மகிமையை விளக்கவெளிவந்த இருடியரை நோக்க நமதுசாஸ்திரியார் இராமரிடத்தில் எவ்வளவு அன்புடையவர்? பெருந்தவர்களாகிய அவர்களது ஹ்ருதயத்தை இனிதாய்ந்து இனியேனும் நமதுசாஸ்திரியார் அடங்கிவாழ்வாராக. இப்படி வியவஸ்தையுண்டாக விசாரித்தவர்கள் (இராமர்சிவபூசைசெய்ததை) விரோதியார்களாகையால், அவர்கள் ஸந்தோஷிக்குமாறு ஈண்டுச் சிலவசனங்களைச் சூசித்து விளக்குகின்றோம்.

ஆதித்யபுராணத்தில் (ப்ரதிஷ்டாப்ய மஹாதேவம்) என்னும்வசனத்தால் ஸேதுமத்தியில் மஹாதேவனை ஸ்ரீராமர் பிரதிஷ்டித்து, சம்புவாகிய அச்சிவனுடைய அநுக்கிரஹத்தினாலேயே மேலானபக்தியை அடைந்தாரென்றும், அதனால், இராமேசுவரர் என்னும் பிரஸித்தநாமத்தையடைந்திருக்கும் மஹாதேவரும், பிநாகதாரியுமாகிய அவ்விலிங்கமூர்த்தியைத் தரிசித்தமாத்திரத்தில் பிரஹ்மஹத்யாதிதோஷங்களை அவர் போக்கிவிடுகின்றார் என்றும்பெறப்பட்டது. பராசரபுராணத்தில் "ஸேதுமத்யே மஹாதீர்த்தே" என்னும்வசனத்தால் கந்தமாதனபர்வதத்தின்கண் தீர்த்தக்கரையாகிய ஸேதுமத்தியில் கல்யாணமூர்த்தியும், தசரதபுத்திரரும், பிரபுவுமாகிய இராமர் மூர்க்கனாகிய இராவணனைக் கொன்றுவிட்ட பாபத்தைப் போக்கிக்கொள்ளும்பொருட்டுத் தேவகாயராகிய சிவலிங்கமூர்த்தியைத் தன்னுடையநாமம்விளங்குமாறு (இராமலிங்கம்)

என்றுபேரிட்டுத் தாபித்தனர்என்று வெளிப்பட்டது. இந்தப் பிரமாணங்களால் (இராமேசுவரம் = இராமலிங்கம்) என்னும் தல வழக்கும், பெயர்வழக்கும் நிலைத்தன. இவைகளைச் சுத்தபொய் என்று வாயினாற்சொல்லிவிட்டதனாலேயே இல்லாமற்போயின வாக நம்மவர்ஸந்தோஷித்தது அறிவின்மயக்கமேயாம். பிரத்யக்ஷம், அநுமாநம், ஆகமம் என்னும் சுருதியுக்தியநுபவங்களால் (இராமர்சிவபூசைசெய்தது) நிலைபெறுமியன்மையாலும், (பக்த்யாநம் ரதநோவிஷ்ணோ:-ப்ரஸாத மகரோச்சிவ:) என்று பிரதிஷ்டாபித்து விஷ்ணுவுக்குச் சிவன் பிரஸாதித்தருளினாரென்று சுருதியானது ஸ்தாபித்துவிட்டமையாலும் எமதுபட்சம் பசுமரத்தாணியறைந் தாற்போல காட்டப்பட்டது. இந்தச்சுருதியில் வான்மீகிபகவான் இராமரிடத்தில் வினியோகித்த (பிரஸாதமகரோத்) என்னும் பிரயோகம் நிலைத்தலால், இந்தச்சுருதியிற்போந்த (விஷ்ணு) சப்தம் இராமரையே விளக்கியதென்றறிக. இவ்வுண்மையைச் சிவாதித்ய ரத்நாவளி, சைவசூளாமணி, கூரேசவிஜயபங்கம் இத்யாதி கிரந்தங்களாலும் விசாரித்து ஸாதுக்கள்ஸந்தோஷித்துத் திருவருளைப்பெற்று வாழ்வாராக. சுபம்.''

இந்தப்பத்திரிகையை நிகழும் ஸர்வதாரிஞு ஆடிமீ ௫ உ யில் சென்னை முத்தியாலுப்பேட்டை ஸ்ரீமல்லிகேசுவரஸ்வாமிஸந்நிதியில் இரண்டாயிரம் பிரஜைகள்சூழவிருந்து நாயகரவர்கள் பிரஸங்கஞ்செய்துமுடித்தார்கள். அப்போது அந்தமஹாஸபை நிஸ்தரங்கஸமுத்திரம்போலிருந்தது. யாவரும் ஆநந்தமடைந்தார்கள். இங்ஙனமிற்க.

இதற்குப் போலிமறுப்பொன்று (இராமதத்வதீபிகை) என்னும்பேரால் சிற்றூத்துக்காடு சீனிவாஸாசாரி என்பவர் பின்னர் வெளியிட்டனர். அதில், அதனையெழுதியபண்டிதர் எமது நாயகரை (சைவப்பழம்) எனச்சுட்டிப் பரிகாசங்கூறினார். அன்றியும், தேவதாநிந்தையையாவது, பண்டிதநிந்தையையாவது, தம்மைப்புகழ்ந்துகொள்ளுந் தன்மையையாவது யாம்செலுத்தோம் என்று தமதுயோக்யதையை யெடுத்துப்பேசினர். நிந்தைவழியி னில்லாத நமதுஅன்பர் (சைவப்பழம்) என்று நாயகரவர்களைப் பரிகசித்ததென்னையோ? மீண்டும், அவர் (உறுமுவதை)க் கேட்டறியவாமென்று மல்லிகேசுவரர்ஆலயத்தில்வந்தேன் என்று இவர்கத்தியதென்னையோ? இவ்வாறு இவர்புலம்பியனபல. அவற்றை யாம்கவனியாது இராமரைச்சிவபூசையினின்றும் இவர்தப்பவைத்த பட்சத்தைமாத்திரம் நன்கு விசாரித்து இவரதுயோக்யதையை இனிது வெளிப்படுத்துவாம்.

# நூல்

நமது இராமதத்வதயகைக்காரர் (பிரஹ்மமென்பது சிவனா? நாராயணனா?) என்பதாமுதலிய சில கேள்விகள் பிறப்பித்தார். இராமர் சிவபூசைசெய்யவில்லை என்பதற்கு அவை ஸாதகமாகமாட்டா. மற்றொன்றுவிரித்தல் என்னுங் குற்றத்தின் முதிலையைவிட்டார். ஆயினும், அவரது கள்ளவழியையழித்து நிர்மூலப்படுத்தி, இராஜபாட்டையை யாவருக்குங்காட்டி ஸாதுக்கள் அந்தமார்க்கத்திலேயே ஸஞ்சரித்து ஸுகிக்கத்தக்கவுபாயத்தைத் தேடுவோம்.

இவர் பிரஹ்மம் என்னும்பதம் பொதுப்பெயரென்றார். இது மஹோபநிஷத்துமுதலாகிய உபநிஷத்துக்களில் நாராயணபதத்தாற்போதரும் ஸ்ரீகாந்தனையே சொல்லுகிறது என்றார். நாராயணநாமம் மற்றொருபொருளில் பிரயோகிக்கத்தகாதது என்றார். அன்றியும், பதஞ்சலிபகவான் நாராயணநாமம் திருமகள்கொழுநனுக்குரியது என்று மஹாபாஷ்யத்தில் முறையிட்டனரென்றார். இதனை மற்றொருதெய்வத்தின்றலையி லேற்றுவார்க்கு (ணகாரம்) விரோதமென்றார். புரோவாதவாக்கியங்கள் சுபாலோபநிஷத்துமுதலானவைகள் என்றார். அன்றியும், அந்தப்பிரஹ்மசப்தத்தை உபநிஷத்துக்களிற் சிவசம்புருத்ராதிநாமங்களாற்போதரும் உமாகாந்தனிடத்திற் சேர்க்க நினைப்பது அஸாத்தியம் என்றார். அதற்கு அச்சிவாதிநாமங்கள் விதிவாக்கியத்திலில்லாமல் விதித்ததை அநுவதிக்கும் அநுவாதவாக்கியங்களிலிருக்கின்றமையே காரணம் என்றார். இம்மட்டோ, நாராயணனுடையமேன்மை புரோவாதத்தில் முறையிடுகிறது என்றார். அமரகோசாதிகளிலும், விஷ்ணுஸஹஸ்ரநாமத்திலும் சிவாதிநாமங்கள் நாராயணனிடத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றனவென்றார். சிவாதிபதங்கள் மங்களம்முதலான அர்த்தங்களைக் கொண்டிருக்கின்றனவென்றார். அதனால், அச்சிவாதிபதங்களைக்கொண்டு சிவனைப்பிரஹ்மம் என்றுசொல்வதுந் தகாதுஎன்றார்.

இனி இவரதுஅகந்தையும், ஆசையுமிரியச் சிலவிண்டுரைக்கின்றோம். இவர் பொதுப்பெயரெனத்துணிந்த பிரஹ்மபதம் அங்ஙனமாகாது. "ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம" என்று வேதங் கூறுகின்றது; அப்படியேயன்றோ "ஸர்வோஹ்யேஷருத்ர:" என அவ்வேதங்கூறியது? ஈண்டுப் பிரஹ்மருத்ரசப்தங்களொருபொருளையேகுறித்தலால், அப்பொருள் சிவமென்பதே ஸித்தம். அன்றியும், "ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்ம" எனவும், "ஏகஏவருத்ரோநத்விதீயாயதஸ்தே" எனவுஞ் சுருதிகள்முழங்கின. இச்சு

திகளிரண்டும் ஒருரோதன்மையவாகி நிலேத்தன. "ஏகோஹவை நாராயண ஆஸீத்" என்னுஞ்சுருதி மேலிரண்டுசுருதிகளிற்போற் தவாறு எல்லாபபதங்களேயுங் கொண்டமைந்தில. ஆதலால், நாராயணநாமம் அவற்ருேடிணப்பட்டாது ஒதுங்கிப்போய்விட்டது. இம்மட்டோ, பஞ்சப்ரமஹோபநிஷத்து "துரீயம்ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம்" எனவெழுந்து சிவன் பிரஹ்மமென்னும் பெயருடையவர்எனத் தாபித்துவிட்டது. அன்றியும், பஞ்சப்ரஹ்மோபநிஷத் து என ஒருபநிஷத்தும், பஞ்சப்ரஹ்மமந்திரம் என ஓர்மந்திரமும், பஞ்சப்ரஹ்மம் என ஓர் பரவஸ்துவுங் கேட்கப்படுதல் ஸித்தம். ஈசாநம்-தத்புருஷம் - அகோரம்-வாமம்-ஸத்யோஜாதம் என்பவைகளேப் பிரதிபாதிப்பனவே அவை. இவை சிவனுரது பஞ்சவக்த்ரஸ்வரூபமாகையால், அச்சிவபரஞ்சுடரோயன்ருே பஞ்சப்ரம்ஹமம் என்னுந் திவ்யநாமத்தால் விளங்குகின்றது ? அன்றியும், பாசுபதப்ர்ஹமோபநிஷத்தென வோருபநிஷத்துக் கேட்கப்படுகின்றது. இந்தப்பிரஸிதியால் பிரஹ்மசப்தம் சிவனுருக்கே சொந்தமெனல் நிராக்ஷேபம். சிவனுரதுசக்தியைப் பிராஹ்மீ என்று வைதிகநூல்கள் அழைக்கின்றன. அவர் பிரஹ்மத்தினது சக்தியாதலேக்கியே அதுசிறந்திடும் பிரமக்கிழத்தி என்று தமிழ்நிகண்டுவிற் கூறியவாறும் அறிந்திடுக இதனுல், பிரஹ்மம்என்னும்பதம் பொதுப்பெயரெனலழிந்து சிவனுருக்கே சிறப்புப்பெயராகவமைந்தது. இதனேயோராது பிறந்திருந்துழலும் க்ஷுத்ரதேவதையாகியநாராயணனைப் பிரஹ்மமென்று சாதிக்க ஙமதுஜய்ங்கார்ஆசைப்பட்டது கள்ளிக்கொம்புக்கு வெள்ளிப்பூண்கட்டப்பார்த்ததுபோலாம். இவற்றைப் பரியாலோசிக்கும் விவேகிகள் பிரஹ்மோபநிஷத்து, பரப்ரஹ்மோபநிஷத்து, பிரஹ்மவித்யோபநிஷத்துமுதலிய நாமங்களாற்போதரு முபநிஷத்துக்களினுண்மையையு முணர்ந் தின்புறுவார்கள். பிரஹ்மமென்பதுபொதுப்பெயராயின்,பிரஹ்மோபநிஷத்து என்னும்பிரஸ்தாபத்துக்கே இடமுண்டாகாது. இனிய பழம்என்பது பொதுப்பெயர். இது வாழைமா-பலாமுதலியவிசேடங்களேத் தொடர்ந்தோய்பதம். எங்ஙனமெனின், வாழைத்தோட்டத்திலிருந்துகொண்டு ஒருவன் பழம்அறுத்துக்கொண்டுவாவென்ருல்அந்தப்பழம்வாழைப்பழத்தையேகுறிக்கும்.முந்திரித்தோப்பிலேயிருந்து பழங்கொண்டுவாவென்ருல், அது வாழைப்பழமாகாது. முந்திரிப்பழமேஆகும். பழம் என்கிற ஸாமானியபதம் வாழை-பலா-முந்திரி முதலிய பலவிசேடங்களேத்தொடருமேயன்றி வாழையையே தொடர்ந்தோமெனல்கூடாது. இந்தவுபமானவிஷயத்தால் நாராயணனேப் பிரதிபாதிக்குமுபநிஷத்திற்போதரும் பி.

——————————காலநமதாண்டிகருக்குஉபகாரத்தைச்செய்யுமேயன்றிச் சிவனையும், ஏனையதேவர்களையும்பிரதிபாதிக்குமுபநிஷத்துக்களிற்போதரும் பிரஹ்மபதம் அவருக்குஉபகாரத்தைச்செய்யமாட்டாது. எனவே, பிரஹ்மபதம் நாராயணருக்கேயன்றித் தேவதாந்தரங்களுக்குப் பிரயோஜநப்படாதென்றும், நாராயணரொருவர்தான் பிரஹ்மம் என்றுஞ் சொப்பனங்கண்ட நமதுஐயங்கார் காவிடறிப்போகலுனஞ்செய்ததென்க. இந்தவியவஸ்தையால், பிரஹ்மபதம் பொதுவாசகமெனலழிந்து சிவசப்தத்திற்குப் பரியாயவாசகமென யாம்கூறியதே ஸித்தாந்தமாயிற்று. பிரஹ்மோபநிஷத்தில் பிரஹ்ம - விஷ்ணு - ருத்திரர்களைக்கடந்த நாலாவதுபொருள் பிரஹ்மமென்றுசொல்லப்படுகின்றது. அதர்வசிகையில் நாலாவதுபொருள் சம்புஎன்று சொல்லப்படுகின்றது. இராமதாபினியில் நாலாவதுபொருள் சிவம் என்று சொல்லப்படுகின்றது. நிருஸிம்ஹதாபினியில் நாலாவதுபொருள் சங்கர-நீலலோஹித-பிநாகி முதலிய நாமங்களையுடையது என்று சொல்லப்படுகின்றது. இப்படியே எல்லாவுபநிஷத்துக்களுங் கூறுகின்றன. விஷ்ணுவைக்கூறவெழுந்த வுபநிஷத்துக்களும் அவ்விஷ்ணுவை நாலாவதாகக்கூறாமல் சிவனையே நாலாவதாகக் கூறின. நாலாவதுபொருள் பிரஹ்ம-சிவ-சம்பு-சங்கர-நீலலோஹிதாதி சப்தங்களால் வெளியாகிறதேயன்றி நாராயண கேசவ கோவிந்தாதி சப்தங்களால் எந்தவுபநிஷத்திலும் வெளியாயினதில்லை. இவைகளுக்குத் தக்கததேடாமல் நம்மவர்வகுக்குந்தப்பு அவர்போல்வார்க்கே ஒப்பென்க. துரீயசிவன் உளனென்னுஞ் சைவாதுகொள்கை தவறென்று இந்தஐயங்கார் பின்புசாதிக்கப் போகிறாராம். இவருக்கு இலக்குவைத்து எதிர்பார்த்துக்கொண்டு எங்களது பாசுபதாஸ்திரம் எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றது. ஆகையால், இவரதுவிபரீதப்பிரசாரத்திற்கு ஸாதுக்களஞ்சவேண்டிய அவசியமில்லை. இவ்வுண்மைகளால், நாலாவதுபொருளுண்டென்றுகூறுஞ் சுருதிகளுக்கு அழுழுஞ்சிஅர்த்தங்களைக்கூறிக்கொண்டு இரண்டாவதுபொருளாகிய விஷ்ணுவாகியபசுவைப் பிரஹ்மமென்று சொப்பனங்கண்டுகொண்டிருக்கும் சிற்றூத்துக்காட்டாரது வைபவம் சிரிப்புண்டுபோயதென்க. "ஸர்வோஹ்யேஷருத்ர:" என்றசுருதியின்படி ஸர்வமும்பிரஹ்மம் ஆயினமையால், விஷ்ணுவாதி ஸகலதேவதைகளையும் பிரஹ்மமென்று வேதம்உபசரித்தவாறறிக. அவர்களைப் பிரஹ்மமென்றது உபசாரமேயன்றி உண்மையன்று: பிரஹ்மமொன்றே! அதுசிவமொன்றே! "ஆம்பிரவியுமொன்றே யனைத்துயிர்க்கு - மாயுங்காலொன்றேசிவம்" என்றார் பெரியோரும். இது "ஸசிவஏகோதேவ:" என்னுஞ் சுருதிஸித்தமாயுள்ளது. விரி

இனி அவர் நாராயணநாமம் மற்றொருபொருளில் பிரயோகிக்கத்தகாதது என்றார். நாராயணி என்னுநாமமும் அவர்கூற்றையே நழுவிநிலைக்கும். இரண்டும் ஸமநிலையினிற்றலால் நமதன்பர் தேடிக்கொண்ட நியாயம் விபரீதத்தது. சிவசக்தியாகிய நாராயணிகொண்ட புருஷகோலத்திற்கே நாராயணன் என்னும்பேர் சிறந்தது. "போகேபவானீ புருஷேசவிஷ்ணுஃ - க்ரோதேசகாளீ சமரேசதுர்க்கா" என்னும் வசனபரியாலோசனையால் அதுவிளங்கும். நாராயணியினது புருஷாவதாரம் நாராயணன். நமதன்பரது தெய்வமாகிய நாராயணன் அமிசியாகாமல் அமிசமாயினமையால், நாராயணனதுபரத்வம் நழுவிப்போய்விட்டது. இதனால், நாராயணபரத்வவாசகசுருதியனைத்துஞ் சக்திபரமென்பதேஸித்தம். "வாஸுதேவஃபராப்ரக்ருதிஃ" என்றசுருதியும் விஷ்ணுவானவர் பிரகிருதிரூபிணியாகிய சிவசக்தியென்பதை வியக்தமாக்கியது. இதனையோசியாது விஷ்ணுவைஸ்திரியென்பது சுருதிமூலகத்வமில்லாதது என்றுகொஞ்சியுரைக்கும் நமதுஅன்பரதுபஞ்சவுரைக்கு இனி எங்ஙனே கதியுண்டாகும்? இதுநிற்க.

நமதுபண்டிதர் நாராயணநாமம் திருமகள்கொழுநனுக்குரியது என்று மஹாபாஷ்யத்தில் பதஞ்சலிபகவான் கூறினானென்றார் இது எமக்குமொப்பேயாம். நிராக்ஷேபமானவிதனை யாவரோ ஆக்ஷேபிப்பவர்? சிவனுக்கு இதனையுரித்தெனச் சிலர்வாதிப்பதாக அவனாயே பிரஸ்தாபித்தோமெனின், சிவசக்திகளுக்கு அபேதமாகையால், நாராயணவாசகம் சிவபரத்மாவதிலுந்தட்டில்லை. சிவேதமானவர்களிடம் அதனை ஸமர்த்தித்தலேகூடாது. அப்படி யாவரேனும்விவகரிப்பின், நமதுஐயங்காரதுபிரஸங்கம் சீவிக்கும். அவ்வொருவரும் கூறுமையால், அவரதுபிரவர்த்தகம் அவலமாகியது இவ்வுண்மையுணர்ந்தபேர் சிவபரத்வபோதகத்தில் (ணகாரம்) விரோதம் என்று அவர்கூறியதைத் துச்சமாகவேயொதுக்குவர். இது நிற்க.

நமதன்பர் நாராயணனைக்கூறுஞ் சுபாலோபநிஷத்து, மஹோபநிஷத்துமுதலியன புரோவாதமும், சிவசம்புவாதிநாமங்களை பிரதிபாதிக்குமுபநிஷத்துக்கள் அநுவாதமும் என்று அஸ்திவாரம் போட்டுக்கொண்டு, புரோவாதத்தாற்போந்த நாராயணனது மேன்மையையே அநுவாதங்களாகிய சிவசம்புவாதிபதங்கள் விளக்குகின்றனவெனவும், சிவசம்புவாதிபதங்கள் நாராயணருக்கே யுரியவாகி, அவரே பரமார்த்தர் என்று தெரிவிக்கின்றனவெனவும் பிரசங்கித்தனர். இது ... மூன்னுக்குவரும். எங்ஙனமெனின், உபநிஷத்துக்கள் நூற்றெட்டெனவோர்கணக்கு ... அவற்றுள் மஹோபநிஷத்து சாமவாஸ்யம். இ

பநிஷத்தையும், இதனுடைய ௧௨-அட-பரசமுதலிய ஒன்பதுஉபநி ஷத்துகளையும் எடுத்துக்கொண்டு தசோபநிஷத்பாஷ்யம் ஸ்ரீசங்கரா சாரியர் செய்திருக்கின்றனர். இந்தப் பத்துபநிஷத்துக்களில் நமத ன்பர்தேடிக்கொண்ட சுபாலோபநிஷத்து, மஹோபநிஷத்துக்கள் அடங்கில. இவைகளே உபநிஷத்துக்களில் புரோவாதமாயின், இ வைகளின்முகத்திலும் அவர்விழிக்காமல் ஒதுக்கிவிடுவாரா? நமது ஐயங்கார் ௩௪-௩௫-௩௬-பிரசினமுதலியவைகளையும் அநுவாதமென் றே அலறுமூர்துவர். அங்ஙனமவர் அலறுவாராயின், உபநிஷத்து க்களில் இவைஇவை புரோவாதங்கள், இவைஇவை அநுவாதங்க ளெனக்கூறும் பிரமாணத்தைத் தேடியெடுத்துக்கொண்டு அவர் சபையேறவேண்டியது. இப்படிக்கன்றி அவரிஷ்டம்போல் புரோ வாதாநுவாதங்களென உபநிஷத்துக்களுக்குப்பேரிட்டது பேய்மதி யேயாம். ஒவ்வோருபநிஷத்தினும் புரோவாதாநுவாதங்களுள. அத வா சுபாலோபநிஷத்து மஹோபநிஷத்துக்களை நம்மவர் புரோவாத மெனக்கொண்டகாலத்தும், அவை ஏனைவைஷ்ணவோபநிஷத்துக் களுக்கு மூலமாகலாமன்றி எல்லாவுபநிஷத்துக்களுக்கும் மூலமாகு மெனல்கூடாது. "நகாரணம்" என்றுவிஷ்ணுவை அதர்வசிரசு காலை வாரியிழுத்துத் தெருவிலேபோட்டுவிட்டது. இந்த உபநிஷத்து எப் படியோ நாராயணனைக்கூறுஞ் சுபாலோபநிஷத்திற்கு அநுவாத மாகும்? "ஹேயார்விஷ்ணவாதிகார்ஸ்ஸர்வாந்" என்று பைப்பலாதம் விஷ்ணுவைக்கொண்டுபோய்ப் பாதாளத்தில் தலைவைத்துவிட்டது. இது எப்படியோ சுபாலோபநிஷத்திற்கு அநுவாதமாகும்? அன்றி யும், "யோமத்ஸ்யகூர்மாதிவராஹஸிம்ஹாந் - விஷ்ணுக்ரமந்தம் வாமனமவாதிவிஷ்ணும், ஸவிக்லபம்பீட்யமாநம்" என்று அந்தப்பை ப்பலாதமே விஷ்ணுவைச் சிங்கமாகப்பிச்சிப் பெரிச்சாளிக்குப் போட்டுவிட்டது. எப்படியோ இதுசுபாலத்திற்கநுவாதமாகும்? வை ஷ்ணவோபநிஷத்துக்களாவது சுபாலத்திற்கநுவாதமாகுமோவெனி ன், இராமரஹஸ்யோபநிஷத்து "புஸ்மோத்தூளிதஸர்வாங்கம்" என் று இராமருக்கு உடம்பெல்லாம்விபூதியைப்பூசி அவரைச்சிவனாது விபூதியாக்கி உருத்திரபதவியிலிருக்கச்செய்தது. நாராயணோபநிஷ த்து "நாராயணபிராத்யதா" என்று நாராயணனைச் சிவசேவகனெ னச் சித்தாந்தம்பண்ணிவிட்டது. இவைகடாமெவ்வாறு சுபாலத்தி ற்கு அநுவாதங்களாகும்? இப்படி விசாரிக்கும் ஸாதுக்களுக்கு எல் லாவுபநிஷத்துக்களும் சிவஸர்வோத்கர்ஷத்தையே பிரதிபாதிக்குமு ண்மையென்னிளங்காமற்போகும்? சுபாலத்து நாராயணனிடத்தில் பிரஹ்மத்வாரோபணம் பண்ணியிருந்ததே யமைவுற்றது. மேல் விளக்கிய சுருதிகளையுணர்ந்தவர்கள் சுபாலம் புரோவாதம், சுவேதா சுவதாமுதலியன அநுவாதம் எனச்சாதிப்பவரை வேதப்பொருளறி யாத வெறித்தரதரென்றே ஒதுக்குவார்கள்.

இனிப் புரோவாதம் என்பது ஓர்பொருளைமுதல்பிரஸ்தாபிப்ப
தும்,அநுவாதமென்பது முன்பிரஸ்தாபித்ததை மீண்டுமெடுத்துவிள
க்குவதுமாம். புரோவாதம் நாராயணநாமமானால்,அநுவாதம் சிவசம்
புவாதிநாமங்களாதல் யாங்ஙனம்? நாராயணநாமம் ஒருதேவதைக்கு
ம்,சிவசம்புவாதிநாமங்கள்மற்றொருதேவதைக்குமுரியரூடிநாமங்கள்.
ஒரேதேவதைக்கு எல்லாநாமங்களும் ரூடியானால், நாராயணநாமத்
துக்குச் சிவசம்புவாதிநாமங்கள் அநுவாதமாகலாம்.அங்ஙனமாகாமை
யால், பூர்வபட்சியாரதுமதம் புலர்ந்துபோயிற்று. நாராயணநாம
த்துக்கு ஜநார்த்தநகேசவகோவிந்தாதிநாமங்களே அநுவாதமாகவே
ண்டியது. அப்படிக்கின்றி நாராயணனைகாரணம்என்றுதள்ளிக்(கா
ரணந்துத்யேயச்சம்பு:) என்றசுருதியால் காரணஸ்தானத்தினின்ற
ச[illegible]வாசகத்தை அந்த நகாரணப்பொருளுக்கு அநுவாதமாக்கிட
யோசித்தது நமதுநண்பருக்கு அன்று கௌதமரிட்டசாபத்தின்பிர
யோஜனமேயாம். நாராயணநாமத்திற்குச் சிவநாமங்களை அநுவாத
மாகக்கொள்ளுங்கால் அவை அந்த நாராயணநாமத்தை விளக்கவே
ண்டியது. வேறுதேவதையினது ரூடிப்பெயர்களாகியஅவை நா
ராயணநாமத்தை விளக்காமல், அந்த நாராயணநாமத்துக்கெதிராக
நின்று அதன்மேன்மைகுலையத் தாமேதலைமைவகித்தோங்குகின்ற
ன. இதுதானோ அநுவாதநாமங்களினியல்பு? அவை அநுவாதமா
கியவிளக்கநிலையினிற்குமாயின், நமதுஅன்பர் கஷ்டமெடுத்துக்கொ
ண்டு நியாயஞ்சொல்வதுஆவசியகமோ?அங்ஙனமில்லாமைபற்றியே
அவரெடுத்துக்கொள்ளுங்கஷ்டம் நஷ்டமாயிட எமதுகையிலேந்திய
இறகு அவரதுகண்ணைக்குத்துகின்றது. இவர் சிவாதிநாமங்கள்
விஷ்ணுஸஹஸ்ரநாமத்திலும், அமரகோசத்திலுமுளவென்றார். அம
ரகோசத்தில் அவைநாராயணனிடத்தில் படிக்கப்பட்டில. ஏனோ
இவர் பெரும்புளுகிலிழிந்தார் ? அமரகோசத்தில் நாராயணருக்குச்
சிவாதிநாமங்கள்படிக்கப்படுமாயின், அவை விஷ்ணுவுக்கேரூடி
யாகும். அப்போது எமக்கும் ஐயங்காருக்கும் வாதமேது ? விஷ்ணு
ஸஹஸ்ரநாமத்திலவையுண்டெனின், சிவஸஹஸ்ரநாமத்தில் விஷ்
ணுநாமங்கள்கேட்கப்படுகையால், இந்தக்கட்சி பலஞ்செய்யாது.
அதவா இந்தக்கட்சியை யாம் அங்கீகரித்துக்கொள்ளுகிறோம். நமது
ஐயங்கார் தமதுமக்களுக்குச் சிவசம்புநாமங்களை இட்டும், தாமும்
அவற்றைஸ்மரித்தும் 'ஆசாரத்திற்கொண்டுவரட்டும் பார்ப்போம்.
தாம்ஆசரிப்பதற்கு அஞ்சியொதுங்குஞ்சிவநாமங்களை அவஸரத்திற்
கையாண்டு, அதட்டிக்கேட்டாற்பதுங்கியோடுவது பரிதாபமென்க.
இந்தவியவஸ்தையால் நாராயணநாமத்துக்குச் சிவசம்புவாதிநாமங்

கள் அநுவாதமாயினவென்னு மஸங்காத்மவாதம் அடிபட்டுவீழ்ந்தது. இனி நமதுபண்டிதர் நாராயணநாமம் புரோவாதமும், சிவசம்புவாதிநாமங்கள் அநுவாதமுமாகவேகொள்ளட்டும். அப்போதுஞ் சிவாதிக்யஞ்சிதைந்திலது. எங்ஙனமெனின், புரோவாதத்தைவிளக்குவது அநுவாதமாகையால், நாராயணநாமத்தால் மயங்கநின்ற சிவபாத்துவத்தைச் சிவசம்புவாதிநாமங்களால் தெளியவுணர்த்தினமையே அமைவுடைத்து. நாராயணனிடத்தில் ஆரோபணஞ்செய்துரைத்தபிரஹ்மத்வத்தைப் பின்பு சிவசம்புவாதிநாமங்களால் பிரகாசிப்பித்ததாயிற்று எனலும் அமைவுடைத்து. எல்லாப்படியாலும் சிவஸர்வோத்தமம் நிலைபெறுகியதுகாண்க. இதுநிற்க.

நமதன்பர் சிவாதிபதங்கள் மங்களம் முதலானஅர்த்தங்களைக்கொண்டிருக்கின்றனவென்றார். இதனால், நமதன்பருக்குண்டாகிய ஸாதகம்யாது? சிவநாமம் ரூடியாலும்,யோகத்தாலும் சிவனுருக்கேயுரிமையாதலையறியாது வைஷ்ணவப்பிஞ்சு வாடுகின்றது. யோகத்தால் மங்களார்த்தரூபியாவார் சிவனேயாம். செத்து ஜெகநாதத்திற்கிடக்கும் வேகாக்குறைக்கட்டைப்பிண்மோ மங்களமாயுள்ளபொருள்? சறுக்கிச்சரயுநதியில்வீழ்ந்த ஏழையோ மங்களமாயுள்ளபொருள்? படுத்துப் பாயலைவிட்டெழாவிருள்வடிவோ மங்களமாயுள்ளபொருள்? இவைகளையோசியாதுபேசிய தாசராகிய ஐயங்கார் தமது அல்பகட்சிகளைத் திலதர்ப்பணம்பண்ணி, இனியேனும் சுகிப்பாராக. விரிக்கிற்பெருகும். இந்தவியவஸ்தையால் சிவனே பரமாத்மாவும், விஷ்ணு ஓர்பசுவுமாகிய் ஸத்யார்த்தம்வெளிப்பட்டமையால் பசுவாகியவிஷ்ணுவினது அவதாரமாகிய இராமர் பதியாகிய சிவனைப் பூசித்தாரெனை விழுக்காது.

இனி, அவர் "இராமன் நாராயணாவதாரமென்பதை இராமதாபினியுபநிஷத்திலும், இராமாயணத்திலும் நன்கறிந்துகொள்க" என்றுகூறினார். இராமனை நாராயணாவதாரமன்றென யாம் கூறினலன்றோ ஐயங்கார்தேடிய பிரமாணத்துக்கு யாம் அஞ்சவேண்டியது? நாயகரவர்கள் இராமர் விஷ்ணுவினது அவதாரமெனவும், இராமர் ஜீவைகதேசியாகிறபடி அவருக்குமூலமாகிய விஷ்ணுவும் ஜீவனேயாவரெனவும், விஷ்ணுமுதலியஎல்லாத்தேவரும்பசுக்களெனவும், அந்தப்பசுக்களையடக்கி ஆள்பவர் பசுபதியாகியசிவனே எனவும் இனிதுவிளக்கியிருத்தலைக் கவனியாது வெற்றெனத்தொடுத்தலென்னுங் குற்றத்திற்கிடனாக அவர்வரைந்தது நிஸ்பருஷமென்க. அவர் இராமதாபினி என்னும் உபநிஷத்தின்பேரைப் பிரஸ்தாபித்துவிட்டதனாலேயே அதிற்போந்த இராமருக்குக் கௌரவம்ஸித்தித்

துவிட்டதாக ஸந்தோஷிக்கிறார். இராமனைப்பிரதிபாதிக்கவெழுந்தஅவ்விராமதாபினியில் (சிவ) சப்தத்தைவருவித்து, பரத்துவஸ்தானஞ் செய்திருப்பதை நமதுநண்பர் இனியேனும் விசாரித்துநாணுவாராக. அவ்வுபநிஷத்தில் இராமனை நாலாவதுபொருளாக நாட்டமுடியாத துர்ப்பலத்தையூன்றிப்பாராமலும் எமதுசிவபரஞ்சுடரே நாலாவதுபொருளாக அதிற்போந்தபரதத்வமாயிருத்தலை ஆய்ந்தடங்காமலும் அவ்வுபநிஷத்தின்பேரைக்கூறி எமக்குப் பூச்சிகாட்டவந்தது விவேகிகள் பரிகசிக்கத்தக்கதாய்முடிந்தது. இங்ஙனநிற்க.

சிவபுராணமாகிய ஸ்காந்தத்தில் நாராயணனே தரணியில் தசரதன்மதலையாய் அவதரித்தான்எனவும், அந்நாராயணனைக்காட்டியவேதமே வால்மீகியிடத்திலிருந்து இராமயணமாக அவதரித்தது எனவுஞ் சொல்லப்பட்டிருப்பதாக நம்மவர் குதுகலித்தார். இதில் எமக்கு என்னஆக்ஷேபமிருக்கின்றது? நாராயணன் இராமராக அவதரித்ததும்,இராமாயணம் வேதம்போலமணம்பெற்றதும் எமக்கு உடன்பாடேயாகையால்,பூர்வபட்சியாரதுமதம் பயனற்றதாயிற்று. ஸ்காந்தம் (சைவர்களது தஸ்தாவேஜு) என்று நம்மவரே பிரஸ்தாபித்தனர். எங்களுடையதஸ்தாவேஜில் எங்கள் பரமசிவத்தினது ஆதிக்யமே கண்டாகோஷமாக முழங்கப்பட்டிருக்கின்றது. அதில், விஷ்ணுவை ஓர்சீவனாகவே பலவிடங்களில் படிக்கப்பட்டிருக்கின்றது. ஆயினும், அவர் உபாஸகசிரேஷ்டரென்று சொல்லப்படுகின்றனர். மூலவிஷ்ணுவை உபாஸகசிரேஷ்டரென்றபடி அவதாரவிஷ்ணுக்களையும் உபாஸகர்களென்றுஅதுகூறத்தட்டில்லை. நாராயணோபநிஷத்தில் உபாஸகசிரேஷ்டராகப்போந்த நாராயணரிடத்தில் உபாஸ்யராகிய பரசிவதர்மாரோபணத்தைக்கூறிப் பரப்பிரஹ்மம், பரஞ்சோதி என்றுபடித்தவாறு ஸ்காந்தத்தில் விஷ்ணுவையும், இராமனையும் வர்ணித்திருக்கும்பாகங்களை அறிந்திடுக. சிவனையே பரம் எனக்கூறவெழுந்த ஸ்காந்தம் விஷ்ணுவையும், இராமனையும் பரம்எனக்கூறுதல் செல்லாமையின், சைவர்களது தஸ்தாவேஜில் தமக்கு ஆதரவுண்டெனமயங்கியது தெரியாமையாயிற்று. எங்களுடைய தஸ்தாவேஜாகிய அதில் நாராயணனை, அல்லது இராமனைச் சிவன்பூசித்தார் என்று பிரமாணங்காட்டித் தமதுபட்சத்தை நமதன்பர் சாதித்துக்கொள்ளட்டும் பார்ப்போம். இவற்றைக் கவனியாது பூர்வபட்சியார்வெளிப்பட்டது அவருக்குப் பெருங்குறைவாய்முடிந்தது. இவ்வளவிலமையாது அவர் இராமாயணத்தை வேதத்தினது அவதாரம் என்றுகூறிக்கொண்ட கௌரவத்தையுங்கொஞ்சம் யோசிப்போம். (பாரத: பஞ்சமோவேதா:)என்று மேலோர் கொ

ண்டிருப்பதற்கு நம்மவர் என் செய்வார்? புராணங்கள் ஐந்தாம் வேதமென்று கொள்ளத்தக்கவை என்று சாந்தோக்யத்திற்கூறியவாறென்னை? இவ்வாறுகூறுதல் அவை வேதோபபிரஹ்மணங்களாயிடும் ஸம்பந்தநோக்கியேயாகையால், எதற்குமில்லாத மகிமை இராமாயணத்திற்குமாத்திரமுண்டாய்விட்டதுபோல நம்மவர் மனப்பால்குடித்துத் தமதுஇராமாயணத்தைக் கொண்டாடியது கிண்டாடியதாயிற்று. விரிக்கிற்பெருகும். இதுநிற்க:

விஷ்ணுவினதுபாதநீரைச் சிவனார்தரித்தாரெனவும், சிவனரதுவில்லை இராமர் ஒடித்தாரெனவும், இராமனதுநாமத்தைச் சிவனார் உச்சரித்துக்கொண்டிருக்கிறாரெனவும் நமதுபண்டிதர் பலசரக்குக்கடையினுழைந்தார். இவ்வலங்கதங்களைச் சிவபாரம்யப்பிரதரிசினியில் (கங்காதாரணப்பிரக்யானம் - தாரகசித்தாந்தம்) என்னும் பகுதிகளிலும், சிவதத்வவெண்பாவிலும் எமதுநாயகரவர்கள் அழித்திருக்கின்றமையால், அவைகளை யாமிங்கே ஙிஸ்புருஹமாகவொதுக்கினோம்.

இனி, நமதன்பர் (மேலிரண்டுகேட்சிகளைப்பற்றியதீர்மானங்களாலே இராமன் ஸாக்ஷாத்பரப்பிரஹ்மமென்று ஏற்பட்டதன்றோ) எனப் பெருமகிழ்ச்சியடைந்தார். அவரது இரண்டுகேட்சிகளும் பெருங்காற்றிலகப்பட்ட பூளையாயினமையால், அவர் பரத்துவமாகக்கொண்ட நாராயணரும், அவரதுஅவதாரமாகிய இராமரும் பசுவர்க்கத்திற்படிக்கப்பட்டுச் சிவனைவழிபடும் உபாஸகசிரேஷ்டர்களாயினரொன்பதே ஸத்தியம். இதனால், (இராமர் சிவபூசைசெய்தார்) என்னும் எமது பட்சமே பசுமரத்தாணியறைந்தாற்போல நாட்டப்பட்டது.

நமதன்பர் (அந்த நாராயணன்கொண்ட மானிடக்கோலத்திற்கிணங்கச் சிவனைப்பூசித்திருக்கக்கூடும். இதனால் சிவன் பரதத்வமாவதெங்ஙனம்?) என்றுகடாயினார். அந்த நாராயணரே மைநாகபர்வதத்திற் சிவனைக்குறித்துத்தவங்கிடந்து அரியபேறுகள் பெற்றாரெனவும், தன்னுடையகண்ணைச் சிவன்றிருவடியிலிட்டு அர்ச்சித்துச் சக்கரம்பெற்றாரெனவும், வேறுபலஸந்தர்ப்பங்களிலும் சிவாராதனஞ்செய்தாரெனவும் வைதிகநூல்கள் முறையிடுவதற்கு என்செய்வார்? அவருக்குச் சிவாராதனத்தாற்கிடைத்த பகுமானங்களாகவே இலட்சுமியையும், பரமபதமென்னும் வைகுந்தநாட்டரசையும் வேதங்கள்முழங்கிக்கூறுமானால், இவ்வுண்மைகளை நம்மவர் மறைப்பதெங்ஙனம்? மூலவிஷ்ணுவுக்குண்டாகிய சிவாராதனமேயன்றோ அவதாரவிஷ்ணுவுக்குமுண்டாகியது? இராமனைப்

போலவேயன்றோ கிருஷ்ணரும் பாசுபததீக்ஷையடைந்து சிவாரா தனம்புரிந்து கதியடைந்தனர்; இவைகளைக்கவனியாது (இராமர் சிவபூசைசெய்ததை அகௌரவமாக எண்ணிப்) பரிகாரந்தேடியது பாழாய்விட்டது. யாமிங்கேகாட்டிய பிரமேயங்கள் மகாபார தம், வேதம் இத்யாதிகளிற் படிக்கப்பட்டமையால், சிவபுராண ங்களைத் தாமஸங்களென்று மூடர்கள்மெச்சக்கூறிமகிழும் ஸமாதா னம் ஈண்டுப் பிரயோசனப்படமாட்டாது. அவர் இராமன் மானிட னாகவந்தமையால் சிவனைப்பூசித்திருக்கக்கூடும் என்ற ஸமாதானத் தையுங் கொஞ்சம்யோசிப்பாம். பிராஹ்மணன் வெட்டிவேடந்தாங் கிநடிக்கையில், தன்னுடையபிராஹ்மணகுலம் இழிவெய்துதற்குரி ய நீச்சதர்மங்களையெல்லாம் அவன்அநுட்டித்தல் யாங்ஙனம்? வெட்டிச்சியோடு ஸ்நேகம்புரிதலும், அவ்வீனகுலத்தாரோடு உண் ணுதலும், மற்றும் ஈனத்தொழில்களைச்செய்தலுமே அவை. இவை களையோசிக்கின், இவ்வீனங்களைக் கையாள்பவனை ஈனனேயாகவா வது, பூர்வம் சுத்தனாயிருந்து பின்னர் ஈனனாய்விட்டானெனவாவது கொள்வதன்றோ உசிதமாகும்? சீவர்களுக்கு மானிடஜந்மமும், தேவ ஜந்மமுங் கன்மத்தினாற்கிடைக்கும் வினைப்போகமேயன்றி வேறில் லை. விஷ்ணுவாகிய தேவஜந்மத்தையும், இராமனாகிய மனுஷ்ய ஜந்மத்தையும் ஓர் சீவனேயெய்திச் சுகதுக்கங்களின்மொத்துண்டு, அவைதீரச் சிவாராதனங்களைச்செய்து பேறெய்துதலாகிய உண்மை ப்பிரஸங்கமே ஈண்டுமுடிவாயிற்று. மச்சம், கூர்மம், வராகம் என் னும்விலங்குகளாக அந்தச்சீவன் சாபத்தாலிழிந்து துக்கித்ததையும் இவற்றோடுகூட்டித் திருப்தியடைவாராக. இதனால், இராமர் சிவ னையாராதித்தது நாடகம் என்ற ஸமாதானம் நாசத்தையடைந்தது.

நமதன்பர் (தசரதன்முதலானோரை இராமன்வணங்கியிருக் கின்றார். அதனால், அவர்கள் பரதத்துவமானார்களோ; கொண்ட வேஷம் மேன்மையைக்குலைக்குமென்றால், பிட்டுக்காசைப்பட்டு வெட்டுக்கூடைசுமந்த சிவன்கொண்ட ஓட்டக்கோலமும் அன்பர் சொல்லுஞ் சிவபரத்துவத்தை அபஹரிக்குமல்லவா?) என்று தருக் கினார். தசரதன் ஓர்பசு. தாசரதியும் ஓர்பசு. ஓர்பசுவைத் தந்தையா கவும், மற்றோர்பசுவைப் பிள்ளையாகவும் அவரதுவினைகள்கூட்டின. அவ்விருவரும் மற்றொருசந்மத்தில் மாறியும்பிறக்கக்கூடும். ஒரே காலத்தில் பிராஹ்மணனும் பறையனுமாகவிருந்த இருவர் வினை வசத்தால்மாறிப் பிராஹ்மணன் பறையனாகவும், பறையன் பிராஹ் மணனாகவும் பிறக்கக்கூடுமென்றோ? முன்ஜந்மத்தில் பறையனாயி ருந்து பிராஹ்மணனுக்கு அடிமைவேலைசெய்திருந்த ஓர்ஜீவன்

பின்னர்த் தானெடுத்தபிராஹ்மணஜன்மத்தில், முன்பிராஹ்மணனு யிருந்தஜீவன் பறையனுகஜன்மித்துத் தனக்கு அடிமைவேலைசெய்ய வும் பெறுமன்றோ? இந்தவியவஸ்தையால், தசரதனுயிருந்த சீவன் புண்ணியமுதிர்ச்சியால் இந்திரனுய்விடுதலும், பிரமனுய்விடுதலும், விஷ்ணுவாய்விடுதலும், உருத்திரனுய்விடுதலும், ஸாத்தியம். ஈண்டு உருத்திரனென்றது குணருத்ரனையேயாம். இவைகளையோசிக்கிற போது இராமர் தசரதனைவணங்கியது ஜீவதர்மமேயாயிற்று. மனு ஷ்யஜன்மமெடுத்த இருவரில் அடிமைதலைவனுக்குத் தாழ்ந்தவனு தல்போல் தசரதனுகிய பிதாவைநோக்கப் பிள்ளையாகிய இராமர் தாழ்ந்தவரேயாயினர். இதனுல், இராமனைக்காட்டிலுந் தசரதனி டத்தில் பரதத்வம் அதிகமென்பதே ஸித்தம். இன்னும் விரிக்கிற் பெருகும். நமதுஅன்பர் தமதுஸித்தாந்தம் இப்படியுடைபடுமென் றறியாது எங்கள் சோமசுந்தரத்தினது திருவிளையாடலை ஒட்டக் கோலமென்று தூஷித்தார். அந்தவொட்டனுகிய எங்களாண்டவ னுக்கு நமதன்பர் யாவருடையயோநியை இடமாகக் கண்டுகூறுவா ரோதெரியாது. அவ்வொட்டன் பாண்டியனடித்த பிரம்படியைத் தாங்கி (விற்பிரம்பாலுற்றவடு மேவவுலகெங்குநிறை, சிற்பரனே தெய்வம் சிவசிவா) என்னும்பிரமாணத்தின்படி விஷ்ணுமுதுகிலும், பிரமன்முதுகிலும், இந்திரன்முதுகிலும், மற்றயாவர்முதுகிலும் அவ்வடித்தழும்புகாணுமாறு நிறைந்துநின்றமாட்சியை நமது அன் பர் யோசியாதுபேசியது யாதோ அறிகிலம். அந்த வொட்டனு டைய திருமேனியை எந்தப்பிதாமாதாக்களுடைய, சுக்கிலசோணி தங்களின்பரிணமமாக நமதன்பர் சாதிப்பாரென்பதுந் தெரியகில் லேம். இவ்வொட்டனிடத்தன்றோ பதிலட்சணங்குன்றாதமைந்த நாடகம் நாட்டத்தகும்? எமதுபெருந்தகைமைப்பிரான் தனது பரி பூரணத்தன்மையை விளக்குவதாகிய பரத்துவத்தையேயன்றோ அ வரது ஒட்டக்கோலம் இனிதுவிளக்கியது? இவைகளையோசித்து நமதுபண்டிதர் இனியேனும் இராமர் ஸேவகரும், சிவன் ஸேவ்யரு மாகியநலத்தையறிந்து குணப்படுவாராக.

இனி நமதுஅன்பர் இராமருக்கு ஹத்திவந்ததில்லையெனவும், அதற்காக அவர் சிவனைப்பூசித்தாரென்பது ஆகாயத்தாமரை எனவும்வரைந்து, (அயன்சிவன்முதலான தெய்வக்குழாங்கள் அ ரக்கர்கோனைக்கொல்ல ஆண்மையிழந்து) நாராயணனைப்பிரார்த் திக்க, அவர் (அரசர்கோனுக்கு) இராமனென்னும் மகவாய்த்தோன் றி (அரக்கனுருயிர்குடித்து அமரர்க்கு இருப்பிடம் அருள்செய்தார்) எனப்பிரசங்கித்து, இத்தகையஇராமனுக்கு ஹத்திவரக்காரணமுண்

டோ என்று கடாவிமகிழ்ந்தார். (வ்ரதானும்த்தமம்வ்ரதம்) என்று புகழ்வதுபோல் நாராயணனைப்புகழ்ந்தநலமாக அதனையறியவேண்டியது. ஏனெனின், அரக்கனுருயிர்குடித்து என்று நமதன்பர்புகழ்ந்த இராவணன் வாலிக்கு ஒளித்துத்திரிந்தவன். அவ்வாலியை நேர்நின்றுகொல்லு மாற்றல்போதாது இராமரும் அஞ்சிக் காலம் பார்த்துச் செடிமறைவினின்று சேவகம்புரிந்தவர். இவைகளை யோசிக்கிறபோது இராவணனைக்கொல்லுமாற்றல் சிவனார்படைத்திலரென்பது சிரிப்பையே விளைக்கின்றது. இராவணன் வாலிக்கு அடங்கினவன். அவ்வாலியை இராமர்கொன்றது வீரத்தினாலன்று. இராவணனை இராமர்கொன்றதும் சுதந்தரமன்று. இராமருக்கு அகஸ்தியபகவான் ஆதித்யஹ்ருதயத்தை உபதேசித்து அருள்புரிந்த அநந்தரமே இராமர் இராவணனைக்கொன்றமகிமை கேட்கப்படுவதறியாது (அரக்கனுருயிர்குடித்து) என்றுநமதன்பர் இராமரைப்புகழ்ந்ததுயாங்ஙனம்? இனி இராமர் இராவணனைக்கொன்றதும் வீரத்தினாலன்று. செடிமறைவிலிருந்து தனதுபாதிபலத்தை ரக்ஷித்துக்கொண்டு வாலியைக்கொன்றதுபோல், ஆதித்யஹ்ருதயபலத்தால் இராவணனை இராமர்கொன்றார். அன்றியும், "ஸ்ரீராமர் இராவணனைச் சம்ஹரிக்கும்ஸமயத்தில் உருத்திராம்சமாயுள்ளரூபத்தைத்தரித்தார்" என்று இராமாயணத்திற் கேட்கப்படுகின்றது. இதனாலும் இராமர் பரதந்திரரென்பது ஏற்படுகின்றது. அதனை விளக்குதும். உருத்திராம்சமென்பது இராவணனைக்கொல்லத்தக்க சிவஸம்பந்தமானவோர்வித ஆற்றல். அந்த அம்சமில்லாதவழி இராமருக்கு இராவணனைக்கொல்லமுடியாதென்று வெளியாகின்றது. அந்தத் தன்மை சிவனிடத்திலியற்கையும், இராமரிடத்திற் செயற்கையுமாகமுடிந்தது. அஃது தனக்குச் செயற்கையாலுண்டாகாதபோது தான் இராவணனுக்கு அடங்குதலேயன்றி அவனைக்கடக்கமுடியாது. அந்தத்தன்மையானது உயர்ந்ததா? தாழ்ந்ததா? என்று சற்றுயோசிப்பாம். தாழ்ந்ததாயின், அதனை இராமர் அபேட்சித்ததும், அடைந்ததுந்தவறு. உயர்ந்ததாயின், அது இராமர்பக்க லியற்கையாகவிராமல் சிவன்பக்கத்திலிருப்பது என்னை? உயர்ந்ததன்மையை இயற்கையாகவுடைய சிவன் உயர்ந்தவனாகத் தட்டில்லையாகையால், உயர்ந்தவனாகிய சிவனிடத்தில் இராவணனை ஸம்ஹரிக்கத்தக்க அநுக்ரஹத்தை இராமர் அடைந்தாரென்பதே துணிவு. இராவணனும் அநேகரைக் கொன்றிருக்கின்றானாகையால், அதனால் அவனும் பிறரைஸம்ஹரிக்கத்தக்க சிவாநுக்ரஹத்தை அடைந்தானென்பதேமுடிவு. முடிவாகயோசிக்கின், இராவணனும் உருத்தி

ராம்சத்தைத் தாங்கினான், இராமரும் உருத்திராம்சத்தைத்தாங்கினார் என்று அறியவேண்டியது. இதனால், அமிசம் என்பதுஅநுக்ரஹமென்று தீர்மானமாயிற்று. இராவணஸம்ஹாரத்திற்கு இராமரடைந்தபிரயோஜநம் இனைத்தென்றுவெளிப்பட்டதுணர்ந்தவர்கள் நமது பண்டிதர் (அரக்கர்கோனைமுடிக்கச் சிவனார். ஆண்மையிழந்தார்) என்று கூறிக்கொண்டதை எங்ஙனே ஒப்புவார்கள்? இராமரதுயோக்யதையை நமதன்பர்க்கு யாம் இனிதுவிளக்கினோமாகையால், இனியேனுஞ் செருக்குறாதடங்குவாராக.

இராமர் இராவணனைக் கொன்றுவிட்டதனாலேயே அவரைப் பரதத்துவமாகமதித்தல்கூடாது. பீமன் இடும்பனையும், பகனையும், சராசந்தனையும், மணிமாலனையும், கீசகனையும், துரியோதனனையுங் கொன்றான். இதனால், பீமனைப் பரதத்வமாகக்கொள்ளுதல் யாங்ஙனம்; கொன்றவனாகிய பீமனிடத்தில் அவனாற்கொல்லப்பட்டவர்களாகிய ஏனையோரது பலங்கள்வந்துசேரும்பெற்றியால் கொல்லப்பட்டவர்களைக்காட்டிலுங் கொன்றவனை அதிகன் என்று புகழ்தல்சாலும். அவ்வளவேயன்றிப் பரதத்வமாகக்கூறுதல் சாலாது. கீசகன் முதலாயினாரதுபலங்கள் பீமன்பக்கல்போய்ச்சேர்ந்தபடி இராமரதுபாதிபலம் வாலிக்குப்போய்விடுமென்றஞ்சியேயன்றோ அவன் முன்னின்றுபோராடாமல் அவ்விராமர் சூழ்ச்சியால் அவனைவென்றனர்? இதனால், பீமன் இராமன் என்னுமவர்களுடைய கதி ஒன்றாகவேமுடிதலால் பீமனுக்கில்லாத பரத்துவத்தை இராமன்றலையிலேற்றுவது சுமக்கமுடியாத பாரமாகவேமுடியும். இந்தவியவஸ்தையால் இராமரிடம் பிரஹ்மத்வம் ஓரல்பமும் நிலைபெறுமையையோர்ந்திடாமல், சிவனாரது ஸ்ரீபாதத்தின் கட்டைவிரனகநுதியால் அழுத்தப்பட்டு நசுங்குண்டஅல்பஜந்துவாகிய இராவணனை ஸம்ஹரித்துவிட்டாரென்று தமது இராமரதுபிரபாவத்தைக்கொண்டாடிய ஐயங்காரது பிரதாபத்துக்கு யாம்கூலிகொடுக்க வல்லேமல்லேம். சிவபெருமானது கட்டைவிரனகநுதியா லழுத்தப்பட்டு நசுங்குண்டஜந்துவாகிய இராவணனை அச்சிவனார் கொல்லுமாண்மைபெறாராயினார் என்று நமது சிற்றுத்துக்காட்டார் பேசியது அவரது சீரையேயன்றோ குலைத்துவிட்டது? இனியேனுங்கூர்ந்து யோசித்துப் பேசும்வல்லபத்தைப்பெற்று வெளிவருவாராக.

இதுகாறும் யாம்விசாரித்துத் தீர்மானித்தமுடிவால் இராமரிடம் ஓரற்பமும் தெய்வத்தன்மைஸித்தியாமையால், அவர் ஸாமான்யபத்தஜீவனென்பதே ஸித்தம். ஜீவனாகிய அவருக்கு ஹத்திஸம்பவித்தது என்பதிலோராக்ஷேபமு மின்மையால், அந்தஹத்

திதொலேயுமாறு அவர் சிவனைப்பூசித்தாரொன்பது நிர்விவாதபிரஸ்த மென்க. இதனைத்தெளிந்திடாமல் (இராமர் சிவபூசைசெய்தது ஆகாயத்தாமரை) என்று வைஷ்ணவப்பிஞ்சாகிய நமது ஐயங்கார் எழுதியது (முழுப்பூசணிக்காயைச் சோற்றிலேமறைக்கும்) அதிகாரியினது செய்கையோடொப்பமுடிந்தது. எமதுநாயகரவர்களை நமதுபண்டிதர் சைவப்பழம் என்று பலமுறை எழுதியதால், யாம் அவரை வைஷ்ணவப்பிஞ்சென்று பிரஸ்தாபித்தது குறைகூறியதாகாது. இனி அவர் தக்கவாறு விவகரித்துவரின், யாம் அவரை யோரற்பமுங் குறைவுபடப்பேசகிலேம். அவரது குறைவுடையதீபிகையை நிறைவுபடுத்தி இரண்டுபாரமாக இப்போது வெளிப்படுத்திய சுவடியில், அந்தச்சுவடிக்குஆக்கியோர் தமதுதிருக்குமாரராகிய(வித்வான்வைகுண்டம் ஐயங்கார்) என்று நமதன்பர் வெளிப்படுத்திக் கொண்டார். யாம் கொடுத்த வைஷ்ணவப்பிஞ்சு என்னும் பட்டத்தை நமதன்பர் தமது திருக்குமாரருக்கு அளித்துவிட்டு, வேண்டுமாயின், வைஷ்ணவப்பழமென்றே முதிர்ந்து வெளிவரக்கடவர். நமது வைஷ்ணவப்பழமாகிய ஐயங்காரது சுவடியின் பிற்பாதியிலுள்ள சரக்கைகாண்டு வெளிப்படுத்துகிறோம். அவைகளைப்பார்த்து மத்யஸ்தபுத்தியுடையபெரியோர் விலேயேற்படுத்தி, அவை புழுத்தனவோ?நல்லனவோ? என்பதைநாடி மகிழக்கடவர். எமதுநாயகரவர்களைப்பிரஸ்தாபித்துக்(கூவுகிறார்)எனவொன்று வரைந்தார். அன்றியும் (சிவக்கொழுந்தின் கையெழுத்தே சாட்சி) என ஸ்ரீமத் அப்பையதீக்ஷிதரவர்களைத் தூஷித்தார். இம்மட்டோ, (நமதுசைவப்பழமுங் கையெழுத்துக் கொடுத்திருக்கின்றதே) என மீண்டும் எமதுநாயகரவர்களைத்தூஷித்தார். இன்னும், (சைவப்பழத்தின் விலையாகாததைக்சரக்கு) என ஒன்று கூறித்தொலேத்தார். இப்படிப் படிதாண்டிப்பேசியபண்டிதர்க்கு யாம் தக்கபகுமானங்கொடுத்துவப்பிக்க எமக்குச்சக்தியில்லாமற் போகவில்லை யென்பதையே ஈண்டறிவித்தோம். இங்ஙனமிற்க.

நமதுபண்டிதர் (அரக்கனும்வேதியனே; வேதியனேயாயினும் அவனைவதைத்ததில் இராமனுக்குத்தோஷம் வராது.)எனவும், (பிரமன் தலையைக்கிள்ளிப் பிரஹ்மஹத்தியால் பித்தனுயலைந்த சிவபிரானைத பெரும்பழிதுடைத்த பெருமானுகிய இராமன்) எனவும் பெருமைகூறிக்கொண்டார். இவர், முதற்கண் அரக்கனும்வேதியனே என்று கடாவியநோக்கம் அரக்கர்வேதியராகார் என்று வெளிப்படுத்துகின்றது. இது, "அக்னிஹோத்ராச்சவேதாச்ச, ராக்ஷஸாநாம்க்ருஹேக்ருஹே"என்னும் இராமாயணவசனத்தை அழிக்கி

ன்றது. பின்னர், வேதியனேயாயினும் அவனைவதைத்ததில் இரா
மனுக்குத் தோஷம்வராதுஎனப்பேசியநோக்கம் வேதியர்களைக்கொ
ல்லுவதிற் பழியுண்டாமென் றஞ்சவேண்டாமென்று உபதேசிக்கின்
றது. அன்றியும், நமது பண்டிதர் தமது வழுத்திரட்டில் (கசவது)
பக்கத்தில் இராவணன் பிராஹ்மணனாகான் என்று வெகுகஷ்டப்
பட்டுச்சாதித்த சாதனையையும் பாழாக்குகின்றது. இப்படியுந்த
மொழி நமதுபண்டிதர் குழம்பினாரன்றோ ? இவரின்னுங்குழம்பிக்
குழையாவாறு சிவாதிக்யரத்நாவளி உ-வது பாகம்(கூஉ-வது) பக்கந்
தொடங்கி (கூஅ-வது) பக்கம்வரையில் பார்த்திடுவாராக. இந்தப்
பகுதியில் பிரஹ்மசிரச்சேதத்தாற் சிவனுக்குநேர்ந்தஹத்தியை இ
ராமன்துடைத்தான் என்றுகூறிய நமதுபண்டிதரது வாய்க்குப்பூ
ட்டன்றோ சித்தப்படுத்தியிருக்கின்றது ? இனியேனுங்கவனித்து
விவகரிப்பாராக. இங்ஙனநிற்க.

நம.ஸ்ரீஐயங்கார் (தாடகியென்கிற பெண்ணை இராமன்கொலை
செய்தாரே! அதில்விளைந்ததோஷத்தை எங்கே சிவப்ரதிஷ்டைசெ
ய்துஅவர்போக்கிக்கொண்டார்) என்று சங்கைகொண்டார். தாட
கையினது வதம்இராமர்செய்தது விசுவாமித்திரபகவானது ஆஜ்ஞா
பரிபாலனார்த்தம். போதமிழந்துசெய்தது பாவமாவதெங்ஙனம் ?
இராவணவதம் தன்னுடையபெண்டைக் களவாடினானென்னுமா
னமேற்கொண்டு. முந்தியது பரப்பிரயோஜனம். பிந்தியது ஸ்வப்ர
யோஜனம். இவற்றையூகியாத குறைவினாலன்றோ நமது பண்டிதர்
அவலத்தில் வாயைத்திறந்தனர் ? இத்தகைய நலிங்களவரறிந்து கு
ணப்படுமாறு திருவருள்கூட்டியதும் அவரது அதிர்ஷ்டந்தான். இ
ராவணவதத்தால் விளைந்ததோஷம் பிரஹ்மஹத்தி. தாடகாவதத்
தால் விளையத்தக்கது ஸ்திரீஹத்தி. இரண்டும் ஹத்திகளானாலும்
பிரஹ்மஹத்தி அதிகுகொடுமையுள்ளது. எருதைக்கொல்லுவதும்
பசுவைக்கொல்லுவதும் பாவமானாலும், பசுவதையால் பாவமதிகரி
க்கும். இவைகளுக்குத்தேடும்பரிகாரங்களும் தாரதம்யமாகவேயி
ருக்கும். இவற்றையோர்ந்திடாமல் பிரஹ்மஹத்தியோடு ஸ்திரீஹத்
தியையும் ஸமமாகக்கொண்டு நமதுபண்டிதர் கடாவியது அஸம்பா
விதமென்க. இராவணனைமாத்திரமேயன்றி அநேகரை இராமர்
கொன்றிருக்கிறார். அவர்களைக்கொன்றதற்கும் அவருக்குப்பாவம்வ
ந்ததேயன்றி வேறில்லை. இராமர் இராவணஸம்ஹாரஞ்செய்தார்
என்னுங்கால், அவனையும் அவனுடையகூட்டத்தையும் அழித்தார்
என்றுபொருளுண்டாகும். அதுபோல், அவர் இராவணவதத்தாலு
ண்டாகிய பாவத்தைப்போக்கிக்கொண்டாரென்னுங்கால் அவனை

ஒருகல்லை யாரோவொருவர்நட்டுப் பிரஸித்தியுண்டுபண்ணினார் என்று உள்ளம்நாணாமல் எழுதிக்கொண்டார். அதனையேனோ நமதன்பர் பிடுங்கிவிடக்கூடாது? இவரது ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்கவந்த இராமாநுஜர்முதலிய பூர்வீகர்களாவது ஏன்பிடுங்கவல்லாரல்லராயொழிந்தார்கள்? இனியாவது நமதுஅன்பர் அதனைப்பிடுங்கி அப்பாலெறிந்துவிட்டு இராமருக்குக் கௌரவத்தைச் சாதித்துக்கொள்வாராக. ஸ்ரீகாஞ்சியில் திருமாற்பேறு என்னுமிடத்தில் சிவபெருமானுக்கு (மால்வணங்கீசர்) என்றுதிருப்பெயர்வழங்கிவரும் பிரத்யக்ஷத்தையும், அதனைவிளக்கும் பிரமாணத்தையும்விசாரித்து, இத்தகையசிவமகிமைசெறிந்துவிளங்கும்க்ஷேத்திரங்கள் பலவுளவென்பதையுமாய்ந்தடங்கி அவர்சுகிப்பாராக. இன்னும்விரிக்கிற்பெருகும். இங்ஙனநிற்க.

நமது வைஷ்ணவசிரோமணியார் (தாசரதியின் தாட்டாமரையின்பெருமை, கல்லுருபெண்ணானகதையில் கண்டுகொள்ளலாமே) எனவுள்ளம்பழுத்து உரைசெய்தார். பாரதத்திற்போந்த ஜண்டியினதுகதையை நமதன்பர் இதுகாறும்பார்த்தறியார்போலும். அவள் தனதுகணவனால்குத்துக்கல்லாகச்சபிக்கப்பட்டுக்கிடந்தபோது அர்ஜுனன் அசுவமேதஞ்செய்யநடத்திவந்தகுதிரை அந்தக்கல்லினுராய்ந்துகொண்டது. அந்தக்குதிரை கல்லோடொன்றி விடுபடாதுவருந்துவதை அர்ஜுனனறிந்து ஒருகையாற்கல்லையும், மற்றொருகையாற் குதிரையையும்பற்றினான். உடனே அந்தக்குதிரை கல்லினின்றும்விடுபட்டது. அந்தக்கல்லானது தனதுஜடவடிவம் மாறிப் பழையபடிஜண்டியாகிய பெண்ணாய்விட்டது. இதனால், அர்ஜுனனுடையகையினாலொருகல்லுக்குப்பெணவடிவம்வந்ததும், அப்படியேஇராமரதுகாலா லொருகல்லுக்குப் பெண்வடிவம்வந்ததும் வியத்தம். கல்லுருவைப்பெண்ணாகியஅர்ஜுனன் பரதத்வமாயிடினன்றோ அவனைப்போலவே கல்லுருவைப்பெணாக்கியஇராமனும் பரதத்வமாகலாம்? இராமரதுகாலால் கல்லுக்குப்பெண்ணுருவம்வந்தது அந்தப்பெண்ணின்கணவனது வாக்குவிசேடத்தால். அர்ஜுனனதுகையால் கல்லுக்குப்பெண்ணுருவம்வந்தது அந்தப்பெண்ணின் கணவனது வாக்குவிசேடத்தால். இராமனதுகதியும், அர்ஜுனனதுகதியு மொருநிலையினிற்றலால், நமதுபண்டிதர் இராமனை அளவுக்கதிகமாகப்புகழ்ந்தது செரிக்காமல் அஜீர்ணப்பட்டுவிட்டது. இராமரதுபாதத்திற்கே கல்லைப் பெண்ணாக்கும் வல்லபமுண்டாயிருப்பின், அவர்காடுமேடுகளெல்லாந்திரிந்து காலங்கழித்துவந்தகாலையில், அவரதுகாலிற்பட்டகல்லுகளெல்லாம் பெண்ணுருவெய்

தாதகாரணம்யாதோ? எங்கள் காழிப்பெருந்தகையார் (சுட்டவெலும்பை ஓர்நொடிப்போதிற் பெண்ணாக்கியருளினார்) என்னும் மஹிமாதிசயத்தைவயிறெரியாதுகேட்டு இனியேனுங்குணங்களையாராய்ந்து நமதுபண்டிதர் மணம்பெற்றுவாழ்வாராக.

இனி, நமதுபண்டிதர் (ஸ்ரீராமருக்குஅகஸ்தியபகவான்விரஜாதீக்ஷைசெய்து இராவணனபகரித்துக்கொண்டுபோனசீதையை அடையும்வரமுதலியன அநுக்கிரகித்தாரென்று இராமாயணத்திலில்லாமையால் அதனையங்கீகரிப்பது கூடாதெனவும், பாத்மபுராணத்தில் அதுகூறப்பட்டிருப்பின், அந்தராமனை வேறுஇராமனெனக்கொள்ளவேண்டியதெனவும், (ஸாக்ஷாத் நாராயணன் அவதாரமாக வால்மீகிஇராமாயணத்திற் பிரஸ்தாபிக்கப்பட்ட இராமன்) பாத்மத்திற் சொல்லப்பட்டதில்லையெனவும் பிரஸங்கித்தனர். காசியிலே இருக்கின்றவர்களுடையகாதில் இராமருடைய தாரகமந்திரத்தைச் சிவனுபதேசிக்கின்றாரென்று பாஞ்சராத்திரிகள் கொண்டாடுங்கதையை ஏனோவான்மீகிபகவான் கூறாதொழிந்தார்? வால்மீகி சொல்லாமையால் எமக்கு அதுபிரமாணமாகாதெனை நமதன்பர் அதனையேனோதள்ளாது கொஞ்சிமகிழ்கின்றனர்? வேறுநூலாற்பெறப்பட்டஇவ்விராமதாரகம் தசரதனதுசேயினதாக நம்மவரினிக்கொள்ளுதல் தகாதென்க. தமது ஏழைஇராமருக்குப் பெருமையுண்டாவதாயிருந்தால், வேறெந்தநூலாயிருந்தாலுங் கொள்ளுவதும், சிறுமையுண்டாவதாயிருந்தால், அவ்வுண்மையை யுணர்த்துநூல் ஏதுவாயிருந்தாலுந்தள்ளுவதுங் கவிவைபவமென்றே நகையாடுகின்றனர் நல்லோர். இராமாயணத்தில் சீதையோடுசென்று அகஸ்தியனை இராமர்கண்டாரென்று சொல்லப்படுவதற்குமாறாகச் சீதையையிழந்தபின்னர் அவர் அகஸ்தியனைக்கண்டதாகக் கூறுவதை நம்புவது யாங்ஙனமெனவுங்கடாயினர். சீதையை இழப்பதற்குமுன்னும், அவளை இழந்ததற்குப்பின்னும் இராமர் அகஸ்தியனைக் கண்டாரென்பதேதுணிவு. பிந்தியது ஏன்சொல்லப்படவில்லையெனின், இராமதாரகவைபவம் வால்மீகிசொல்லாமையால் குடிமுழுகிப்போய்விட்டதாக நமதுபண்டிதர் துக்கிக்கின், யாமுமதற்குப்பதில்சொல்லவேண்டியபொறுப்பால் வருந்துவோம். வால்மீகிபகவான் சீதையைமயிர்பிடித்துத் தொடையிற்கைகொடுத்து இராவணன்தூக்கிக்கொண்டுபோனான் என்று எழுதியிருப்பதற்குமாறாகத் தமிழிராமாயணத்திற் கம்பர் நிலத்தைப்பேர்த்து அப்படியே சீதையைஇராவணனெடுத்துக்கொண்டுபோனான் என்றுஎழுதியிருக்கின்றனர். நமது பண்டிதர் இந்தக்கம்பனையும் வான்மீகியைப்புகழ்ந்ததுபோல் தம

து ஆபாசபத்திரிகையில்கம்பநாட்டாழ்வான்என்று புகழ்ந்திருக்கின்றனர். இவருக்கு வால்மீகி சொன்னது மெய்யா? கம்பர்சொன்னது மெய்யா? வால்மீகிசொன்னசீதையும், கம்பர்சொன்னசீதையும் வேறுவேறுசீதைகள்என்று இனிநமதன்பர் கூறுவார்போலும். அல்லது வான்மீகர்சொன்னதுதான்சரி, கம்பர்சொன்னது பிசகு என்று கூறுவார்போலும். அங்ஙனமேல், வால்மீகர்சொன்னதுபிசகு, கம்பர் சொன்னதுதான்சரி என்று ஏன்வாதமூண்டாகாமற்போகும்? இனி, நமதுஐயங்கார் தமிழின்பெருமையறியாதுதட்டழிந்துநிற்குஞ்சூதஸம்ஹிதாப்பிரஸங்கியாரதுமதத்தை யவலம்பித்துக் கம்பராமாயணம் தமிழாகையால் அதுபிரமாணமன்றெனநியாயஞ்சொல்லவேண்டியது. அங்ஙனஞ்சொல்லத்தலைப்படின், (அவர் வேதம் எனக்கொண்டாடுந் திருவாய்மொழி)முதலியநூல்கள் அஸாமஞ்சஸமாயொழியும். இப்படியழியுமஸங்காத்மவாதத்திற் கொருகதிதேடிக்கொள்ளாமல் அவர் இராமாயணபாத்மங்களுக்குத் தேடியகதி அவருக்கே சிரிப்பையுண்டுபண்ணுமென்க.

இவ்வுண்மைகளைவிசாரித்துத்தெளிவெய்தப்பெறாத நமதுசிற்றுத்துக்காட்டுப்பண்டிதர் பாத்மத்திற்சொல்லப்பட்ட இராமர் நாராயணாவதாரமன்றெனவும், இராமாயணத்திற்போந்த இராமர்தான் நாராயணாவதாரமெனவுங் கூசாதுபேசினர். இவரதுகிரஹணதோஷத்தை யாம்மெய்யென்றுகொள்வதா? பாத்மம்-வாஸிஷ்டம் முதலியவைகளை மெய்யென்றுகொள்வதா? பிரமாணங்களாகிய பாத்மமுதலியவைகளையே மெய்யென்றுகொள்வதவசியமாகையால்,அவற்றுட்போந்த இராமர் நாராயணாவதாரமாகவே ஏற்படுகின்றனர். ஆகையால், அவரே வான்மீகத்தாற்பெறப்பட்ட இராமரொன்பது ஸித்தம். பலபலஇராமர்கள் வாஸிஷ்டத்திற்பெறப்படுகின்றனரோ யெனின், அவ்விராமர்களெல்லாம் நாராயணரதுஅவதாரமாகவே அதுகூறுதலால் ஓர்பாதகமுமின்றென்க. பலபல இராமர்களுண்டாதல் யாங்ஙனமெனின், அதற்கு ஸமாதானமுரைக்கவேண்டிய பொறுப்புநமக்கின்றெனவறிக. அதிற்போந்தஇராமர்கள் நாராயணாவதாரமாகாரென நமதன்பர்கூறியதை மறுக்கவேண்டியதொன்றே எமக்குற்றபொறுப்பு. அதை யாம்செய்துவிட்டோம். வான்மீகத்திற்போந்த இராமரோ அகஸ்தியரதுஉபதேசத்தையும், விரஜாதீக்ஷையையும், சிவபூசையையுங்கொண்டு உய்ந்தாரெனப் பாத்மத்தாற்சாதித்ததும் ஸர்வஸம்பிரதிபந்நமாயிற்று. விரிக்கிற்பெருகும். இது நிற்க.

நமதுபண்டிதர் (வால்மீகியத்தில் மாண்டுகரணி என்ற ஒரு முனிவருடைய பயனற்ற ஒருசரித்திரத்தைச் சோம்பாதுசொன்ன வால்மீகி முக்கியங்களாயின், இலிங்கப்பிரதிஷ்டையையும் சிவபூசையையும் சொல்லாமல் இருப்பாரா ?) என்றுவினவினர். மாண்டுகரணியினதுகதையைப் பயனற்றதாக நம்மவர்கொண்டது அம்முனிவரது அதிர்ஷ்டந்தான். அதுபோலவே இராமரதுகதையையும்பயனற்றதாக ''ஒருவர்கொள்ளின், "இவர் என்செய்வார் ? பயனில்செய்கையுடையார் என்று வான்மீகிக்குப் பட்டமேற்றிய பின்னர், அதனையிறக்குவது கஷ்டமென்க. நமதுஅன்பர் வான்மீகியைத் தூஷித்தஸந்தர்ப்பத்தில் (சோம்பாது) என வோரரியபிரயோகஞ்செய்தார். அதனைவினியோகித்த அவரதுகருத்துநன்றாயிருப்பினும், அத்தகையபிரயோகங்கள் அம்முனிவர்விஷயத்திற் செய்து தடுமாறியது நமதுஐயங்காரதுயோக்யதைக்கு அழகன்று. சோம்பாது என்பதற்குப் பிரதியாகச் (சலியாது) என்றுபிரயோகித்தாலாகாதா? இவ்வாறெல்லாம் அவர் எழுதிமயங்கியது தமது எடுப்பைச்சாதிக்கமுடியாத மனக்குழப்பத்தின்விளைவேயாம். என் செய்வார்பாவம்! இராமர்பிரஹ்மஹத்தியாந்தரம் சிவபூசைசெய்ததை வால்மீகிபகவான் பிரஸ்தாபியாதகாரணத்தை நாயகரவர்கள் இனிதுபரிஷ்கரித்திருக்குநயத்தைக் கூர்ந்துயோசிக்கும்பண்பிழந்து கூபமண்டூகத்தின்செய்கையை நமதன்பரநுசரித்தது அவரதியற்கையென்க. எமதுநாயகரவர்கள் இராமரதுமகிமைகூறவந்த இராமாயணம் அவருக்குஹத்தியைப் பச்சையாகக்கூறுவது மரியாதைக்குறைவெனவும், மஹாதேவரதுபிரஸாதத்தை அவருக்கு அதுஒப்பியது மகிமையேயாகுமெனவும் பிரகாசப்படுத்தினர். இதனை நம்மவர்பரிகரித்துக்கொண்டவிந்தை அவ்விராமருக்கேவெளிச்சம். என்னெனின் (வால்மீகியின்உள்ளத்தில்புகுந்துஅவரதுகருத்தைக்கண்டுபிடித்து நமக்குஅன்போடு அன்பர் உபதேசித்ததுபேருதவிதான்) என்று பரிகசித்தார். இவ்வன்பர் பாத்மத்திற்சொல்லிய இராமர்வேறு இராமாயணத்திற்சொல்லியஇராமர்வேறு என்றுதெரிந்துளையாடியது எந்தராமர்வந்து இவருக்குநேர்நின்று சொல்லினரோஎன்று யாம்கடாவுதல் கஷ்டமோ? அல்லது இராமாயணத்தைச்சொல்லிய வால்மீகியினதுஉள்ளத்திலும், பாத்மத்தைச்சொல்லிய வியாஸரதுஉள்ளத்திலும் இவர்புகுந்துபுகுந்து பார்த்தே இரண்டிராமர்களைக்கண்டுபிடித்தாரோ என்று யாம் பரிகசித்துப்பதுங்கஷ்டமோ? காரியத்திற்பசையின்றிச் சொல்விரயஞ்செய்து காலப்போக்குச்செய்தல்அபண்டிதர்க்கணியாம். அன்றியும், நமதன்பர் இராமரது

பெண்டை இராவணனபகரித்துக்கொண்டுபோன குறைவையெடுத்துக்கூறியவால்மீகிஅவ்விராமருக்கு ஹத்திவந்ததைக் குறைவாகவெண்ணி, அதனைக்கூறாதுவிடுத்தல் யாங்ஙனமெனவோர்பெரியநியாயங்கண்டுபிடித்துக் கையிலேந்திவந்தார். இராமரது பெண்டை இராவணனபகரித்துக்கொண்டுபோயினனேயன்றி இராவணனது பெண்டை இராமரபகரித்துக்கொண்டுபோனதில்லை. இவருள், இராமரதுபெண்டைஅபகரித்த இராவணனிடமே இழிவுஸித்திக்கின்றது. இராமரிடத்தில் பரிதாபமேஸித்திக்கின்றது. இராமருக்கு ஹத்திஸம்பவித்தவிஷயமோவெனின், இராமர்தலையிலேதானேவிடிந்து இழிவாகின்றது. இராவணனைக்கொன்று இராமர் ஹத்திக்குள்ளானதற்கும், இராமர்பெண்டிழந்துவருந்தியதற்கும் அந்தராந்தரபேதமுண்டாகையால், நம்மவர்கஷ்டப்பட்டுத் தேடியஸமாதானம் காலைவாரிக்கொண்டது.

இவ்வளவிலமையாது, நமதன்பர் வேறுவிசித்திரம்பகர்ந்தனர். அது (தேவியிடம் சங்கைகொண்டு அவளை அக்னியில்புக உத்தரவுகொடுத்தஇராமன் அவ்விடம்வந்திருந்த பரமசிவனைப்பணிந்து இரண்டு வில்வதளம்போட்டுஅர்ச்சித்துத் தன்றோஷத்தையும், மனைவிதோஷத்தையும்நீக்கிக்கொண்டாலாகாதா? நேரில்வந்ததெய்வத்தைவிட்டுச் சிலாமயமான சிவலிங்கத்தைப்பூசிப்பதில் யாது பயன்)எனப்பிரஸங்கித்ததேயாம். பரமசிவனை நேரில்கண்டபோது நீராலும்மலராலும் நெஞ்சுருகப்பண்ணுதலால், தன்னுடைய தோஷத்தையும், சீதையினது தோஷத்தையும் இராமர் நீக்கிக்கொள்ளுதல் சுலபந்தான். அன்னோர்மாட்டுத் தோஷங்கள் விலகினவென்று உலகமறியவேயன்றோ ஸீதையை அக்கினியிற்புகுவித்ததும், தாம் தமதுபேரால் சிவலிங்கத்தைப் பிரதிட்டித்ததும் இராமரிடத்து நைஜதர்மமாயிற்று? நமதன்பர்க்கு இவ்வுண்மையில் விபரீதமுண்டானபடியேயன்றோ நேரில்வந்ததெய்வத்தைவிட்டுக் கல்லாகிய தெய்வத்தை அவர் என் கட்டிக்கொண்டழவேண்டும் என்று விபரீதத்தாற்கடாயினர்.? நினைத்தமாத்திரத்தில் இராவணனைஅழிக்குமாற்றல்வகித்தநாராயணன் கோசலைகர்ப்பத்தில் மானிடனாகப்பிறந்துபெண்டிழந்து குரங்குகளின்காலைக்கட்டிக்கொண்டு பெருமுயற்சியோடு ஏனே இராவணசங்காரஞ் செய்தல்வேண்டும்? சிலாமயமானலிங்கம் என்று அர்ச்சையைஹேயமாகக்கூறியது வைஷ்ணவஸித்தாந்தத்தைநமதன்பர்மறந்தவைபவம்போலும்.அவர்லிங்கத்தைச் சிலையென்று நிந்தித்தமையால், தத்வத்ரயத்தில் "ஈசுவரஸ்வரூபந்தான் பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தரியாமித்வம், அர்ச்சாவதார

ரம், என்றஞ்சுபிரகாரத்தோடே கூடியிருக்கும்" என்னும் வசன த்திற்போந்த(அர்ச்சாவதாரம்)தலையறுபட்டு (ஈசுவரஸ்வரூபந் தான் நாலுபிரகாரத்தோடேகூடியிருக்கும்)எனவன்றோநாட்டுதலைமையும்? நமதன்பர் சைவதூஷணத்திலிறங்கியதுபோதாமல் வைஷ்ணவதூ ஷணத்திலுமன்றோ இறங்கிவிட்டனர்? பாவம்! பாவம்!!

இம்மட்டோ, "இராவணனைக் கொல்லும்படி இராமனுக்கு உத்தரவுகொடுத்தசிவனே அவ்வாறேநடந்த தன்பக்தனுகிய இராம ன்மீதுகுற்றஞ்சாட்டி,தன்குறியாகியலிங்கத்தின்மீதுகுடத்துநீரைக் கொட்டிக் கும்பிடசசொல்லிவிதித்தாரென்பது வெகுநேர்த்தி" என வொன்றுகூறினர். இராமர்அகஸ்தியரது அநுக்ரஹத்தால் சிவனை யுபாஸித்ததனுல் சிவபெருமான்வெளிப்பட்டு இராவணனை ஸம்ஹ ரிக்கத்தக்க வரங்கொடுத்துப்போயினர். அவரவர்கோரியநலங்களைப் பிரஸாதிக்குங்கருணுசாலித்வமேசிவபெருமானிடம்வெளியாகியது. பின்விளைவுக்கேற்ற கர்மமடியாகவே ஒருவனொருகாரியத்திற் பிரவர் த்திப்பதானமையால்,அந்தக்கர்மமடியாகவேஇராமரது இராவணஸம் ஹாரம் பிரஹ்மஹத்திவிளைவும், தந்நிவர்த்தியைத்தேடுஞ்சிவாராதன மும் பிரயோஜனமாயிட ஹேதுவாகியது. தத்வத்ரயத்தில் "கர்ம மடியாகச் செய்கையாலும், மண்தின்றபிரஜையை நாக்கிலேகுறியி ட்டஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனுய்ச் செய்கையா லும்" எனப்போந்த பிள்ளைலோகாசாரியர்வாக்கியம் நமதன்ப ருக்குப் பெரும்பீழையையேவிளைத்தது. நமதன்பருடைய கேள் விகள் கிறிஸ்தவர்கள்வாயில்வழங்குமவ்வளவு ஹேயநிலையினிற்றல் மிகப்பரிதாபமென்க. இவரது யோக்யதையைக் கொண்டாடு வது இவரினத்திற்சேர்ந்து சாபவயப்பட்ட கலிநண்பர்க்கே அமை யும்.ஏனையோர்க்கு அருவருப்பையேயுண்டுபண்ணும். ஏனெனின், விவகாரவொழுங்கின்படி நியாயபாட்டையினின்று வாதம்புரியத் தக்க நமதன்பர்(சிவன்தன்குறியாகிய லிங்கத்தின்மீது நீரைக்கொட் டிக் கும்பிடச்சொல்லிவிதித்தாரென்பது நேர்த்தி) என்றுபேசியது அழகோ? இவரதுதிருக்குத் தருக்குங்கெடுமாறு பின்வெண்பாக்களை வாசித்தடங்குவாராக.

"சாளக்கிராமத்தைச் சற்றுநிதானித்துப்பார்
நீளப்பகக்குறியாம்நின்மாலை—யாளத்தான்
வந்தசிவன்குறியா வைதாயிலிங்கத்தை
எந்தநரகைப் பெறவோவீங்கு.
மாலுமிலக்ஷ்மியு மாதேவனையிலிங்கத்
தேலவருச்சித்திடுதலேற்குமே—நாலுமறை

அந்தோசிவன்குறியைத் தாமேனுவவர்விரும்பித்
தந்தார்மெய்ப்பூசையுறத்தான்’’

இவைகளை இனிதுகவனித்து இன்புறுவாராக. அன்றியும், நமதன்பர் ‘‘உலகமுய்ய லிங்கப்பிரதிஷ்டைசெய்தாரென்றால், அவ்விலங்கையில் செய்யலாகாதா? அயோத்தியிலிடமில்லையா? இராமேசுவரத்திட்டுத்தானு அகப்பட்டது? சாவகாசமாய்ச் செய்யலாகாதா? தம்பிபரதனுக்குத்தந்த தவணைநாளைத்தவறாது கன்றைநாடிவருந்தாய்போல்வருந் தடபுடலவசரத்தில்இச்சிவலிங்கபூசைச்சள்ளையும் வேண்டுமோ? சிவபூசை இலங்கைக்குப்போகையில் செய்ததேயொழியத் திரும்பிவருங்கால்அல்லவென்பீரேல், சேதுபுராணம் அபத்தபஞ்சாங்கமாய்முடியுமே. ஆகையால்,இராமன் சிவபூசைசெய்ததுகட்டுக்கதை’’ எனத் தமது ஸாமர்த்தியத்தையெல்லாங் காட்டினர். இவரது வீண்பிரஸங்கம் அடங்குமாறு யாம்சில கேட்கின்றேம். இவரது தெய்வமாகியஇராமர் இராவணஸம்ஹாரத்தின் பொருட்டேவந்தவராக, ஏனே அவர் இலங்கையில், அல்லது அதற்குஸமீபத்திலெங்காவது பிறவாமல் அயோத்தியிற்பிறந்தார்? வேறுஎங்கும் இடங்கிடையாமற்போச்சுதா ? அயோத்தியைக்காட்டிலும் புண்ணியபூமி அகப்படாமற்போச்சுதா? தூரதேசத்திலேபிறந்து ஏனே அவதிப்பட்டுக்கொண்டு வழியிலேபெண்டைப்பறிகொடுத்துத் திண்டாடிவந்து இராவணஸம்ஹாரஞ் செய்யவேண்டும்? தேவர்களது துன்பநிவர்த்தியைநாடி இராவணவதத்தை விரும்பியவர் உடனேசெய்யாமல் காலதாமசத்தின்பேரில் பல அவதிகளுக்கெல்லாந் தான்ஆளாகிவுருந்தி, அநந்தரம் அதனைச்செய்துமுடித்ததென்னை? தேவர்களது துன்பநிவர்த்தியைநாடிவந்தவர் காடேகதியாய்த்திரிந்து தானொருவழி, தன்பெண்டாட்டியொருவழி, தன்னைப்பெற்றாரொருவழியாகக் கலங்கிநிற்கக் காலங்கழித்ததென்னை? தம்பிபரதனுக்காகத் தவணைதவறாதுவரத்தக்கவர் முன்னதாகவே வேலையை முடித்துக்கொண்டு அலைச்சலின்றிஎன்வரக்கூடாது ? இராமருக்குச் சிவபூசையைக்காட்டிலுமா தம்பிபரதன் சிறந்தவன் ? இராமர் அவனிடத்திலருமைபாராட்டினவராயின், அவன்றன்மையறிந்துவரும்படி அநுமானை அவனிடந்தூதுவிட்டதென்னை? அவன் ஆண்டுவந்தஅரசைத் தன்பக்கல்விடுவானே விடமாட்டானே என்று அவனிடம்ஸந்தேகித்தஅருமையுடையார் இராமனென்று சந்துபண்டிதர் இனியேனும் யூகித்தடங்குவாராக. சிவபெருமான் இராமருக்கு நாதராயுள்ளவர். இராமநாதர் என்னும் உலகபிரஸித்தியைநா

டாமல் நமதன்பர் விசிறிவிளையாடியது என்னமதி? பரதரே தேகப ந்து. வினைக்கீடாகவன்றோ அவனை இராமர்பிரிந்தது? அந்தவினை யேயன்றோ மீண்டுமெவனோடு இராமனைச்சேர்த்தது?இவ்வினைகளைச் சிவனேயன்றோ அவருக்குக்காலமறிந்துகூட்டிப் பொசிப்பித்தனர்? இராமருக்குச் சிவம் அரியபொருளாயிருந்தமைபற்றியே யன்றோ (இராமநாதர்-இராமலிங்கம்-இராமேசுவரம்)என்னுஞ் சாஸநங்களை அவ்விராமர் நிலைபெறுவித்தனர்?இவ்வுண்மைதெளியாது நமதன்பர் தேடிய துச்சஹேதுக்கள் அஸாமஞ்சஸமாயின. அன்றியும்,அவர்ஸே துவிற்சிவபிரதிஷ்டை இராவணவதத்திற்குமுந்தியேயன்றிப் பிந்தி செய்ததின்றெனச் சைவர்கூறுவதாகவருவித்து ஸேதுபுராணத் தைத் தூஷித்தார். முன்னும், பின்னும், எப்போதும் இராமர்சிவ னைப்பூசித்தார் என்று எமதுநாயகரவர்கள்கூறியபகுதியை நமதன் பர் பாராதவர்போல நாடகம்புரிந்துமாழ்கினர். இவர்தாம்அபத்த பஞ்சாங்கக்கடைபரப்பியதை மறைக்கவேபோலும் ஸேதுபுராண த்தை அபத்தபஞ்சாங்கம்என்று நிந்தித்தது? இத்தகைய அவலமான காலக்ஷேபத்தையடக்கி இனியேனும் நமதன்பர் ஸபலமார்க்கத்திற் சஞ்சரித்து க்ஷேமமடைவாராக. இதுநிற்க.

நமதுவைஷ்ணவாக்ரேசர் ''அகஸ்தியர் தத்வத்தில் இராம னுக்குமயக்கந்தீர உபதேசித்தனரென்று அன்பர் எழுதினர். இது மெய்யானால் ஸீதையிருக்குமிடம் இராமனுக்குத்தெரிவித்து, அம் மயக்கமும் அம்முனிவர் தீர்த்துவிட்டிருப்பாரோ" என்று வரைந் தார். அன்றியும், "சிறுவயசிலேயே இராமன் ஸர்வஜ்ஞனென்று சொல்லப்படுகின்றனர். இந்த இராமருக்கு அகஸ்தியரும் உபதே சிக்கவேண்டுமோ?" என அதிசயங்கொண்டாடினர். இவற்றையுங் களைந்தெறிவாம். இவ்வைஷ்ணவபண்டிதர் இராமன்மானிடக்கோ லங்கொண்டதற்கேற்ப நாடகம்புரிகின்றவைென்னுந் தமதுபீடி கையை ஈண்டுமறந்தார். மனுஷ்யராகிய இராமருக்கு அகஸ்தியர் உபதேசித்தது ஸஹஜமேயாம். இதனைமறுத்து.இராமருக்கு ஸர்வஜ் ஞபட்டாபிஷேகஞ் செய்யவந்த நமதுபண்டிதர் ' அவ்விராமருக்கு விசுவாமித்திரபகவான் மந்திரங்களையும், உபஸம்ஹாரமந்திரங்களை யும் உபதேசித்தருளினரெனக்கூறும் வால்மீகியினது வாக்குக்கு என்னகதிதேடினர்? விசுவாமித்திரர் அநுக்ரஹித்தபடியேயன்றோ இராமருக்கு அகஸ்தியரும் அநுக்ரஹித்தனர்? அகஸ்தியரதுகால்களி ல் பலதரம்வீழ்ந்துவணங்கி அஞ்சலியோடுநின்ற இராமருக்கு அவ்வ கஸ்தியர் உபதேசித்தாரென்றால் பரிபவமோ ? அகஸ்தியர்மாத்திர

மேயன்றி வஸிஷ்டருமன்றே அவருக்குத் தத்துவத்தை உபதேசஞ் செய்தருளினர்? அதுவேயன்றே வாஸிஷ்டம் என்று பிரஸித்தியடைந்திருக்கின்றது? இராமர் சிதையையிழந்தகலக்கந்தீரவே அகஸ்தியர் ஞானோபதேசஞ்செய்தருளினர். கர்மமடியாகநின்று இன்னும் வினைப்போகங்களை இராமர்நுகரவேண்டியிருந்ததால் அவருக்குச்சிதையிருக்குமிடத்தை அப்போதேதெரிவியாராயினர். அங்ஙனமவர்தெரிவியாமையால் அகஸ்தியருக்கு அதனைத்தெரிவிக்கும் வல்லபமில்லையென நமதன்பர்கூறுவதுகூடாது. அங்ஙனமேல், இராமர் அகஸ்தியாசிரமத்தையடைந்து யான்வாஸஞ்செய்தற்குரிய இடங்காட்டவேண்டுமென்று கேட்கையில், அவர் இனிநடக்கப்போகிறசங்கதியை ஞானக்கண்ணினாற்கண்டு பஞ்சவடியைக்காட்டினாரென்று கேட்கப்படுவதுவிரோதமாம். சிவஞானது ஐசுவரியயோகத்தால் திரிகாலவர்த்தமானங்களையுமுணர்ந்த அகஸ்தியபகவான் இராமருடையகர்மம்அடியாக எல்லாவிதநலங்களையும் அவருக்குச் செய்யவல்லாரென்க. இவ்வுண்மைகளுக்குவிரோதமாக நமதன்பர் "இராமன் ஹநுமாருக்கும், முனிவர்களுக்கும் பரதத்வத்தை விரித்தார்" என்று ஓராச்சரியமுங்கூறினார். பரதத்வத்தை அகஸ்தியரிடம் இராமர்முன்னரே யுணர்ந்தமையால், அதனையநுஸரித்து அவர் ஹநுமார்முதலினோர்க்கு உபதேசித்திருக்கலாம். அதனால் இராமர்ஸர்வஜ்ஞராயிடுதல்யாங்ஙனம்? ஆண்டுஸர்வஜ்ஞரென்றது உபசாரமாம். அவர்ஸர்வஜ்ஞராயிருந்தே உபதேசித்தனரெனின், கிருஷ்ணசாஸ்திரிஎன்பவர் (அத்ரபூர்வம்) என்றவிடத்தில்(பூர்வம்)என்றது பூர்வகல்பத்தில் என்றுபொருள்கூறியதற்கு இராமர் மானிடக்கோலங்கொண்ட அவசரத்தில் பூர்வகல்பசங்கதியைக்கூறுந் தெய்வத்தன்மையைக் காட்டாராகையால், அங்ஙனம் பொருள்கூறுதல்கூடாது என நமதுபண்டிதர் வாய்மணக்கப்பேசினர். அந்தநியாயம் இப்போது நம்மவர் இராமருக்குஸ்தாபிக்கும் ஸர்வஜ்ஞத்வதர்மத்தை யெதிர்த்துப்போராடுவதைக் கொஞ்சம்யோசித்து காணுவாராக. நமதன்பர் இராமருக்குச் சிவங்கலவாதவுபதேசங்களைத்தனையான்றாலும், எந்தமுனிவர்செய்வதானாலுமொப்புவர். சிவம் என்றால், அவருக்குக்குலைநடுங்குகின்றது. என்செய்வார்பாவம். நமது பண்டிதர் அசைவம்பழுத்தொழுகும் அதிகாரியாயினமையால், அவர் குமார்க்கஸஞ்சாரஞ்செய்வது அவரதுபாவத்தின்பயனென்க.

இப்பண்டிதஸிம்மம் "இராமன் தாரகபரப்பிரஹ்மம் என்றுசொல்லும்இராமதாபினி இவர்வாய்க்குப்பூட்டன்றோ" எனக்கர்ஜித்தது. அன்றியும் "அரன்றிருநாவே இராமநாமத்துக்குஸிம்ஹாஸ

நமென்று சிவபுராணமாகிய காசிகண்டம் முறையிடுகின்றது'' எனவு மொன்றுகூறியது. இவைகளாற்செருக்குற்ற நமதன்பரதுவாய்க்கு யாம்போடும்பூட்டைப்பார்த்து விவேகிகள் ஸந்தோஷிக்கவேண்டிய து.இராமதாபினியில் (சிவமத்வைதம்சாந்தம் சதுர்த்தம்மந்யந்தே) என்னும்வாக்கியத்தால் தாரகப்பொருள் இனிதுவெளியாகியது. மனோரம்யமாயுள்ளபொருள் இராமநாமத்தால்விளங்கும். இந்த மெய்ப்பொருள் சிவமேயாம். இதனால் இராமதாபினியாற்போந்த தாரகப்பொருள் சிவனென்பதேதிண்ணம். விஷ்ணுவினுடைய பரியாயநாமங்களில் இராமநாமமொன்றாக நிகண்டு விற்படிக்கப்படாமையால், அதனை விஷ்ணுவினதுநாமமாக நமது ஐயங்கார்பிரஸ்தாபித்தது அவலமாம். அது விஷ்ணுவினது ஸஹஸ்ரநாமத்திற் படிக்கப்பட்டிருக்கிறதெனின், சிவஸஹஸ்ரநாமத்திலும் அதுபடிக்கப்பட்டிருக்கின்றமையால் பயனின்றென்க. இரண்டினும்படிக்கப்பட்டதொன்றைச் சிவனுக்கேயுரித்தெனல் யாங்ஙனமெனின், அவ்விராமநாமத்தையுபதேசிக்கப்பெற்றவர்கள்சிவசாரூப்பியத்தையடைகின்றமையாலென்க. அதுவிஷ்ணுவினதாயிருந்தால், விஷ்ணுவினுடைய ஸாம்பிராஜ்யத்தையே அதுபயக்கும். முன்னர் அது சிவஸாம்பிராஜ்யத்தைப்பயந்து, பின்னர் விஷ்ணுஸாம்பிராஜ்யத்தைப்பயக்குமெனின், (அங்ஙனங்கூறுதற்குப்பிரமாணமில்லாமையாலும், உடனே ஸம்ஸாரபந்தத்தைத் தாண்டச்செய்யுமாற்ற லதற்கில்லாமற்போகின்றமையாலும், அதனால் அதற்குத் தாரகம்என்னும்விசேடம் அடிப்பட்டுபோகின்றமையாலும் அதுநிரஸ்தம். இந்தநியாயங்களால் சிவபக்தனாகிய தசரதன் தனதுசேய்க்குச் சிவநாமமாகிய இராமநாமத்தை இட்டு அழைத்தான்என்று தெளியவேண்டியது. இவ்விராமனுக்குமுன்னரோ ஜமதக்னிமகனாக ஒருராமனதுபிரஸ்தாபங் கேட்கப்படுகின்றது. ஜமதக்னிமகன்பரசுராமனும், வசுதேவன்மகன் பலராமனுமாம். இடைராமன் இரகுராமனும். இம்மூவரும் விஷ்ணுவினதுஅவதாரங்களாயுள்ளவர்கள். இவர்களைப்பெற்றவர்கள் தங்கள்தெய்வத்தின்பேரைத் தனித்தனி மக்களுக்கிட்டு மகிழ்ந்தார்கள். தசரதராமனுக்குமுன்னரோ ஜமதக்னியினதுசேய்க்கு இராமநாமபிரஸ்தாபமுண்டாயினமையால், அத்தசரதன்சேயையே அதற்கு முக்கியனென்றுகூறுதல் அஸங்கதம். விஷ்ணுவினது அவதாரங்களாகிய பரசுராமனும், தசரதராமனும் ஒருவரோடொருவர் இகலிப் போர்புரிந்தார்களாகையால், அவ்விருவரும் ருத்திரதாரியாகிய சிவனால் ஆட்டப்பெற்ற ஜடப்பதுமைகளென்றே அறியவேண்டிய மேற்போந்த மூன்றிராமர்களேயன்றி அநேகராமர்கள் பின்னு

முதித்ததன்றி இன்னுமுதித்துக்கொண்டிருக்கின்றார்களாகையால், தசரதராமனதுநாமந்தான் தாரகமாயுள்ளதுஎன்னும்வாதம் தலைகவிழ்ந்துபோயிற்று. அன்றியும், இத்தசரதராமர் நேற்றுத்திரேதாயுகத்திற் பிறந்தவர். இராமதாரகப்பிரஸங்கம் வேதத்திலநாதிஸித்தம். காசியிற்சிவனார் தாரகோபதேசஞ்செய்து தமதுஸாரூப்பியத்தைப் பிரஸாதிப்பதும் அநாதிவழக்கு. இவைகளையுணராது நேற்று முளைத்துமாய்ந்துபோன தசரதன்சேயைக்கட்டிக்கொண்டு நம்தன்பர்காலம்போக்குவது அவரதுவினையேயாம். நமதுபண்டிதர்செய்கை (கரும்பிருக்க இரும்புகடித்தெய்த்தது) போலாம்.

இனி அதர்வசிரசில் "ஆத்மஜ்யோதிஸ்ஸக்ருதாவர்த்ததஏவ" என்னும்வாக்கியத்தால் ஆத்மஜ்யோதியை ஆவர்த்திப்பிக்கின்றமையாலும், உச்சாரணமாத்திரத்தில் பாசத்தினின்றுந்தாண்டியுயரச்செய்கின்றமையாலும் ஓங்காரமாகுமென்றும், பரமாத்மாவினிடத்தில் நமஸ்கரிப்பிக்கின்றமையாலும்,சேர்ப்பிக்கின்றமையாலும் பிரணவமாகுமென்றுஞ் சொல்லப்படுவதாக மந்திரராஜமாகிய தாரகமானது பிரஸித்தியடைந்திருக்கின்றது. ஜாபாலோபநிஷத்தில்"அத்ரஹிஜந்தோர்ப்ராணேஷு" என்னும்வசனத்தால் பிராணோத்கிரமணகாலத்தில் காசிப்பதியின்கண், மூர்ச்சிதர்களாகிய ஸர்வபிராணிகளுக்கும் ஸ்ரீருத்ரபகவான் தாரகமாகியபிரணவத்தை யுபதேசிக்கின்றார் என்றுசொல்லப்படுகின்றது. பராசரபுராணத்தில், "தத்ரைவோத்க்ரமமாணஸ்ய" என்னும்வசனத்தால் உமாதேவியாரைப்பார்த்துக் கேவலமாகிய ஜந்துக்களுக்குங்கூடக் காசியில்உத்கிரமணகாலத்தில் வேதவேதாந்தஸாரமானதும், பிரணவம்என்னும் பிரஹ்மமாகிய எம்மை அர்த்தமாகவுடையதும், ஸம்ஸாரத்தைக் கடப்பிப்பதும், பரிபூரணமானதும், மேலானதும், தாரகமானதும், இருளைக்கடந்ததும்,தோற்றமில்லாததும், ஆபாஸத்தைக்கடந்ததுமாகிய எம்முடையரூபத்தைக் கிருபையினாலே பிரஸாதிக்கிறோமென்று சிவன் அருளிச்செய்ததாக வெளிப்படுகின்றது. இவ்வுத்தமபிரமாணங்களால் தாரகமந்திரம் தசரனதுசேயினதாகச் சொப்பனங்கண்டுகொண்டிருக்கும் பாஞ்சராத்திரிகள்கூற்று என்னாகும்? பிரணவந்தான் தாரகம்என்று பிரணவம்என்ற சொல்லாலும், ஓம்என்னுமதன்வடிவாலும் வேதம் அறுதியிட்டுரைத்தமையால், நிர்மூலமாய்ப்போனதாசரதியைத் தாரகமென்றது நிலைகுலைந்ததென்க. தாரகப்பொருளாய்நின்றவரும், தாரகமாகிய தமதுரூபத்தையே அதனையுபதேசிக்கப்பெற்றவர்களுக்கு அளிக்கின்றவரும் சிவபரஞ்சுடராகவே மேற்பிரமாணங்களாற் போதரலால், இவற்றிற்கு விரோதமா

க் கோசலைகர்ப்பத்திற்புரண்டிருந்து குப்புறவீழ்ந்துமடிந்தவோர்சே யை நமதுபண்டிதர் தாரகமென்றதுதலைகவிழ்ந்துபோயிற்று. இந்த விசாரத்தால், தாரகப்பொருள் பிரணவார்த்தஸ்வரூபராகிய ஸ்ரீசிவ பெருமானென்றே நிச்சயிக்கப்பட்டது. இவருக்கே இராமநாம மூர்த்தெனலுமமைந்தது."ராமம்த்ரிணேத்ரிணேத்ரம் ஸோமார்த்த-தாரிணம்சூலிநம்பரம்"என்னும் இராமரஹஸ்யோபநிஷத் வாக்கியத் தையும் ஆய்ந்தடங்குக. இவ்வாறு விசாரித்துணராமல் நமதுபண்டி தர் தலைவிரித்தாடியதுபரிதாபமென்க. நமதன்பர்கூறியபடி தாசர தியே தாரகப்பிரஹ்மமாயிடின்,அவர் எமபுரத்திற்சென்று (யயாதி-பிரதர்த்தன்-ஸோமன்) முதலினோருடன் அவ்வியமனையுபாஸிக்க அவசியமில்லை. அவரை ஆச்சிரயித்திருந்தயாவர்களு மப்போதே தாரகப்பிரஹ்ம தரிசனத்தாலும், அவரது பூசையாலும்,அவரது உப தேசத்தாலும், அவரதுசேவையாலும் மோக்ஷஸாம்பிராஜ்யத்தை யடையத் தட்டில்லை. அவருண் முக்கியராகியஹநுமான் பிரஹ்ம பட்டத்தைநோக்கித் தவங்கிடக்கின்றார் என்று உண்மைநூல்கள் கூறுகின்றன. இந்த ஸாம்பிராஜ்யந்தானோ தாரகப்பிரஹ்மத்தின் ஸந்நிவேசங்கிடைத்தவாழ்க்கைப்பெருநலம்?இதனைக்கேட்பவர் ஒரு முறைக்குப்பலமுறை சிரிப்பார்களென்றுநாணி நமதன்பரொதுங்கி யிருப்பாராக. இன்னும் விரிக்கிற்பெருகும். இதுநிற்க, நமது சிற் றுத்துக்காட்டார் "இராமநாமத்திற்கு அரன்றிருநாவே சிங்காசனம் என்று காசிகாண்டத்திற் கூறுவதாக ஓர் ஸாட்சிகொண்டுவந்தாரன் றோ? மேல்யாம்விளக்கிய தாரகப்பிரஹ்மலட்சணமுணர்ந்தபேர்க்கு இந்தஸாட்சியால் அல்பதுக்கமுமுண்டாகாதென்க. காசிகாண்டம் விஷ்ணுவைக் கடவுளென்றுஸத்தியம்பண்ணியவியாஸரது கையும், நாவும் எழாமல் தம்பித்தகதையைக்கூறுமானால், அது தசரதராமன் பேரை அரனார்சொல்லிக்கொண்டிருக்கின்றாரெனவும், அதனைப் பார்வதியாருக்கும் அவர் உபதேசிக்கின்றாரெனவுங் கூறுமென்பது விந்தையேயன்றோ ? இத்தகையபலவாபாஸங்கள் செறிந்துநிறைந் துகிடைக்கும் பெரும்பெட்டகமாகிய நமதன்பரிடமிருந்து வெளிப் பட்ட அவரதுகைச்சரக்கை உடைத்துப்பரீக்ஷித்துப் பார்த்துவிட் டோம். அவரது விவேகப்பேழையிலடங்கிய ஊழைச்சரக்குகளை மெச்சிநச்சும் ஏழைகள்வினை அந்தோ!கொடிது! கொடிது!! நமதன் பரது கைச்சரக்குகளடங்கியபெட்டியை உடைத்துப்பார்த்ததில் ஒன்றுந்தேறாமையால், அவைகளைவாரிக் குப்பையிற்கொட்டிவிட் டோம். இவ்வுண்மையைப் பகுத்தறியும்ஸாதுக்கள் மத்யஸ்தநிலையி னின்று விசாரித்து க்ஷேமமடைவாராக.

இனி நமது இராமதத்வப் பிரசங்கியார் இராமநாமம் ஆயிரம் விஷ்ணு நாமங்களுக்கு ஒப்பானதென்று கூறினர். அன்றியும், பூர்வீக சைவர்களால் விஷ்ணு திரிமூர்த்திகளி லொருவரென்றும், சிவனடியார்களிற் சிறந்தவரென்றும், அவரே இராமாநுஜரென்றும் பிரஸ்தாபிக்கப்பட் டிருப்பதாகவும், அதற்கு விரோதமாக இராமனை மனுஷ்யர் என்று எமது நாயகரவர்கள் பிரஸ்தாபிப்பதாகவும் உள்ளங்கலங்கி யுரைசெய்தார். இது விந்தையினும் விந்தையாம். பூர்வீக சைவர்கள் விஷ்ணுவைச் சிவனடியார் என்று கூறியபடியேயன்றோ இப்போது நாயகரவர்கள் இராமர் சிவனைப்பூசிக்கும் சிவனடியார் அல்லது சிவஸேவகர் என்று கூறிவருகின்றனர்? சிவனைப்பூசிப்பவர் தேவருமாகலாம், மனுஷ்யருமாகலாம், எந்தஜந்மம் படைத்தவருமாகலாம். விஷ்ணுவுக்குத் தேவகோலமும், இராமருக்கு மனுஷ்யகோலமுங்கேட்கப்பட்டமையால் இராமனை மனுஷ்யரென்று நாயகரவர்கள் கூறியது குற்றமாகாது. விஷ்ணுவை மனுஷ்யர் என்று கூறினரா? அல்லது வராகம், கூர்மம் இவைகளை மனுஷ்யர் என்று கூறினரா? இவைகளை விலங்குகள் எனவேயன்றோ கூறினர்? இவைகளையோசியாது இராமனை மனுஷ்யர் என்று அவர் சொல்லிவிட்டதாக நமது பண்டிதர் துக்கங்கொண்டாடியது பரிதாபமென்க. நாயகரவர்கள் விஷ்ணுவை யோரீஜீவன் என்று கூறியதேயன்றோ நமதன்பர் துக்கிக்கத்தக்கது? நாயகரவர்கடானோ விஷ்ணுவைச சிவன் என்று கூறினவர்? சைவ சித்தாந்தத்தில் விஞ்ஞானகலர்-பிரளயாகலர் - சகலாகலர் என்று மூவித வுயிர்வர்க்கங்கள் பிரஸ்தாபிக்கப் படுகின்றமையால், அப்பசுவர்க்கங்களில் சகலாகலர் என்னும் பசுவர்க்கத்தில் நமது அன்பரது தெய்வமாகிய விஷ்ணுவுஞ் சேர்ந்திருப்பதைச் சைவசாத்திரவாயிலாக மேலோரிடங்கேட்டுத்தெளிந்து நாயகரவர்களிடம் வைத்திருக்குந் துவேஷத்தை இனி அவரொழித்துக்கொள்வாராக. சைவசித்தாந்தமே விஷ்ணுவைப் பசுவென்று ஒப்புமானால் சைவர்கள் ஒப்புவது அதிசயமா? சீவர்கள் தேவருமாகலாம், மனுஷ்யருமாகலாம், எந்தஜந்மம் படைத்தவருமாகலாம். இதனால் இராமர் சிவனையாராதிக்கும் மனுஷ்யவர்க்கத்திற் படிக்கப்பட்டவராயினர். இந்த நியாயங்களால் இராமர் சிவன் அல்லது பசுவும், மனுஷ்யர் அல்லது நாருமாகத் தட்டில்லை. இவ் வுண்மைகளைப் பகுத்தறியும் விவேகம் போதாமையால், நமது ஐயங்கார் சுவாமிகள் வாயில் வந்தனவந்தன பேசத் தொடங்கினர். விஷ்ணு திரிமூர்த்திகளில் ஒருவரலரோவெனின், திரிமூர்த்திகளும் பசுக்களேயாம். ஆகையால், அவருள் விஷ்ணு ஒருவராகி, ஏனை யிருவராய்

யாதைஅன்புகளைநோக்கச் சிவனிடத்திற்பாராட்டிய மரியாதையும் அன்பும் அதிகம். ஒருவன் தான் மரியாதைசெலுத்துமிடங்கள் பல விருக்கும். அவ்விடங்களையெல்லாம் ஸமம் என்று அவனுவது பிற ராவது மதிப்பது கூடாது. ஒருவன் தன்னுடைய இஷ்டனை நமஸ் கரிக்கிறான். அப்படியே பிதாவை நமஸ்கரிக்கிறான். அப்படியே குரு வைநமஸ்கரிக்கிறான். அப்படியே தெய்வத்தையும்நம்ஸ்கரிக்கிறான். இவைகளைப் பகுத்துவிசாரிக்கவந்த ஒருவன் அந்த நமஸ்காரங்களை அவற்றையேற்குமதிகாரிகளுடைய யோக்கியதைக்குத்தக்கவாறுகணி த்து எடுத்து விவகரிக்கவேண்டியது. அதனைவிடுத்து எல்லாரும் நம ஸ்காரம் பெற்றமையால், யாவரும்ஸமம் எனவாவது,தோழன்பக் கல் செய்த நமஸ்காரத்தைப்போலவே பிதாவின்பக்கத்திலும் நமஸ் காரஞ்செய்தமையால்,அத்தோழனைநோக்கப் பிதாவுயர்ந்தவரெனல் யாங்ஙனமெனவாவது, பிதாவின்பக்கல்செய்த நமஸ்காரத்தைப்போ லவே குருவின்பக்கலும் நமஸ்காரஞ் செய்தமையால் அப்பிதாவை நோக்கக் குரு உயர்ந்தவரெனல் யாங்ஙனமெனவாவது, குருவின்பக் கல்செய்த நமஸ்காரத்தைப்போலவே தெய்வத்தின்பக்கலும் நமஸ் காரஞ்செய்தமையால், அக்குருவைநோக்கத் தெய்வமுயர்ந்ததெனல் யாங்ஙனமெனவாவது கடாவுதல் கூடுமோ? நமஸ்காரங்களையேற்ற இஷ்டனுந்தெய்வமும் ஒன்றாகாதபடியும், பிதாவுந்தெய்வமும் ஒன் றாகாதபடியும், குருவுந்தெய்வமும் ஒன்றாகாதபடியும் (நாதம்-பிரஸா தம்-தெய்வதே) என்னும் விசேடங்களைப்பெற்ற சுக்ரீவதசரதர்களும் (மஹான்-தேவன்-பிரஸாதம்-பிரபு) என்னும் விசேடங்களைப் பெற்ற சிவபெருமானும் ஒன்றாயிடுதல் கூடாது. இந்த வியவஸ்தையை யுண ராது நமதன்பர்செய்த ஜாலவித்தை வெளுத்துப்போய்விட்டது. நமதன்பரது பிரஸங்கத்தால் சுக்ரீவதசரதர்களுக்கும் இராமர்தாழ்ந் தவரென்பது அதிகமாகவெளிப்பட்டதேயன்றி அவருக்குச் சிவன்பர மாத்மா என்பது மறுக்கப்பட்டதில்லை. தசரதசுக்ரீவர்கள் இராமருக்கு உயர்ந்தவர்களேயன்றி அவருக்குப் பரமாத்மாஆகார்கள். சிவனர் விஷ்ணுவுக்கே பரமாத்மாவாயிடுதல் ஸித்தமாக, அவர் இராமருக்கு ப்பரமாத்மாவாயிடுதல் அதிசயமோ? இராமர் ஓர்பசுவேயாகையால் தன்னிலும் பெருமைவகித்த சுக்ரீவதசரதர்களாகிய பசுக்களையும், பசுக்களையெல்லாம் அடக்கியாளும் மகாதேவராகிய பதியையும் பூஜ் யர்களாகக்கொண்டது ஸாமஞ்சஸமேயாம்.

அன்றியும்,இராமனைநோக்கச் சுக்ரீவதசரதர்களையே யுயர்வாக க்கொண்டேக்கூறியிருப்பதன்றி அவ்விராமரது பாதஸேவைசெய்திருந்த

வேறு ஆட்களை அங்ஙனங்கூறியதில்லை, சுக்ரீவன் இராமரது பெண்டை இராவணனிடத்தினின்றும் மீட்டுக்கொடுக்கத் துணைபோந்த ஆப்தனாகையாலும், தசரதர் இராமரைப் பெற்றெடுத்த பிதாவாகையாலும் அவ்விருவரும் இராமரையாளத்தக்க ஆதிக்யம் வகித்தவராயினர். அப்பெரியோர்களை இராமர் கௌரவவசனங்களாற் கொண்டாடியது நைஜமேயாம். இராமர் தம்பக்கல் சேவகஞ்செய்யும் அடிமையாட்களை (நாதம்-பிரஸாதம்-தெய்வதே) என்று துதித்திருப்பின், நமதன்பர்சிவன்பக்கலமர்ந்த(மஹாதேவ-பிரசாத-பிரபு)சப்தங்களாற் சிவனுருக்குக் கௌரவமுண்டாக மாட்டாதென்று தொடுத்தவாதம் பயன்படும். அங்ஙனமின்றி உயர்ந்தவிடங்களிலேயே யுயர்ந்த பிரயோகங்கள்இராமராற்செய்யப்பட்டமையால்,சிவனரிடஞ்செய்தவுயர்ந்தபிரயோகங்கள் அச்சிவபரஞ்சுடரை இராமர் தமக்குப் பரமாத்மாவாகக்கொண்டு வழிபட்டாரென்பதையே இனிதுசாதித்துவிட்டன. நமதன்பரது பிரயத்னங்கள்யாவும் ஊஷரபூமியிற் செய்த கிருஷியாயினமையால், அவரிடம் நமக்கு அதிகபரிதாபமுண்டாகின்றது. இனியேனும் அடங்கிவாழ்வாராக. இங்ஙனநிற்க.

நமது ஐயங்கார்சுவாமிகள் (சைவர்கள் மஹாதேவ என்ற பதத்தைச் சிவன் றிருநாமமாக்கி, அதை இடுகுறிநாமம் என்று சொல்லுகின்றனர். நமதன்பரோ அப்பதத்தைக் காரணப்பெயராக்கிப் பெருத்ததெய்வமென்பதெனப் பொருள்கூறிச் சிவமதத்தைக் காக்கின்றனர்.) எனத் திருகுபேசினர். யாம் இவரது உள்ளத்திருக்ககலச் சில விண்டுரைசெய்வாம். மகாதேவபதத்தைச் சிவனரது திருநாமமாக வேதங்கூறுகின்றது. சைவர்கள் அதனைச் சிவநாமமாக்கிக்கொண்டார்களென்று நமது பண்டிதர் கூறியது கொடுமையேயாம். சிவநாமமாகிய அதனை நமதன்பரோயன்றோ சிதைத்து வருணனது நாமமாக்கிடவக்கிலாகப்புறப்பட்டனர்? அட்டமூர்த்தியாகிய சிவனரது ஆகாயவடிவத்திற் சைதன்யமாயமர்ந்த வச்சிவனருக்கேயன்றோ மகாதேவநாமம் வேதத்திற்சிறந்திடும்? நமதன்பர் சமயம்வாய்த்தால் இந்த மஹாதேவநாமத்தை விஷ்ணுவுக்குமன்றோதிருடி முடியிற்சூட்டப்பார்ப்பர்? இந்தத்திருநாமம் மற்றையர்தலையி லேறமாட்டாதென்க. இதனை மற்றையர்தலையி லேற்றப்பார்ப்பது அரசனது மணிமுடியை அன்னது ஆட்கடலைகளிலேற்றப்பார்க்கும் அவிவேகியினது செய்கையோடுதானே பொருந்தும். இம்மஹாதேவநாமம் சிவனுக்கு ரூடியும், யோகமுமாம். பங்கஜம் என்னும்பெயர் தாமரைக்கு ரூடியும், யோகமுமாயிடுதலே இதற்கு நிதர்சனம். இந்தவுண்மையால்

மஹாதேவநாமத்தைச் சிவனுருக்கு ரூடியாகவும் யோகமாகவும், யோகரூடிகளாகவுங் கூறலாமென்க. இந்தநியாயங்களை யநுசரித்து எமது நாயகரவர்கள் தாமெடுத்துக்கொண்ட பிரமேயத்தைச் சாதிக்குமாறு அந்நாமத்தை யோகமாகக்கிரகித்தது குற்றமாகாது. அதனால், அது ரூடிநாமமாதலினின்றுங் கெடாது. சிவனுருக்குரிய இதனை மற்றையர்தலையிற் சூட்டப்பார்ப்பது ஆளின்றலைக்குச்சரிப்படாத அரசனது மணிமுடியை அவசரத்திற்குத் தக்கவாறு சிதைத்து அமைத்துக்கொள்வது போலவேயாம். இவ்வஸம்பாவித நிலையையேயன்றோ நமது அன்பர் கைக்கொண்டு அம் (மகாதேவபதத்தை) வருணன்றலையிலேற்ற வழிபார்க்கின்றார்? இந்த நாமம் வருணனிடத்திலும் யோகமாகஅமைதல் ஏன்கூடாதென்று வினவிய அவரது புத்தியையும், புண்ணியத்தையும் யாம் அதிகமாக வியந்தோம். இனி, விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் சிவநாமம்வந்திருக்கின்றது. அப்படியே சிவஸஹஸ்ரநாமத்தில் விஷ்ணுநாமம்வந்திருக்கின்றது. இவற்றுள், விஷ்ணுஸஹஸ்ரத்தில்வந்த சிவநாமம் விஷ்ணுவுக்கு யோகமும், சிவஸஹஸ்ரத்தில்வந்த விஷ்ணுநாமம் சிவனுக்கு யோகமுமாம். இப்படியே விஷ்ணுபுராண சிவபுராணங்களிலும் யோகநாமங்கள் வரும்வழக்குண்டு. இப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில் பூஜ்யமாகத்தக்க யோகநாமங்களைக் (காத்தவராயன்- சங்கிலிகறுப்பன்) முதலினோரிடத்திலெல்லாம் யோகத்தால் ஸமர்த்திக்கின்றேனென்று ஒருவன் வெளிவருவது (நோன்பென்பது கொன்றுதின்னாமை) என்ற வாக்கியத்திற்கு (ஆமையைக்கொன்றுதின்னு.) அல்லது, (பசுவையும் ஆட்டையுங் கொன்றுதின்னு. அதுவேநோன்பு) என்று பொருள் கூறிக்களிக்குந் துஷ்டபண்டிதனது செய்கையையே ஒக்கும். விபரீதம் போதரவிளக்குமாபாசங்கள் அநர்த்தமென்னும் பெயர் பெற்றழிதலால், நமதன்பர் வருணனிடம் (மஹாதேவ) பதத்தை ஸமர்த்தித்ததும் அவ்வாறே அழிந்து ஸாதுக்களுக்கு வாய்குமட்டலையே புண்டுபண்ணியதென்க. நமதன்பர் (அந்தப்பதம் வருணனைச் சொல்லுகிறதென்பதும் பொருந்தலாமே) என்று வாய்மணக்கப்பேசிய வைபவம் மேல்நியாயத்தால் தலைவிழ்ந்து போயினமையால், அவர்கூறும் ஏனையவிசித்திரங்களையு மினிக் கொஞ்சமெடுத்திசைப்பாம்.

"இப்பண்டிதர் ........ யவகளைச்சுட்டி (இவர் நினைத்தபடி இராமன் மனிதனுகையால் மேனாணவருணன் இவர்க்கு அருள்செய்யவுந் தகுமே. அதைத்தான் இராமன் தன்மனைவிக்குச் சொன்னானென்ப

தாக வென்சொல்லக்கூடாது? இராமர் முன்னடந்ததையெல்லாம் தன் மவிளைக்கு அனுவதித்துவரும் சந்தர்ப்பத்தில் பாத்மத்தில் சொல்லியிருப்பதாகிய சிவபிரசாதத்தைத் தேடி அநுவதித்தா ரென்பதைவிட இந்தஇராமாயணத்தில் முன்னடந்தவருணப்பிரசாததத்தையே அநுவதித்தாரென்று சொல்வது உசிதமல்லவா? வருணன் சேதுபந்தத்திற்குச் செய்த பேருதவியை இராமன் தேவிக்குச சொல்லவேண்டுவதும் அவசியமல்லவா) என விஸ்தாரம்பேசி விசிறிவிளையாடினார். அதிசகஷ்டமெடுத்துக்கொண்டு கேள்விகளை யுண்டுபண்ணிய நமதன்பர் கொஞ்சங் கூர்ந்துபார்த்தால் அவருக்கே சமாதானம் பிறந்திருக்கும். அவருடையபுண்ணிய மதற்கிடங்கொடுக்காமையால், அவசரப்பட்டு வெளிவந்துவிட்டார். இனி அவற்றை முறையே யாம் பரிகரித்திடுவாம். மனிதனாகிய இராமனைக்காட்டிலும் வருணன் மேலானவனாகையால், அவன் இராமனுககருள்செய்யலாமன்றோ வென வுடன்பட்டவர் அவ்வருணன்முதலிய யாவரினும் மேலாகிய சிவனார் இராமருககு அருள்செய்தாரென்பதை ஏனோ விரோதித்தனா? சிவனை இராமர் பூசித்தாரென்பதை விரோதித்து அவர் வருணனைப் பூசிததாரென்று நமதனபரொப்பியது ஒருவன் காமதேனுவை வணங்கக்கூசிக் கழுதையின்காலில்வீழ்ந்த கதையோடொக்குமென்க. அன்றியும், நமதன்பர் இராமன்வருணனைப்பூசித்த சங்கதியை அவர்தன் மனைவிக்குச் சொன்னாரென்பதாக ஏன் சொல்லக்கூடாதெனக் கடாயினாரன்றோ? அவ்வருணனைக்குறிக்கும் பிரதிபதங்கள் நிகண்டுவிற் பலவுளவாக, அவனதுபேராகாத மகாதேவசப்தந்தானா வான்மீகிக்கு அகப்பட்டது? வான்மீகிபகவானது திருவாக்கில்(மகாதேவசப்தம்)உச்சரிக்கப்பட்டிருக்கும்ஸந்தர்ப்பங்கடோறும் சிவபெருமானையேயன்றி வேறு எந்தநிருஷ்டர்களையும் அதுஉணர்த்தினதில்லை. இங்ஙனமாக, இராமராற்கோபிக்கப்பட்டு அவரால்பிராணபிச்சையேற்றுப்பிரஸாதிக்கப்பெற்ற வருணனை மகாதேவர் எனக்கூறி அவன் இராமருக்குப் பிரஸாதித்தான்என்று சாதிக்க நமதன்பரொப்பியது பேராச்சரியமேயாம். நமதன்பர் (மகாதேவ) பதத்தை வருணனிடம் அநுவாதஸ்தானத்திற் கிரகித்தார். அப்படியே புரோவாதஸ்தானத்திலும் அதுசித்தித்திருப்பின், ஐயங்காரது எடுப்பு இடுப்பொடியாது நிற்கும். அங்ஙன மின்மையால், அவரது பிரயத்னம் நிஷ்பலமாயிற்று. புரோவாத அநுவாத சந்தர்ப்பங்க ளிரண்டினு மொரேபதம் வருதல் ஆவசிகமன்றெனின் (மகாதேவசப்தம்) வருணனை யெளிதினுணர்த்துமாயின் அது சிறக்குமென்க. அது சிவபெருமானையே யெளிதினுணர்த்துகின்றமையாலும், அதனை வருணனுக்குத் திருப்புவது

கிலுஷ்டகல்பனமாகின்றமையானும் அந்தப்பதம் அநுவாதஸ்தானத்திலிருப்பதுபோல் புரோவாதஸ்தானத்தி லிருந்தாலன்றிப் பூர்வபட்சியாரதுமதம் நிலைபெறமாட்டாதென்க. இனி, நமதன்பர் முன்னடந்த விஷயங்களை யெல்லாம் சீதைக்கு இராமர் அநுவாதமாகச் சொல்லிவந்தாராகையால், வருணப்பிரசாதம் தாமடைந்ததையும் அப்படியே சொல்லியதாக நாம் ஒப்பவேண்டியதன்றோவெனப் பேசியதையும் யோசிப்பாம். இராமர் வருணனை நோக்கிப் பிராயோபவேசஞ்செய்திருந்தகாலையில், அவன் வெளிப்படாது இராமனை அலட்சியஞ்செய்தான். இது புரோவாதஸ்தானம். இந்த ஸந்தர்ப்பத்தில் அவ்வருணனை ஜடன், மடவோன், கொழுத்தவன், தீயோன், நீசன் என்று வால்மீகிபகவான் பிரஸ்தாபித் திருக்கின்றனர். இத்தகைய ஈனனையோ அவர் மகாதேவ சப்தத்தா லநுவாதஞ் செய்து வரம்பையழிப்பர்? இவனையோ இராமருக்குப் பிரஸாதிக்கும் யோக்கிய முடையவனாகக் கூறுவர்? இவனுடைய துன்மார்க்கம் அடங்க என்னுடைய கூரியகணைகளைத் தொடுக்கிறேன் பாரடா தம்பி லட்சுமணா என்று இராமர் ஸந்நாஹமானபோது அவ்விராமரது காலில்வந்துவிழுந்து அபயம் என்றடைந்த வருணனை இராமருக்குப் பிரஸாதித்தான் என்று நமது ஐயங்கார் துணிந்தது அத்தாசரதியினது பாவமென்றே யோசிக்கின்றோம். நமதன்பர் கூறியவாறு சீதையிடத்தில்அநுவாதமாக இராமர்வருணபிரஸாதஸித்தியைக் கூறியதுண்டெனின், அவ்விடத்தில் தாம் மூன்றுநாள் பிரயோபவேசஞ் செய்திருந்ததும்,வருணன் அகங்கரித்து வராம லிருந்ததும்,அவனைச் சிட்சிக்க ஸந்நாஹப்பட்டதின்பேரில் அவன்வந்து பிராணபிச்சை பெற்றதும், அநந்தரம் அவன் தமக்குக் காரியசாதகம் செய்ததுமாகிய யாவும் முக்கியாநுவாதமாக வெடுத்தோத லவசியம். ஏன் இவற்றை யநுவாதஞ்செய்யவில்லை? வருணனுக்குப் பிராணபிச்சை யளித்த தமது ஆற்றலையும், அருளையும், சீதையினிட மெடுத்துரைத்தல் அவசியமல்லவா? இவைகளைச்சொல்லாமல் துன்மார்க்கஞ்செய்தவனை எனக்குப் பிரசாதித்தான் என்று இராமர்கூறினரென்பது கேவலம் அஸங்கதமென்க. அதவா அதனைச் சொல்லுவதாயிருந்தால், (இந்த இடந்தான் வருணனுக்கு நான் பிராணபிச்சையளிக்க, அவன் எனக்கு ஏவல்செய்து பிழைத்தது)என்றுஅநுவாதஞ் செய்யலாம். அங்ஙனமொன்றுமில்லாமையால், சிவனரது நாமமாகிய மஹாதேவபதத்தைச் சிதைத்து வான்மீகிபகவான் வருணனைப் பிரஸ்தாபித்தாரென்று வீண்வம்பு பேசியது அவரதுவினையின்பயனேயாம். இந்த வண்மையால்,வருணனதுபிரசாதத்தை இராமர்சீதை

யுடன் சொல்வது அவசியமல்லவா? என நமதன்பர் வினவிச்செ ருக்கியதும் விருதாவாயிற்று. ஆயின், பாத்மத்திற்போந்த சிவபூசை யை இராமாயணத்தில் புரோவாதமாகப் பிரஸ்தாபியாத தென்னை யெனின், புரோவாதபிரஸங்க மில்லாமையாலேயே அநுவாதப்பிரஸ ங்கத்தை யொப்பமாட்டோமென்றது கூடாது. ஏனெனின், இராமர் அநுமானிடம் மோதிரங்கொடுத்து ஸீதையிடம் அனுப்பினார். இவர் அயோத்தியினின்றும் புறப்படுகிறபோது ஸர்வவஸ்திரபூஷணாலங் காரங்களையும் அறவேவர்ஜித்து மரவுரிதாங்கி வெளிப்பட்டார். ஒரு ஆபரணமும் கையிற்கொள்ளாமல் காடுபுகுந்த இராமர் அநுமா னிடத்தில் மோதிரங்கொடுத்த அநுவாதத்திற்குப் புரோவாதமெங்கே? அதனது புரோவாதம் இராமாயணத்திற் பெறப்படாமையால் அநு வாதம் பொய்யாதல் யாங்ஙனம்? இந்த நுட்பமுணர்ந்தபேர்க்குப் பாத்மத்திற் போந்த மகாதேவப்பிரஸாதம் இராமாயணத்திற் போந்த மகாதேவப்பிரஸாதத்திற்குப் புரோவாதமாகுமென்று கூறிவதிலோ ராக்ஷேபமு முண்டாகாதென்க. இஃதொன்றேயன்றிப் புரோவாத த்தை யபேட்சியாத அநுவாதங்க ளிராமயணத்தி லின்னும்பலவுள. இந்தவியவஸ்தையால் (அபூர்வம்) என்னும் இராமவசனத்தாற் பெறப்பட்ட மஹாதேவப்பிரஸாதம் சிவனாரிடத்திலேயே முடிந்து, அவ்விராமர் சிவஸேவகர் என்பது கண்டாகோஷமாகச் சாதிக்கப் பட்டது. விரிக்கிற்பெருகும்.

இனி, நமதன்பர் (இராமன் எப்போதுஞ் சிவபூசைசெய்தா ரென்று அன்பர்சொல்லும்புலம்பல் சாட்சியற்றது) என்றுபுலம்பி னார். இராமஸஹஸ்ரநாமத்தில் (சிவபூஜாரதச்சைவ) என்று படிக்கப்ப ட்டிருப்பதை அவர் தமதுஞாபகத்திற்கொண்டுவராமல் தடுமாறிவிட் டார்பாவம்! இந்தஸஹஸ்ரநாமம் அவரது சொந்தபிரமாணமேயன் றி வேறில்லை. அன்றியும், உத்தரராமாயணத்தில், பரதலட்சுமணா களைக்குறித்து (சைவபச்யாமிபேஷஜ்யமந்தரேண வ்ருஷத்வஜம், தஸ் மாத்யஜ்ஞேந்மஹதா பூஜயாமோமஹேச்வரம்) என்று இராமபத் ரர்கூறிய சிவாராதநகதநத்தையும் நம்மவர்கவனித்து நாணுவாராக. அன்றியும், புலம்புதற்றொழிலெமக்கின்றெனவும், அது அவரதுஇராம ராஜாவுக்கும், ஸீதைக்கும் அவருக்குமே சொந்தமெனவும் அறிவது அதிசயமோ? பாத்மத்தில்இராமசந்திரனைப்பிரஸ்தாபித்து "பூதிபூஷித ஸர்வாங்கோ ருத்ராக்ஷாபரணைர்யுத:" எனவும், "அர்ச்சயித்வா வந்ய புஷ்பை:" எனவும், "பஸ்மச்சந்நோபஸ்மசாயீ" எனவும் வர்ணித்திருக் கும் அவரது சைவதர்மங்களை யறியாதுபார்த்து 'இனிவாய் திற

ப்பாராக. இம்மட்டோ, இராமர் விஷ்ணுவைப்பூசித்தாரென்பது மாத்திரம் இராமாயணத்தில் பிரஸ்தாபமுண்டு என அவர் உள்ளம்பூரித்தார். இராமர் நவக்ரஹபூசைசெய்த ஸ்தானம் (நவபாஷாணம்) என்னும் பிரஸித்தியடைந்திருக்குமானால், அவர் விஷ்ணுவைப் பூசிக்கவில்லையென்று ஏனோ யாம் மாரடித்துக்கொள்ளவேண்டும்? அவர் ஓர் மனுஷ்யரேயாகையால், அவருக்கு எல்லாவழிபாடுகளும் அவசிய மாயினவென்க. இங்ஙனநிற்க.

நமதுபண்டிதர் (இராமன்பழிதுடைக்கச் சிவனைப் பூசித்ததை வால்மீகி ஏன்சொல்லவில்லை என்ற கேள்விக்கு இராமனுக்குப் பழி சொல்வது இழுக்காகுமென்றுநினைத்துச சொல்லவில்லையென்று எழுதினவர் இராமன் சிவபூசைசெய்ததற்கு ஸாட்சியமாக (அத்ரபூர்வம்)என்றசுலோகத்தைக் கைக்கொண்டது விருத்தமல்லவோ)என்று பூர்வோத்தரவிரோதங்களைக் கண்டுபிடித்தார். எமது நாயகரவர்கள் இராமனுக்குப்பழிசொல்வது இழுக்காகுமென்று பிரஸ்தாபித்தாரேயன்றி அவ்விராமருக்குச்சிவபூசைசொல்வது இழுக்காகுமென்று பிரஸ்தாபித்ததில்லை. அன்றியும், (அத்ரபூர்வம்) என்னும் வசனம் இராவணஹத்தி நிவிர்த்திக்காகப்பிறந்தது எனவும் நாயகரவர்கள் பிரஸ்தாபித்ததில்லை. அத்ரவபூர்வம் என்னும் வசனத்தால் சிவாராதனஸித்தி கேட்கப்படுவதால், அப்படியே ஹத்திநிவிர்த்தியர்த்தம் (இராமருக்குச சிவபூஜாலப்தமும்) வால்மீகிசொல்லாததுகொண்டே அவரது ஹ்ருதயமாகாமற்போகாது என்பதையே நாயகரவர்கள் விளக்கினர். அதனையுய்த்துணரும் யோக்யதைபோதாது நமதுபண்டிதர் அங்ஙதாகிரகித்தது அவரது விவேகத்தின் குறைவேயாம். இது நிற்க.

நமதன்பர் (இராமன்செய்த ஸேதுவினுடையதரிசனமே மோக்ஷ ஸாதநமென்று ஸேதுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸேதுதரிசனத்தைப் பாவத்திற்குப்பிராயச்சித்தமாகப் பராசராதிகள் விதித்திருக்கின்றார்கள். எஜுர்வேதம் ஸேதுதரிசநம் பாபநிவாரதமென்று சொல்லுகின்றது. ஸேதுதரிசநம் பிரஹ்மஹத்தி முதலான பாபங்களைப் பஞ்சாய்ப்பறக்கச்செய்கின்றது என்று முனிவர்கள்கூறுகிறார்கள். பாவந்தொலைய இராமஸேதுவைப்பார்க்கும்படிச் சுருதி கூறுகின்றது) எனச்சிலகூறி, இந்தஸேதுவைக்கட்டிய இராமனை எங்ஙனே பிரஹ்மஹத்திவந்துசேரும் எனத்தருக்கினார். நளன் சரிதையைக் கேட்டவர்களுக்குக் கலிபீடைநணுகாதென்று வைதிகநூல்கள் கூறுகையில், அந்நளனுக்குக் கலிஎப்படிவந்தது என்று வினவலா

மோ? நளனுக்குக்கலிவந்ததுபோலவேயன்றோ இராமருக்கு ஹத்தி தோஷம்வந்தடைந்தது? கலிபீடையால்வருந்தி நிவிர்த்தியடைந்த வன் சரிதமாகையால் அதைச்சிரவணம்பண்ணுதல் கலிதோஷநிவர்த் திக்குக்காரணமாகும். ஹத்தியால்வருந்தி நிவிர்த்தியடைந்தவன் கட் டிய ஸேதுவாகையால், அதைத்தரிசித்தல் ஹத்திதோஷநிவிர்த்திக் குக் காரணமாகும். நளன் அரசனானபடி இராமரும் ஓரரசனாகை யால், இருவர்தன்மையுமோரளவின்முடிந்தது. அவ்வளவேயன்றி, பாபமெய்தாத பரிசுத்தத்வமுடைய அமலமூர்த்தியாக இராமனை நமதுபண்டிதரொப்பியது தப்பிதமென்க. நமதுசிற்றுத்துக் காட் டார் காட்டியவசனங்கள் அவரதுகட்சியைஸ்தாபிக்க வுபயோகப் படாம லொதுங்கிப்போயினமையால், அவரவற்றைத் திலதர்ப்ப ணம்பண்ணக்கடவர். அன்றியும், நமதன்பர் முதற்கட்காட்டிய ஸேதுபுராணத்தில் இராமர் ஹத்திநிவிர்த்தியர்த்தம் ஸேதுவிற் சிவ பிரதிஷ்டைசெய்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத்துக் கம் பொறுக்கமாட்டாமலே நமதன்பர் தமது ஆபாஸக்களஞ்சியத்தில் ஸேதுபுராணப்பிரஸ்தாபம் வந்தபோது அதனை (அபத்தபஞ்சாங்கம்) என்று தூஷித்தார். அதனையீண்டுமறந்து அந்த ஸேதுபுராணத்தை யே இராமரது பரத்வஸமர்த்தனத்துக்கு ஆதாரவாகத்தேடினார். பிர ஹ்மஹத்திபிராப்தமாயினவராக இராமரைப்பிரஸ்தாபித்தஅந்தப்புரா ணம் அவரைப் பரமாத்மாஎனவாவது, அவருக்குஸ்வபாவமாகப் பரிசுத் தத்வமுண்டெனவாவது, அந்தப்பரிசுத்தமே ஸேதுமஹிமைக்குக் கா ரணம் எனவாவது கூறுதலுமுண்டோ? சிவபிரதிஷ்டைகாரண மாகவே இராமருக்கும், ஸேதுவுக்கும் பரிசுத்தத்வத்தை ஸேதுபுரா ணம் ஒப்பிப்பிரகாசப்படுத்தியதென்க. இந்நியாயங்களால் பூர்வ பட்சியாரது பிரயத்னம் நிஷ்பலமேயாம்.

இவ்வளவில்மையாது, நமதுஐயங்கார் (இராவணனும் பிராஹ் மணனோ? பிராம்ஹணியம் ஆசாரத்தினாலோ? க்ஷேத்திரமகிமையி னாலோ? பிறந்தகாலத்தின் மகிமையாலோ? பிரம்ஹ பீஜத்திற்குண் டானதாலோ? மதுவையும் இரத்தத்தையுங்குடித்து, முனிவர்களை அடித்து, மாம்ஸங்களையுண்டேதடித்து, பிறர் பெண்டிர்களைப்பிடித்து இருந்த இராவணனை ஆசாரத்தினாலே வேதியனென்று நமதன்பர் சொல்லமாட்டுவாரோ? சுமாலியென்கிற அரக்கன்மகளாகிய கேகஸி என்கிற நீசக்ஷேத்திரத்திற்பிறந்த இராவணனை க்ஷேத்திரமகிமையை ப்பற்றி வேதியனெனத்தகுமோ? அசுரவேளையிற்பிறந்த இந்த அரக் கன் காலமகிமையினால் வேதியனாவதெங்ஙனம்? பிரம்ஹபீஜத்துக்

குப் பிறந்தமையால் பிராம்ஹணன் என்றால், வேதியன் பீஜத்து நச் சூத்திரமாதினிடம் பிறந்தவனும் வேதியனாகவேண்டுமல்லவோ அசுரனாகிய ஹிரண்யகசிபுவினுடைய அம்சத்தினாலேபிறந்த இராவணன் அமிசத்தினாலே வேதியனாவானோ? விச்ரவஸ் என்பவருடைய தபோமகிமையால்இராவணன்பிறந்தானாகையால் அம்முனிவர்போல அந்தணனென்பீரேல், வஸிஷ்டமுனியின்தவவல்லமையினால் காமதேனுவிடம்பிறந்ததுருஷ்கர்களும் வேதியர்களாக வேண்டுமே இவனதுதாய் முறைப்படி விவாகஞ்செய்யப்பட்டவளோ ? முனிவரது வீரியத்திற்குத்தான் இவன்பிறந்தானோ ? கேகஸி வயிற்றிலே முனிவர்தொட வந்தவனென்றல்லவா இவனைச்சொல்வது ? இவன் பூதப்ரேத பிசாசாதிகளைப்போல் தாமஸதேவதையென்று சொல்லப்படுவான். ஆகையால், இவனுடையவதத்தில் இராமனுக்குத் தோஷம்வாராது) எனப்பிரஸங்கித்து இடருழந்தார். இவரதுபிஞ்சுஞானத்தைப் பெயர்ந்தேகச்செய்து எமதுஸத்தியத்தை நிறுத்திவாம்.

இப்பாஞ்சராத்திரபண்டிதர்இராவணனைப் பிராம்ஹணனல்லவென்று சாதிப்பதற்கு அதிகஷ்டமெடுத்துக்கொண்டார். பூர்வயுகங்களில் மதுமாம்ஸங்களைப் பிராம்ஹண ஸ்ரேஷ்டர்களெல்லாம் ஆசரித்திருந்ததாக(கசசுக்ரப்பிரஸங்கம்—வாதாபிவில்வலப்பிரஸங்கம்) இவைகளால் வியக்தமாகின்றமையால், இராவணனை ஆசாரத்தினால் பிராம்ஹணனாகமாட்டான் என்று தொடுத்தவாதம் தோல்வியடைந்தது. அகஸ்தியாதிகள் மனுஷ்யமாம்ஸங்களை இராவணனைப்போலுண்டார்களோவெனின்,ஆசாரலோபமென்பது எல்லாமாம்ஸங்களுக்கும் பொதுவாகையால், அஜமாம்ஸம், கோமாம்ஸம், அசுவமாம்ஸம் மனுஷ்யமாம்ஸம் என்றுபிரித்து வாதாடுவது வாயாடுவதாகவேமுடியும். தேவதாபிராம்ஹணர்கள்,இராக்ஷஸபிராம்ஹணர்கள், மாநுஷபிராம்ஹணர்கள் எனப்பிராம்ஹணபேதமுண்டாயினமையால்,இராக்ஷஸபிராம்ஹணனாகிய இராவணன் மநுஷ்யமாம்ஸம்புசித்தது ஆசாரலோபமாகமாட்டாது. அதனால், அவன்பிராம்ஹணனாகாமற் போகான். சிவன்பிராம்ஹணன்,விஷ்ணுக்ஷத்திரியன், பிரம்ஹாவைசியன் இந்திரன்சூத்திரன் என்னும் பாகுபாட்டினாலும் இராக்ஷஸபிராம்ஹணத்வம் இராவணனிடத்தில் நிலைதளராது நின்றது. இப்போதும் உலகில் (மத்ஸ்யபிராம்ஹணன்) பிரஸித்தியா யிருக்கிறார்கள். அவர்களுக்குப் பிராம்ஹணத்வம் ஒழிக்துபோகவில்லை. இவைகளைமதுபண்டிதர்யோசித்துப் பதில்சொல்லக்கடவர்

இனி,வியாஸர் மத்ஸ்யகந்தியினிடம்பிறந்தது ஸித்தம். ருஷ்ய சிருங்கர் மான்வயிற்றிற்பிறந்தனர். கர்க்கர் கழுதைவயிற்றிற்பிறந்தனர். இன்னும்பலமுனிவர் பலவாறு பிறந்தார்கள். இவர்கள்பிறந்த க்ஷேத்திரங்கள் பிராம்ஹணக்ஷேத்திரங்களாகாமையால்,இவர்களும் பிராம்ஹணராகார்களோ ? இவர்கள் பிராம்ஹணராகாதபோதன்றோ கேகஸிவயிற்றிற்பிறந்த இராவணனும், பிராம்ஹணனாகாமற் போவான்? நீச்சஸ்திரீயாகிய மத்ஸ்யகந்திமகனார் பிராம்ஹணரும், கேகஸியினது பிள்ளை அப்பிராம்ஹணனுமாயிடுதல் (பட்சம் நியாய மறியாது) என்னும் பழமொழியையே பற்றிநிற்கின்றது. இந்தரிஷிகளையே நமதுஐயங்கார் தாமுமொருபிராம்ஹணரென்பதற்கு மூலமாகவொப்பியிருக்கின்றமையால்,க்ஷேத்திரத்தினால்பிராம்ஹணராகாத இன்னோருகதியையன்றோ இவருமடைந்து பிராம்ஹணராகாதொழிந்தனர்?இராவணனைப் பிராம்ஹணனாகான் என்று சாதிக்கவெழுந்தபாவம் இவர்தலையில்வந்தேறி இவரையே பிராம்ஹணராகார் என ஸ்தாபித்துவிட்டது. இனியேனும் யோசித்துப்பேசுவாராக.

இனி இராவணன் ஸந்தியாகாலத்திற்பிறந்தமையே இராக்ஷஸ பிராம்ஹணனாயினமைக்குக் காரணம். இதனாலும் பிராம்ஹணத்வம் அவனைவிட்டொழிந்ததில்லை. இதனால்,காலத்தினால் அவன் பிராம்ஹணனென நமதன்பர் கடாயினது வெறுங்கத்தாக முடிந்தது.

இந்த வியவஸ்தையால், நமதன்பர் தேடிய கட்சிகளொவ்வொன்றும் நசித்தன. இனி, அவர் (பிராம்ஹ பீஜத்திற்குப் பிறந்ததையாம் பிராம்ஹணன் என்றால்,வேதியனுக்குச் சூத்திரமாதினிடம் பிறந்தவனும் வேதியனோ) என்று கடாவியதையும் எமது நியாயகட்சத்தாற் சேதிப்பாம். வசிஷ்டருக்கு நீச்சமாதினிடம் பிறந்த சக்தியென்பவர் பீஜத்தினாற் பிராம்ஹண சிரேஷ்டரானபோது பிராம்ஹணபீஜமாகிய இராவணன் க்ஷேத்திரதோஷத்தினால் பிராம்ஹணனாகானென்பது யாங்ஙனம்? நமது பண்டிதர் இந்தக் கலியுகமரியாதையைப் பூர்வயுகங்களுக்கும் பொருந்தினதாக வாதாடுகின்றார். இது அஸம்பாவிதமென்க. அன்றியும், அவர் இராவணன் அசுரனாகிய இரணியகசிபுவினது அமிசத்தினாலே பிறந்தானாகையாலும் பிராம்ஹணனாகமாட்டான் எனவொன்று கூறினார். இரணியகசிபு விஷ்ணுத்வாரபாலகரது அவதாரமாயுள்ளவன். அன்றியும் கசியபப்பிரஜாபதிக்கும், தக்ஷனதுமகளாகிய திதிக்கும் பிறந்த சுத்தனாயுள்ளவன். இவனது அமிசத்தாற்பிறந்ததனால் இராவணனுக்குப் பிராம்ஹணத்வமில்லாம

ற்போக இடமில்லை. இராவணன் மஹரிஷிவீரியத்தினாற்பிறந்தவன். இ
தனை மறைத்து, மஹரிஷியாகிய (விசிரவஸ்) கேகசியினது வயிற்றைத்
தொட, அதனால் இராவணன் உண்டானான் எனவும், அவனது தாய்
முறைப்படி விவாகஞ்செய்யப்பட்டவளோ எனவும் நமது பண்டிதர்
விவகரித்தது அவர்பால்வீசும் விபரீதமணத்தின்விர்த்தியென்க. அவரை
யாம் சிலகேட்கின்றோம். இராமபத்ரர் தசரதனது வீரியத்தினாலோபிற
ந்தனர்? யாகத்தினின்றும் பூதம் வெளிப்பட்டு, அது கொடுத்த பாயச
த்தினாலன்றோ அவர்பிறந்தனர்? தசரதனது வீரியத்தினாற் பிறவாத
இராமர் தாசரதியாகிறபோது மஹரிஷியினது வீரியத்தால், அல்லது
பண்டிதரது ஸித்தாந்தப்படி, கேகஸியினதுவயிற்றை முனிவர்தொட்
டதனாற்பிறந்த இராவணன் பிராம்ஹணனாகாதவிதம்என்னை? அன்றி
யும், பராசர் மத்ஸ்யகந்தியை மணவாதுகலந்து வியாசரைத்தந்தநலத்
தைத் தூஷிக்கவேபோலும் (கேகஸியை) இவள்முறைப்படி விவாகஞ்
செய்யப்பட்டவளோ என்று நமதன்பர் வினவி மகிழ்ந்தது? இந்
தத்தூஷணங்கள் நமது பண்டிதரது பிதாமகர்களிடத்திலேயே செ
ன்றடைதலால், இவர் இராவணனைத்தூற்றிய யாவும் இவருடைய
பாக்யங்களாகவே முடிந்தன. வஸிஷ்டரது தவவலியாற் காமதேனுவி
னிடம்பிறந்த துருஷ்கர்களை இராவணனுக்குபமானமாக நம்மவர்
கொண்டது உபமானஸாத்ருசமாகாமையால், ஐபங்காரது கொடுமை
யைத் துருஷ்கர்களது கொடுமையினும் மிஞ்சினதான விசனப்படுகி
றோம். நமதன்பர் விசிரவஸ் என்பவர் கேகசியினது வயிற்றைத்
தொட்டதனால் இராவணன் பிறந்தானேயன்றி அவரது வீரியத்தி
னாற் பிறந்தானோ என்று கேட்டதை இங்குக் கொஞ்சம் விரித்துரை
ப்பாம். கேகசியினது வயிற்றை விசிரவஸ் என்ன கருத்தோடு பரிசித்
தார்? மற்றை அங்கங்களைத் தொடாமல் வயிற்றைத்தொடுவானேன்?
ஒருவன் ஒரு பெண்ணினது வயிற்றைத் தொட்டுவிடுவதனாலேயே
அவள் கர்ப்பமாய்விடுவளா? இவ்வநுபவ மிப்போது உலகினிகழு
மா? இங்ஙனங்கூறுவார் பித்தர் எனவேயன்றோ உலகம் ஏசும்? இவ்
வஸம்பாவிதத்தை நம்மவர் இராவணனது உற்பத்திக்கு ஆதரவாகத்
தேடியதை நாமெங்ஙனமொப்புவது? இதனால் இராவணன் பிறக்க
வில்லை யெனவேயன்றோ கூறவரும்? இதற்கு நம்மவர் பூர்வயுகசரித்
திரங்களையே யொப்படைக்கத் தேடுவார்போலும். ஏனோ இவருக்கு
இவ்வளவு கஷ்டம்? அதவா இவர் கூற்றின்படி (வயிற்றைத்தொட்
டார்) என்பதமையுமேனும், கேகசியினது கர்ப்பத்தில் ஸந்தானமுண்
டாகும்பொருட்டு வீரியஸ்பரிசஞ்செய்தார் என்றுகொள்ளலே அமை
வுடைத்து. நமதன்பர் எத்தனைகாரணம்போட்டுப்பார்த்தாலும் இரா

வணனைப் பிராம்ஹணனல்லவென்று சாதிக்கமுடியாது. பிராம்ஹண னைப் பிராம்ஹணனல்லவென்று தூஷிப்பவன் பிராம்ஹணனாகமாட் டானாகையால், நமதன்பரது பிராம்ஹணத்வமே சங்கிக்கத்தக்கதாயி ற்று. இஃதுநிற்க.

நமது பண்டிதர் இராவணனது ஆசாரலோபத்தைப் பிரஸ்தாபி க்கையில், அவன் பிறர்பெண்டீரைப் பிடித்து, காமநூலைப்படித்து அழிந்தவன் என்று தூஷித்தார். ஜலந்தரன்பெண்டைக் கற்பழித்துக காமாந்தகாரத்திற் படிந்துகிடந்த வாசுதேவனது யோக்யதைக்குமுன் னர் இராவணன் துர்மார்க்கனாத லெங்ஙனம்? நாரதபர்வதர்களுக்கு நடுவேமுளைத்து அவர்கள்விரும்பிய விமலையென்பவளைக் காமத்தி னாற் கவர்ந்தோடிய கள்வனில் இராவணன் அயோக்யனா? கோபி கைகளாகிய அயன் மங்கையரை மோகிப்பித்து வஞ்சனையாற்புணர் ந்த காமுகனில் இராவணன் துஷ்டனா? இவைகளையோசியாது ஐய ங்கார் சுவாமிகள் இராவணனைத் தூஷித்தது மல்லாந்துபடுத்து மார் மேலுமிழ்ந்துகொண்டதுபோலாம். இனியேனுந் தக்கவாறு ஒழுகி க்ஷேமமடைவாராக.

இனி,நமதன்பர் இராவணனைப் பிராம்ஹணனல்லவென்று சாதி த்துவிட்டதாக ஸந்தோஷித்து, அவனைப் பூதப்ரேதபிசாசாதிகளை யொத்த (தாமசதேவதை) என்று சொல்லவேண்டியதென ஒன்று சித்தாந்தப்படுத்தினர். பெரியோர்களுடைய சித்தாந்தம் அவன் பிரா ம்ஹணன் என்பது. (அவன்பிராம்ஹணனாகான்) என்று அன்பர் கூறி யதை யாம் கீழேவீழ்த்தித் துவைத்துவிட்டோம். நமதன்பரது தெய் வமாகிய இராமரோ க்ஷத்திரியர். பிராம்ஹணனேநோக்க க்ஷத்திரி யன் தாழ்ந்தவனே யாகையால், இராமனைக் கௌரவமாகவும், இரா வணனை அகௌரவமாகவும் பூர்வபக்ஷிகள்எண்ணுவது அஸங்கதமே யாம். யோக்யதையினாலே சிற்சிலஅமிசங்களில் இராவணனைக் குறைந்தவனாகக் கூறலாமேயன்றிப் பிறப்பினாலே அவனைக் குறைந் தவனாகக்கூறிதல் குறைந்தமதியினர்க்கே கூடுமென்க. இராமரது உற்பத்திக்குப் பூதங்கொண்டுவந்துகொடுத்த பாயசமே காரணமாயி னமையால், அந்தப்பூதத்தின் திருமகனார் இராமரெனலே அமைவு டைத்து. இதனால் நமதன்பர் பூதபிசாதிகளையொத்த தாமசதேவ தையென்று இராவணனைத் தூஷித்தது இராமர்பக்கலே ஸ்திரப்ப ட்டுவிட்டது. இத்யாதி அஸம்பாவிதங்களுக்கு இடஞ்செய்துகொண் டவர் நமதுஐயங்கார்சுவாமிகளே யாகையால், யாம் இராமனைத் தூஷித்தோமென விவேகிகள் குறைகூறாரென்க. ஐனாயென்னும்

பிசாசத்தினு லொன்றுசேர்க்கப்பட்ட இரண்டுபாதிசரீரங்களாலாகிட
ஜராசந்தன்) கதையும் நமது இராமரதுகதையிலோர்சாரொட்டி
இருவரும் ஸமம் என்று யோசிக்க இடஞ்செய்கின்றது. அவனுடைய
வுற்பத்திக்கு மூலம் ஓர்மாங்கனியாயினமையால்,பாயசத்தை மூலமா
கக்கொண்ட இராமரதுஉற்பத்தி அதனோடு ஸாம்யம்பெற்றது. இரு
வருற்பத்தியிலும் பூதபிசாசங்களுடைய ஸம்பந்தங் கேட்கப்பட்டது.
இவைகளையும் நமதன்பர்யோசித்து அதிகசோலிக்குவராமலடங்குவா
ராக.இம்மட்டிலிதைநிறுத்தி மேல்விஷயத்தையும் பரியாலோசிப்பாம்.

இராமர் சிவபிரதிஷ்டைசெய்த திவ்யக்ஷேத்திரம் (இராமேஸ்
வரம்) என்று லோகபிரஸித்தியும்,சாஸ்திர பிரஸித்தியும் அடைந்தி
ருத்தலை நமதன்பர் மாற்றயோசித்து, அது இராமேசுவரமன்று,உரோ
மேசுவரம் என ஓர்கதி கல்பித்துக்கொண்டார். பீமஸேனனுக்கு
ஹநுமார் தமது வால்மயிர்களைப் பிடுங்கிக்கொடுத்தாரெனவும், அவை
களை அவன் கீழேபோட்டுக்கொண்டே போயினனெனவும், அவை
கள் சிவலிங்கங்களாயின வெனவும், அவற்றுள் பிரஸ்தாபலிங்கமு
மொன்றாயிருக்கலாமெனவும், அதனால், உரோமேசுவரம் என்று இது
பிரஸித்தியடைந்ததெனவும், இது இப்போது மாறிவழங்கப்படுகின்
றது எனவும் பாவமுறுநெறியிற் பழுத்துரைசெய்த நமது பண்டித
ரது விர்தை அந்தோ கொடிது! கொடிது!! பீமசேனன் நேற்றுத்
துவாபரயுகத்தில் முளைத்தவன். இராமேசுவரபிரஸ்தாபம் அதற்கு
முன்யுகந்தொட்டுக் கேட்கப்படுகின்றது. அவன் பல மயிர்களைப்
போட்டுக்கொண்டு போனபோது பலலிங்கங்க ளுண்டாயினவாக
நமதன்பர் கூறினாரன்றோ? அவ்விலிங்கங்களும் உரோமலிங்கங்க
ளெனப் பிரஸித்தியடைந்திருக்கும் க்ஷேத்திரங்கள் யாவை? பலமயிர்
களும்பாழாகி ஒருமயிர்மாத்திரஞ்செழித்துச் சிவலிங்கமாகியது
யாங்ஙனம்? பீமன் ஹநுமானைக்கண்டவிடம் எது? அது இராமே
சுவரந்தானு? இது என்னசதி? உரோமம் இலிங்கமாகியபடியால்
உரோமலிங்கம் என்றுபேர்சிறந்தது என அவர் தேடிக்கொண்ட பார
தத்திற் பிரஸ்தாபமுண்டா? இதைக்காட்டிலும் உரோமர் என்
னும் ஓர் மகரிஷி பூசித்தார். அதனால், உரோமேசுவரம் என்று சிறந்
தது என்று கூறித் தொலைக்கலாகாதா? பசிராணது இலிங்கமாகியது
என்று அவர் கூறியதனால் எமக்கொருகுறைவுமில்லை. (ஸர்வம்கல்
விதம்ப்ரம்ஹா-ஸர்வோஹ்யேஷருத்ர:) என்னுஞ் சுருதிகளால் பிர
திபாதிக்கப்பட்ட எமதப்பனை நமதன்பர் மயிர் என்று சொல்லியத
னால், அச்சிவபரஞ்சுடருக்கு மொருதாழ்வில்லையென்க. (சுவப்ய சுவ

பதிப்பச்சவோம் நமோநம:, அசுவேப்போசுவபதிப்யச்சவோம் நமோ நம:) என்று வேதங்கள் துதிக்கும் வேதாந்தக்கனியை இம்மஹா பண்டிதர் (மயிர்) என்று நிந்தைசெய்து விட்டதனாலேயே (இராயர் சிவபூஜைசெய்தது) அடிபட்டுப்போய்விட்டதோ? இராமலிங்கம் என்றதை உரோமலிங்கம் என்று நமதன்பர்மாற்றியதில் மாறியது யாது? இலிங்கம்மாறினதில்லை. இராமசப்தமே உரோமசப்தமாக மாறியது. இதனால், மயிராய்முடிந்தவர் இராமரென்பதே பிரஸித்தி யாயிற்று. பாரதத்தில விஷ்ணுவினுடைய வெள்ளைமயிர் பலராமரும், கறுப்புமயிர் கிருஷ்ணருமாகப்பிறந்தனவென்று சொல்லப்படு வதால், நமதன்பர் இடைராமனையும் மயிராக்கிக்கொள்ள ஆசைப்பட் டனர். கறுப்புமயிரும், வெள்ளைமயிருங்கலந்து நரைக்குஆரம்பித்திரு க்கும் பருவமடைந்தவராக நாராயணர் பிரஸ்தாபிக்கப்பட்டமையால், அவரைப்பசுவென்று யாம்பலதரம்படித்துவரும்ஸித்தாந்தம் வேறொன் றியதாயிற்று. அவர்தேடியபாரதம் அவருக்கே கழுத்தறுப்பாயினமை யால், அவர்தேடியசிவதூஷணம் அவருக்குப் பலந்தந்துவிட்டதெ ன்க. நமதன்பரும், அவரைச்சார்ந்த நண்பரும் இராமலிங்கத்தை எப்படிப் பிடுங்கியெறியலாமென்று இரவும்பகலும் எண்ணியெண்ணி மிடிந்திடும் பண்புகுலையவேயன்றோ அவ்விராமலிங்கத்தை ஹநுமான் பிடுங்கமுடியாமல் வாலறுந்து இரததங்கக்கி நான்றுகொள்ள அன்றே இராமா ஸாக்ஷிப்படுத்திவிட்டனர்? அன்று பிடுங்கமுயன்றது குரங்கே யாகையால், நமதன்பர் யோசித்து ஒதுங்குவாராக. பெரியகுரங்காகிய ஹநுமானாலேயே முடியாதகாரியம் ஏனையோரான் முடியுமா றெங் ஙனம்? சிவனடியாரிற் சிறந்த இராமரே அன்று நிலைபெறுவித்தாரா கையால், இப்போதும் நமதன்பர் சிவனடியார்களுக்கு விரோதஞ்சே டுவது நமக்கு அபஜயத்தையே பயக்குமெனவறிந் தொதுங்குவாராக. இன்னும் விரிக்கிற்பெருகும்.

இனி, நமதன்பர் (இராமன் தனது ஸேதுவைக் காத்துக்கொண் டிருக்க நியமித்தபடிச் சிவன் அதிலிருந்து காத்துக்கொண் டிருக்க லாம். அல்லது ஸேதுவில் தேவதைகள் வஸிப்பதால் சிவனும் பாவ ந்தொலைய வசிக்கக்கூடும். தில்லையில் கோவிந்தராஜன் அடிக்கமலத் தடியில் சிவன் ஆனந்தக்கூத்தாடி மஹாநடன் என்று பெயர்பெற வில்லையா? ஜம்புகேசுவரத்திலிருந்து சிவன் இரங்கநாதனுடைய பாத ஸேவையைப் பண்ணவில்லையா?) என்று வாயால்வடித்தார். நமதன் பர்கூறிய கதிகளுக்குப் பிரமாணம் யாது? ஸேதுவில் இராமர் ஸேவக ரும், சிவன் ஸேவ்யருமாயிருத்தல் பிரத்யக்ஷம். அன்றியும் பிர

மாணஸித்தம் இவைகளுக்கு விரோதமாக இராமர் ஸேவயரும்,சிவன் ஸேவகருமாக அங்கிருக்கின்றார்களென்பதை யாவரோ ஒப்புவார்கள்? நமதன்பர் நாணமின்றி மாவைசைத்தது அவருக்கு மானுஷீகமில்லை யென்பதையே நாட்டுகின்றது. அன்றியும், தில்லையிற்போய்ப் பார்த்தாலன்றோ விஷ்ணுவினது தெய்வத்தன்மை தெரியும்? பிரகிருதி புருஷரூபமேயன்றோ அங்கு விளங்குவது? (வாசுதேவ :பரா :ப்ர்க்ருதி :) எனவும், (ய:பரஸ்ஸ மஹேச்வர :) எனவும் போந்த சுருதியர்த்தமேயன்றோ அங்கு நாம் அறியத்தக்கது? இருள்வடிவாகிய பிரகிருதியெனல் போதரவேயன்றோ கிடந்தகோலமாய விஷ்ணு உறங்கிக் கொண்டிருப்பதும், ஒளிவடிவாகிய புருஷனெனல் போதரவேயன்றோ நின்று நடித்தகோலமாய்ச் சிவன் விழித்துக்கொண் டிருப்பதும் அங்கு வியக்தம்? இவைகளுக்கு யார் என்னசெய்யலாம்? நமதன்பர் வேண்டுமாயின், அங்குப்போய் வீழ்ந்துகிடக்கிற விஷ்ணுவை எடுத்து நிறுத்திச் சபாபதியாக்கி,அவருக்கு ஸேவயத்வத்தை நிலைநாட்டிக்கொள்வாராக. இன்னும் விரிக்கிற்பெருகும். ஜம்புகேசுவரமோவெனின், அந்த க்ஷேத்திரத்தில் இராமசந்திரராகிய (தாசரதி) கட்டிவைத்த (திருமண்டபம்) ஒன்று பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது. அது அவர்காலத்தில் அவர்செய்த திருப்பணிகளில் ஒன்று. இதனை எவராலும் மறைக்க முடியாது. நமதன்பர் அங்குப்போய்ப்பார்த்து அந்தமண்டபத்தை இடித்து, இல்லாமற்செய்துவிட்டு வருவாராக. அவ்விடத்திலும் இராமருக்கு ஸேவகத்வமாகிய அடிமைத்திறமே பிராப்தமாகின்றது. அன்றியும், நம்மவர்கொண்டாடிய (திருவரங்கம்) என்பது நாடகசாலை என்று பொருள்பயக்கும். அந்த நாடகசாலையில் விஷ்ணுவானவர் நட்டுவனாகி, இலக்குமியை ஆட்டுவித்துச் சிவனை யுவப்பித்தனர். அந்த நடனத்தை யுவந்து அனுக்ரஹித்த பெருமான் (ஜம்புகேசுவரர்) எனப் பிரசித்தியடைந்திருக்கின்றனர்

"ஆடினா ளன்றோபொன் னதுவே திருவரங்கம்
நாடியரன் முன்பாக நண்புகூர்ந்—தாடிடவே
செய்தானின் மாலுஞ் சிவனுமருள் செய்தானே
வைதாலென் கண்டாய் வரும்."

என்னும் வெண்பாவையுங் கண்டு நாணுக. நமது ஐயங்கார் சுவாமிகள் ஒவ்வொருசிவநிந்தைகளை யெடுத்து விடுவதனால் அவ்வொழுப்பிய துர்க்கந்தம் அழிந்து எமதுசைவமணம் (கமகம) என்று அதிகமாக எங்கும் வீசுகின்றது. இது ஸாதுக்களுக்கு உபகாரமேயாம். இங்ஙனமிறக்.

நமது பண்டிதரது கையிலிருந்தசரக்கும், கடன்வாங்கிய சரக்கும் கொட்டியளந்தாய்விட்டமையால், அவரிடத்திற் சொந்தச் சரக்கு அதிகமாக ஒன்றுமில்லை. முன்காட்டியவைகளையோ, யாம் வாரிக் குப்பையிற் கொட்டிவிட்டோம். அவர் (யாம் கொட்டிவிட்ட குப்பைச்சரக்கை) வாரிக்கொண்டு மீண்டும் எமக்குப் புதுமைகாட்டுகிறார். என்னெனின், (சிவனுக்கு விஷ்ணு சக்தியைநீக்கினார். இராமர் சிவனைப்பூசிக்கவில்லை. இராமன் தாரகபிரஹ்மம். இராமதாபினி பிரமாணம். பாத்மத்திற்சொல்லிய இராமன் வேறு. அதர்வபூர்வம் என்பது வருணப்பிரஸாதத்தையே அநுவதிக்கின்றது. அகஸ்தியர் இராமருக்குபதேசித்தது பொய்) என்பனவாதிகளையே அடிக்கடியெழுதிப் பக்கங்களை நிரப்பிச் சுவடியாக்கிவிட்டனர். அவரது சுவடியில் (கூறியதுகூறல்) என்னுஞ்சரக்கு மலிந்துகிடக்கின்றது. இவைகளை முன்னமே யாம் பரிஷ்கரித்துவிட்டமையால், ஈண்டு முக்கியமான வேறு சிலவற்றையே யநுவதித்துப் பதில்சொல்லுகிறோம்.

நமது சிற்றுரைத்துக்காடடார் (சைவர் கொள்கைப்படி விஷ்ணு சிவசக்தியல்லவா?' சக்தியாகிய விஷ்ணுவினது அவதாரபுருஷருக்கு ஊத்திவரலாமா? எனவும், (இராவணவதகாலத்தில் அகஸ்தியமுனிவர் இராமருக்கு ஆதித்யஹ்ருதயத்தை உபதேசித்ததாக ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. ஆயினும், இது அநேகபழையபுஸ்தகங்களில் எழுதப்பட்டுப் பழகினபுளுகாயிருக்கின்றது) எனவுந் தேம்பித்திகைத்தனர். இவர் விஷ்ணுவைச் சிவசக்தியென்பது சைவர்மதமாகக் கூறினாரேயன்றித் தமது மதமாகவொப்பவில்லை. தாமொப்பாத வோர்விஷயம் எப்படியாறு லிவர்க்கென்னை? இவர் விஷ்ணுவைச் சிவசக்தியென்று ஒப்பிவெளிவரின், அதற்குயாம் பதில்சொல்லுவோம். சைவர்கள் தமது சந்தேகந்தெளியக் கேட்டால் அவர்களுக்குத் திருப்தியுண்டாக்குவோம். ஆகையால், இவரது முதற்கேள்வியை மூலையாக வொதுக்கினோம். இரண்டாவது இவர் இராமருக்கு ஆதித்யஹ்ருதயத்தை அகஸ்தியர் உபதேசிக்கவில்லையென்று கூறியது எந்த ஆதாரவுகொண்டோ? இவரோ அதனை உபதேசித்ததாக யுத்தகாண்டத்தில் எழுதப்பட்டிருக்கின்றது எனச்சாட்சிகூறினார். அன்றியும், அனேக பழைய புஸ்தகங்களில் எழுதப்பட்டுப் பழகினபுளுகாயிருக்கிறது என் வொன்றுகூறினார். அதனை இவர் புளுகு என்று பிரஸ்தாபித்ததில் எமக்குத் துக்கமில்லை. (அநேக புஸ்தகங்களில்-பழையபுஸ்தகங்களில்) உண்டு என்று அவர் கூறினமையால், (சிலபுஸ்தகங்களில்-புதுசாக எழுதிய புஸ்தகங்களில்) அதனைச் சிலபாஞ்சராத்திரிகள் தள்

ளிவிட்டார்களென ஏற்படுகின்றது. நம்மவர் அதனிருப்பைப் பழகின புளுகு என்றமையால், அதனை இல்லையென்றுகூறும் நம்மவரதுபுளுகு இன்னும் பழகாத புதுப்புளுகு என்று ஏற்படுகின்றது. இப்படியும் முழுமோசஞ் செய்வாருண்டா? இவர்கள் இன்னும் எதுதான் செய்ய மாட்டார்கள்? தமக்குச் சம்மதியில்லாத விஷயமானால் பொய்யென்று சொல்வது அஸத்தியமேயன்றோ? உள்ளதை உள்ளதாகவே யொப்புதல் சிஷ்டர்களுக்கழகு? அதனைத் தாங்கள் ஒப்பாதபட்சத்தில் யாதேனுங் கதிகல்பித்து ஒதுங்கவேண்டியது. நமதன்பர் அது முதலேயில்லையென்று சாதித்துவிட்டார். இவரது வித்தையைக் கற்றுக்கொண்டேயன்றோ சிலபேர் இராமாயணமே கல்பிதம் என்று சாதிக்கின்றார்கள்? இராமன்பொய் - இராவணன்பொய், எல்லாம்பொய், எல்லாங்கட்டுக்கதை என்று நமதன்பரது சகோதரர்கள் சொல்ல அவருங் கேட்டிருப்பர். இவர்களினத்திற் சேர்ந்து நமதன்பர் பரிபவத்தைத் தாங்காமல் ஆஸ்திக்யஹ்ருதயத்தைத் தாமுமநுட்டித்து இராமர் க்ஷேமப்பட்டதுபோல் க்ஷேமப்படுவாராக. இங்ஙனநிற்க.

நமது பண்டிதர் (மஹாதேவ) சப்தம் வருணனுக்கே அமைதல் வேண்டிச் சிவனுடையமூர்த்தி ஜலம் எனவும், சிவனுக்கு வாசகமான மஹாதேவசப்தத்தாலே அவரதுமூர்த்தியான ஜலத்தையுஞ் சொல்லலாமெனவும், கடலை ஏகாதசருத்ரர்களி லொன்றாகச் சொல்லுவதால், அந்தக் கடலை மஹாதேவன் என்று சொல்லலாம் எனவும் பிரஸங்கித்தனர். இந்தக்கருத்தோடு வான்மீகிபகவான் (மஹாதேவ) சப்தத்தைப் பிரயோகித்திருப்பராயின், அது நமதன்பருங்கு அபகாரத்தையே செய்யும். இராமருக்குப் பிரஸாதிக்கும்யோக்யதை வருணனிடத்தில் இயற்கையாக வில்லாமையால், அவனுடைய சைதன்யமாகிய சிவனை அதிஷ்டானமாகவொப்பி, (மஹாதேவர்) பிரஸாதித்தார் என்று அவர்கூறியதாகவே முடியும். சீவர்களொருவருக்கொருவர் ஒன்று செய்தலும், செய்யப்பெறுதலுமாகிய யாவும் சிவனுடைய செயலென்பது வேதத்தின்றுணிவாகையால் வருணன்செய்த பிரஸாதம் சிவபிரஸாதமாகவே முடிந்தது. அதனால், மஹாதேவபிரஸாதம் என்று இராமாயணத்திற் படிக்கப்பட்டது வருணன்பக்கல் நமதன்பர் ஸமர்த்திக்கினும், அது அவனைத்தாண்டிச் சிவன்பக்கலே சேர்ந்து ஸ்திரப்பட்டுவிட்டது. இதற்குமேல் யாம் சிலகூறுகிறோம். மஹாதேவர் இவ்விடத்தில் எனக்குப் பிரஸாதித்தார் என்பதற்கு (வருணரூபமாயிருந்து பிரஸாதித்தார். இலிங்கரூபமாயிருந்து பிரஸாதித்தார். ஜங்கமரூபமாயிருந்து பிரஸாதித்தார். குருவடிவமாயிருந்து பிரஸாதித்தார்)

என்று பொருள்கூறுதல் அமையும். வருணரூபத்தால் ஸேதுபந்தனத்திற்குபகரித்தது. இலிங்கரூபத்தால் அர்ச்சனையாதிகளை யேற்றருளியது. சங்கமரூபத்தால் (அகஸ்தியர்) விரஜாதீக்ஷைமுதலியனசெய் துபகரித்தது. குருவடிவத்தால் (சிவபெருமான்) வெளிப்பட்டுக் கீதையுபதேசம், பாசுபதாஸ்திரதத்தம், சீதையையடையும்வரம் இவைகளையுபகரித்தது. நமதன்பர்விட்டவழி எமக்கே ஸாதகமாயினமையால், அவரது பிரயத்னம் அவருக்கு ஒரு நலத்தையுந் தராதொழிந்தது.

அன்றியும், அவர் (ஜலத்தை ஸகலதேவதாமயமாகச்சொல்லுகையால், அந்தப்பெருமைதோன்ற மஹாதேவன் என்று சொல்லக்கூடும்) எனவும், (ஜலம் நாராயணனுக்காதாரமாகச் சொல்லப்படுகின்றது. அம்பஸ்யபாரே என்றும் சுருதிகோஷிக்கின்றது. இந்தப்பெருமைதோன்ற மஹாதேவன் என்று சொல்லக்கூடும்) எனவும் ஒருவழி கண்டு பிடித்தார். மஹாதேவன் என்னும் ஒப்பற்ற ரூடிநாமத்தைத் தாங்கியுள்ளவர் சிவபெருமான். வருணனை ஸகலதேவதாஸ்வரூபமென்றவிடத்தும், நாராயணருக்கு அவன் ஆதாரமானவனென்றவிடத்தும் அவ்வப்பிரமேயங்களுக்குத்தக்க நாமங்களால் அவனையுபசரியாமல் ஒருவருக்கும் வழங்கவுரித்தல்லாத அச்சிவனாரது ரூடிநாமத்தை யெடுத்தாண்டது யாங்ஙனம்? வருணனை யுயர்ந்தவனாக வுபசரிக்கப்புகுந்தவர் உயர்ந்தபொருளாகிய சிவனாரது நாமத்தையே வருவித்தமையால்,வருணனையதிட்டித்து அச்சிவனே இராமருக்குப் பிரஸாதித்தாரென்பதே பின்னும் நிலைபெறுகிற்று. நமதன்பர் ஜலம் நாராயணனுக்காதாரம் என்று கூறினாரன்றோ? ஜலத்தை மஹாதேவர் என்றபோது நாராயணரை என்னதேவர் என்றுகொள்வது? ஜலத்தைநோக்கச் சின்னதேவராயினர் போலும் நாராயணரையும், கடலையும் பிரஸ்தாபிக்கும்போது நாராயணரைநோக்கக் கடலை மஹாதேவர் என்றது விஷ்ணுநிந்தையாகவேமுடியும். அம்பஸ்யபாரே என்றசுருதி சிவைகநிஷ்டமென்பதே ஸத்தியம். விரிக்கிற்பெருகும்.

இனி, நமதுபண்டிதர் (இந்தராமாயணத்தி லோர்மூலையிலிருப்பதாகிய இந்த மஹாதேவபதமா இராமனது பரத்வத்தைப் பிடுங்கவல்லது) எனவும்,(இராமாயணம் இராமன்பெருமை கூறவந்தது என்று நமது சைவப்பழமுங் கையெழுத்துக் கொடுத்திருக்கின்றதே) எனவும் மகிழ்ந்தார். இவரது தேகத்தினோர்மூலையில் அணுரூபமாயிருக்கும் ஆத்மாவை அல்பமாகவொதுக்கி அதிகபாகங்களி னிறைந்துகிடக்கும் தாதுக்களையும், இந்திரியம், பிராணன், அந்தக்கரணமுதலியவைகளையுமே முக்கியமென்று இவர் ஆதரிப்பார்போலும். அணுரூபந்தாங்கியுள்ள

ஆன்மா தேகேந்திரியாதி ஸர்வத்தினுங் கலந்தியங்குதல்போலவன்றோ (மஹாதேவப்) பொருள் இராமாயணமுழுதும் வியஞ்சனையினாலே பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது? நமதன்பர் (வியஞ்சனையினாலே இராமாயணம் சிவபரம் என்று தீக்ஷிதர் எழுதியிருக்கிறார். அது விஷ்ணுதத்வரஹஸ்யத்தால் அடிபட்டுப்போயிற்று) என இந்தவியஞ் சனவிஷயத்தை மறுத்துவிட்டதாகப் பிரஸ்தாபித்து மகிழ்ந்தார். இராமசுப்பு என்னும் அஸத்து எழுதிய விஷ்ணுதத்வரஹஸ்யம் ஸ்ரீமத் அப்புசாஸ்திரிகள் என்னும் பண்டிதமணியால் எழுதப்பட்ட (விஷ்ணு தத்வரஹஸ்யகண்டனத்தால்) நாசத்தையடைந்த திவரதியார்போலும். நமது ஐயங்கார்மணி அந்தக்கண்டனத்தின்பேரில் தமதுகையைக்கொ ஞ்சங்காட்டட்டும் பார்ப்போம். இதுநிற்க, பாரதம் தருமன்பெருமை கூறுவது. இராமாயணம் இராமன்பெருமை கூறுவது. நைஷதம் நள ன்பெருமை கூறுவது என்று ஒருவர் பிரஸ்தாபிக்கலாம். அதனால் அத் தருமனாதியர் பரதத்வமாயிடுவார்களோ? இங்ஙனமாக, (இராமாயணம் இராமன்பெருமை கூறுவது) என்று எமதுநாயகரவர்கள் கூறியதை நமதன்பர் குத்ஸிதம்பேசியது தெளிவின்மையேயாம். இந்தப்பரிஹா ஸப் பிரஸங்கங்களினாலெல்லாம் (இராமர் சிவபூசைசெய்தார்) என் னும்பாரம் இராமர்தலையினின்று மிறங்கிவிடமாட்டாது.

இம்மட்டோ, நமது ஐயங்கார் (பிரஹ்மஹத்தி தோஷத்துக்குச் சிவலிங்கபூஜை பரிகாரமாகமாட்டாது. புராணங்களைவிட இதிகாசம் பலம். அதைவிட ஸ்மிருதிபலம். அதைவிடச் சுருதிபலம் என்பது மீமாம்ஸக ஸம்மதம். சுருதிஸ்மிருதிகளில் பிரமகத்திக்குச் சிவபூ சையைப் பரிகாரமாக விதித்திருக்கின்றதா? சிவபூசை பாபநிவாரகமா யிருக்குமேல் மந்வாதிகள் அதைப்பிராயச்சித்தமாக விதியாமல் கடின மாகிய துவாதசவார்ஷிக பிராயச்சித்தத்தை விதிப்பார்களா?) என்று பிரஸ்தாபித்து, (கலியுகத்து மானவர்களிடத்திற் றயைபாராட்டிய பராசர் பிரஹ்மஹத்தி பிராயச்சித்தத்தைக் குறைத்து விதித்ததுமன்றி இராமஸேது தரிசனத்தையும் பிராயச்சித்தமாக விதித்தார். சிவபூசை உண்மையில் அதற்குப்பிராயச்சித்தமானால் அதையே விதித்திருப்பா ரோ) என்று நியாயவிசாரஞ் செய்யத்தலைப்பட்டார். அன்றியும், (வே தமுதலானதுகளில் பாவநிவாரகங்களாகச் சொல்லப்பட்ட புருஷ சூக்தஜபம், ருத்ரஜபமுதலானதையே பாபபிராயச்சித்தமாக ஸ்மார் த்தர்கள் ஒப்புக்கொள்ளவில்லையே) என்னும் அதிசயத்தையுங்கண்டு கூறினார். இதனை முறையே மறுத்திடுவோம். பிரஹ்மஹத்தி தோஷ த்துக்குச் சிவபூசை பரிகாரமாகாதென எங்குப்பிரமாணங்கண்டார்?

ஸ்காந்தம், கூர்மம், இராமாயணம் முதலியநூல்கள் பிரமாணமாக நிலைபெறவும், இவர்தருக்கு என்னாகும்? புராணங்களைவிட இதிகாசமும், இதிகாசத்தைவிட ஸ்மிருதியும், ஸ்மிருதியைவிடச் சுருதியும் பலமாகையால் புராணம் பிரமாணமாகாது எனின், சுருதியாதிகளுக்கும் புராணங்களுக்கும் இப்போதுண்டான விரோதமென்னை? ஒன்றையொன்று விரோதிக்கின்றன்றோ நமதன்பரதுவாதம் மணக்கும்? சிவபூசை ஹத்திக்குப்பிராயச்சித்தமாம் என்று புராணங்கூறச் சுருதிகள் பிராயச்சித்தமாகாதெனக் கூறின், புராணம் அடிபட்டுப்போம். அங்ஙனமின்மையால், பிரஹ்மஹத்தியானது சிவபூசையால் ஒழிந்தது என்றுகூறியபுராணம் ஸப்பிரமாணமேயாம். அன்றியும், நமதன்பர் (புராணங்களைவிட இதிகாசம்பலம்) என்றது ஸாட்சியற்றது. மீமாம்ஸகநூல் ஸ்மிருதியைநோக்கச் சுருதிபலம் என்று கூறுகின்றது. அவ்வளவேயன்றிப் புராணத்தைநோக்க இதிகாசம் பலம் என்று கூறிற்றிலது. இதனால்,புராணத்தைநோக்க இதிகாசம் ஏற்றமுடையது என்றவுரை இழிவுரையாயிற்று. ஸ்மிருதிகள் பிரஹ்மஹத்திக்குச் சிவபூசையைப் பிராயச்சித்தமாக விதிக்காததென்னையெனின்,அவை விதியாமையால் தோஷமின்றென்க.நமதன்பர் எடுத்துக்கொண்ட மநுபராசரவசனங்களில் மநுவானவர் துவாதசவார்ஷிக பிராயச்சித்தத்தையும், பராசர பகவான் ஸேதுதரிசன பிராயச்சித்தத்தையும் விதித்தார்கள். ஒருவர் சொன்னதை மற்றொருவர் சொல்லாமையால் ஒன்றுபிரமாணமும் மற்றொன்று அப்பிரமாணமுமாகா. அன்றியும், மநுவிதித்த பிராயச்சித்தத்தைப் பராசர்குறைத்தாரென நமதன்பரோ காட்டினார். உயர்ந்த பிராயச்சித்தம், குறைந்தபிராயச்சித்தங்களிரண்டுமே பிரமாணங்களாயின. இவைகளை விரோதமாகக்கொள்ளாத நமதன்பர் பல புராணங்களால் இராமரது பிராயச்சித்தத்துக்காகத் தேடிய சிவபூசையைமாத்திரம் விரோதமாகக்கொண்டது அவரது புத்தியின்குறைவேயாம். இனிச் (சிவபூசை பாபநிவாரகமாயிருக்குமேல் மநுவாதிகள் அதைவிதியாமல் கடினமாகிய பிராயச்சித்தத்தை விதிப்பார்களா)என்று கடாயினாரன்றோ? இதனால் சிவபூசை சுலபமும், துவாதவார்ஷிகபிராயச்சித்தம் கடினமுமென்பது அவரது துணிபு. அங்ஙனமாயின், ஸேதுதரிசனத்தைப் பிராயச்சித்தமாகப் பராசர்விதித்தது என்னை? இது கடினமோ சுலபமோ? சிவபூசையைச் சுலபம் என வொதுக்கிய நமதன்பர், கேவலம் சுலபமாகிய சேதுதரிசனத்தை யொப்பியது யாங்ஙனம்? இவர் இவ்வளவிலமையாமல் பராசரபகவான் கலியுகத்துமானவர்களுக்காகப் பிராயச்சித்தத்தைக்குறைத்தார் என ஒன்றுகூறினாரன்றோ? மநுவிதிக்காததொன்றைப் பராசர்விதித்தது யாங்ஙனம்?

பராசருக்கிருந்தகருணை மனுவுக்கில்லாதது யாங்ஙனம்? கருணையும், கொடுமையுங் காரணங்களாக அவர்கள் விதித்தார்களென்பது தவறு. அவரவர்களுடைய விசாரணைக்குத்தக்கவாறு அவர்கள் விதித்தார்களென்பதே துணிவு. அவர்களைக் குறைகூறுதல் யாங்ஙனமெனின், சுருதிகளுக்கும் ஸ்மிருதிகளுக்கும் விரோதமுண்டாயின், ஸ்மிருதியைத்தள்ளிச் சுருதியைக் கொள்ளுமாறு மீமாம்ஸைநூல் விதித்தது என்னை? ஸ்மிருதிகளது யோக்கியதை இப்படி யலக்கண்படுவதறியாது நமதன்பர் சிவபூசையை ஸ்மிருதிகள் விதிக்காதது என்னை என்றது பரிதாபமென்க. அன்றியும், அவர் (வேதமுதலானதுகளில் பாவநிவாரகங்களாகச் சொல்லப்பட்ட புருஷசூக்தஜபம் - ருத்ரஜபம் முதலானதையே ஸ்மார்த்தர்கள் ஒப்புக்கொள்ளவில்லையே) என மகிழ்ந்தாரன்றோ? இது என்னமதி? வேதங்கள் விதித்தவைகளை ஸ்மார்த்தர்கள் கொள்ளவில்லையென்று நமதன்பர் கொண்டாடியது அந்தஸ்மார்த்தர்களும், அவர்களைக்கொண்டாடிய இவரும் வேதபாஹ்யர் என்பதையே விளக்கியது. புருஷசூக்தாதிகளைக் கொள்ளவேண்டாமென்று அவர்களுக்கு விதித்தநூல் யாதோ? நூற்பிரமாணமயின்றெனின், அன்னோர் தாந்தோன்றித்தம்பிரான்களாயிடுவர். அதவா நூல்காட்டுவாரெனின், அதுவேதத்தினுஞ் சிறந்ததாகவேண்டும். வேதத்திற்குமிஞ்சின சாஸ்திரமில்லையாகையால், அவர்காட்டுநூல் பருத்திநூலாகவே முடியும். நமதன்பர்க்கே அவை வாய்க்குமட்டலாயினமையால், 'அதனை ஸ்மார்த்தர் தலையிலேற்றினர். சிவபூசையை ஏன் ஸ்மிருதிகளில் விதிக்கவில்லை யென்று கேட்டபண்டிதர் சுருதிவிதாயகமாகிய ருத்ரசூக்தாதிகளை ஏன் அங்கீகரியாது கெடுகின்றனர்? நமது ஐயங்காரினத்திற் சேர்ந்த அதிகாரிகளது கொடுமையறிந்தே ஸ்மிருதிக்காரர் சிவபூசையை விதியாராயினர். நமது சிற்றுத்துக்காட்டாரோ இப்போது ஒரு பிர்ஹ்மஹத்திசெய்ததாகவொப்புக்கொள்வோம். ஸ்மிருதிகள் சிவபூசையைப் பிராயச்சித்தமாகக் கூறியிருந்தால் இவர் அந்தவிதியைத் தழுவிச் சிவபூசையால் புனிதராவாரா? சிவத்வேஷமேலிட்ட கொடுமையால் பாபியாகவாவது திரிவாரேயன்றிச் சிவபூசையைச் செய்யார்! செய்யார்!! இப்படிக் கரடுபற்றியோர்க்கே மநுவாதிகள் கடினபிராயச்சித்தத்தை விதித்தார்கள். இராமகிருஷ்ணாதிகள்போன்ற சிவபக்தசிரோமணிகளுக்கு ஸர்வபாப நிவாரகமாயுள்ளது சிவபூசையென்றே துணிவாகையால், இராமர் சிவபூசையையே பிராயச்சித்தமாகத் தேடினர். இனியாமொன்று கூறுகின்றோம். ஞானிகள் ஸதாசிவத்யானத்தி லிருப்பவர்கள். அவர்பால் யாதானும் ஹத்திகிகழுமாயின், அவர்கள் எந்தஸ்மிருதிகளையாச

ரிக்கபோகின்றார்கள்? அவர்களிடைவிடாது அநுஸந்தித்துவரும் சிவத்யானமே அவர்களைப் புனிதமாக்கிவிடும். இவ்வுண்மையால் ஸ்ரீ ராமர் சிவபூசைசெய்தது ஸர்வஸம்பிரதிபந்நமாயிற்று. சுருதியில் (அஹரஹரப்யர்ச்ய விச்வேச்வரலிங்கம் தத்ராருத்ரசூக்தை ரபிஷிச்யத) என்னும் வசனமானது (மஹாபாதகேப்யோ முச்யதே) என்று அறுதியிட்டுச் சிவாராதனத்தால் ஒருவன் மஹாபாதகங்களினின்றும் விடுபடுகின்றான் என்று ஸ்தாபிக்கின்றது. இதற்குமுன்னர் ஸ்மிருதிகளை ஆதரவாகத்தேடுவது கனியிருக்கக் காய்கவர்ந்திடல்போலாம். இராமரது பாபநிவாரணம் சுருதிநிஷ்டமாயினமையால் நமது பண்டிதரதுகஷ்டம் வீணே நஷ்டமாயினதென்க. இதுநிற்க.

இந்தப்பண்டிதர் ஸ்மிருதிக்காரர் சிவபூசையைப் பிராயச்சித்தமாக ஒப்பினார்களா என்று கேட்டாரன்றோ? இவ்வாறு அவர்கேட்டதனால், ஹத்தியைப்போக்கும்ஆற்றல் சிவபூசைக்கில்லை யென்பதா சிவாராதனத்தாலுண்டாகும் பலஸித்தியைக் காட்டிலும் துவாதசவார்ஷிககர்மங்கள் அதிகபலத்தைத் தருமென்பதா? மநுபராசராதிகள் சிவபக்தி விமுகர்களா? இவைகளைப் பரியாலோசியாமலே அவர்தலைதுறுத்துக்கொண்டு வீணவதிக்குள்ளாயினார். (ருத்ரம் புருஷசூக்தஞ்ச) என்று மநுகூறியவசனத்தை நமதுஐயங்கார் மழுப்பப்பார்த்தார். அதுயாம்காட்டிய(அஹர ஹரப்யர்ச்ய)என்கிற சுருதியில்,(ருத்ரசூக்தைரபிஷிச்யத) என்கிற ஸ்தானத்தினின்று சிவபூசையையே ஸ்தாபித்துவிட்டது. எந்தவழியி னுழைந்தாலும் ஐயங்கார் எதிரேறிப்போதற்கிடமடைபட்டுத் தடையாயினமையால், இத்தோடுவாய்மண்டு வழிதேடி ஸஞ்சரிப்பாராக. ருத்ரஜபம் சிவபூசையில் விநியோகமாகையால் பிரஹ்மஹத்தியைப் போக்கும் அதன் வல்லபத்தையே மநு எடுத்தோதினார். இந்தவுண்மையால், சுருதிஸ்மிருதீதிஹாஸ புராணங்கள்யாவும் சிவபூசையை ஒப்பியநலம் வெளிப்பட்டது. நமதன்பரது சலசலப்பும் இத்தோடே தொலைந்தது. எமது ஆசை அடங்காமையால் இன்னுங்கொஞ்சம் சொல்லுகிறோம். மேறபோந்த மநுவசனத்தில் (பஸ்மத்தினால் திரிபுண்டரம் தாங்குதலும் பிரஹ்மஹத்தியைப்போக்கும்) என்று நிர்ணயித்திருக்கின்றது. சிவபூசைக்கு விபூதிதாரணம் ஓரங்கமாயின், (பஸ்மச்சந்ரோ பஸ்மசாயீ) என்று பிரஸ்தாபிக்கப்பட்ட இராமர் சிவபூசைசெய்தாரென்பதும், ஹத்தியைப் போக்கிக் கொண்டாரென்பதும் அதிசயமோ? இந்த அர்த்தங்களைச் (சாதாதபஸ்மிருதி, புருஷார்த்தசாரதீயம்) இவைகளிலுங் காணலாம். சுருதியில் (அத்யாச்ரமஸ்த:) என்னும் வசனமானது (ஸமஸ்தபாத

கேப்யோபபாதகேப்யோ பூதோபவதி) என்றறுதியிட்டுப் பஸ்மதார ணத்தால் ஸஸ்மத மஹாபாதகங்களும், உபபாதகங்களும் நசிக்கும் என்று ஸ்தாபித்துவிட்டது. அன்றியும், (அகஸ்தியராமாதிபிராத்ரு தத்வம்) என்னும் பிரஹ்மோத்தரகண்டவசனம (நமசிவாயேதி ஸ தாஜபத்வம்)என்று அறுதியிட்டு ஸ்ரீராமர் எப்போதும் ஸ்ரீபஞ்சாக்ஷரி யை ஜபித்துக்கொண்டிருக்கின்றார் என்று ஸ்தாபித்து விட்டது. இந்தவியவஸ்தையால் விபூதிருத்ராக்ஷபஞ்சாக்ஷருத்ரஜபாதிகளால் சிவபூசைசெய்து ஸர்வபாபங்களையும் இராமர் போக்கிக்கொண்டா ரென்பது சுருதிஸித்தமான முடிவாயிற்று.

நமதன்பர் (முக்யகல்பம் சக்தர்களுக்கும், கௌணகல்பம் அசக் தர்களுக்கும் ஆகுமென்று சாஸ்திரங்கள் சொல்லுவதால் சக்தரான இராமர் முக்யகல்பமாகிய துவாதசவார்ஷிக பிராயச்சித்தத்தையே ஆசரிக்கவேண்டியது. அவர் கௌணகல்பமாகிய சிவபூசைசெய்தது கூடாது) எனவொன்றுகூறி விருத்திரஹத்தியை இந்திரன் சிவபூசை யால் போக்கிக்கொள்ளாமல் வேறுவித பிராயச்சித்தத்தால் போக்கிக் கொண்டான் எனவும் பிரஸங்கித்தனர். இவரது பேய்மதியைப்பேதி த்து உண்மையை நிறுத்துவாம். சக்தனொருவனும், அசக்தனொருவ னும் பிரஹ்மஹத்திக்குள்ளாகுங்கால் இருவருக்கும் பாவம் ஸமமாகவே நேரும். அதற்கு அவர்தேடும் பிராயச்சித்தமும் ஸமமேயாதல்வேண் டும். சக்தனுக்குக் கடினபிராயச்சித்தமும், அசக்தனுக்குச் சுலபபிரா யச்சித்தமுமாதல் கூடாது. ஒருபிரமக்கொலையில் சக்தனுக்கு அதிக பாவமும், அசக்தனுக்கு அல்பபாவமும் நேரின் அவைகளுக்கு முறை யே கடினபிராயச்சித்தமும், சுலபபிராயச்சித்தமும் விகிதமாம். அங் ஙனமின்மையால், சக்தர் அசக்தர் என்று தரம்பிரித்து, இராமரைச் சக்தராகவொப்பி அவருக்குக் கடினபிராயச்சித்தத்தை விரும்பியது நமது பண்டிதரது தெளிவின்மையேயாம். தேகவன்மையைக் கார ணமாக்காமல் உள்ளத்தின்கரடையே காரணமாக வொப்பின், கடி னபிராயச்சித்தம் ஸாமஞ்சஸமாம். இராமர் தவசீலராதலபடியால், அவருக்குக் கடினபிராயச்சித்தம் பொருந்தாது. கரடுமுரடுகளாயிருந் தாலும் சிவபூசை விகிதமாகும். சிவபூசையால் போகாததொன்றுமில் லையாகையால் அல்பதோஷமும், அதிகதோஷமுஞ் சிவபூசையாற் போக்கிக்கொள்ளலாம். இந்த வுண்மைகளைத் தேரும் புண்ணியமிழ ந்து விதண்டைபேசும் நமது பண்டிதருக்கே துவாதசவார்ஷிக பிரா யச்சித்தம் விகிதமென்க. இவ்வளவு நியாயங்களைப் போதித்தும் அவ ரது மனத்திற்பற்றியிருக்குங்காம்பு அவரைத் தேறவொட்டாதென்க.

அம்மாளையங்காரும், வில்லிபுத்தூராழ்வானும் சிவதூஷணத்தாற் கண்களிழந்து, முறையே ஸ்ரீகாளத்தியினும், ஸ்ரீமத் அருணாசலத்தினுஞ் சிவனைவழிபட்டார்கள். அத்தகைய சுறுக்குண்டாயின், நமதன்பரும் புனிதராய்விடுவர். அதற்கும் அதிகபுண்ணியம் வேண்டும்? திருவருட் செயலெப்படியோ? இதுநிற்க, விருத்திரஹத்தி இந்திரனுக்குச் சிவபூசையாலன்றி நீங்கவில்லையென்று யாவுஞ்சோதித்துவிட்டவர்போற் சொல்லிய நமதன்பர் ஸ்ரீஹாலாஸ்யக்ஷேத்திரத்திற் சிவபெருமான்செய்தருளிய அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் இவையென்று அறியார். விருத்திரஹத்தியால் வந்தபழியை இந்திரனுக்குத் தீர்த்தருளியதே சிவனாரது பிரதமலீலை யென்றறிக. பல்பல கர்மங்களை அவன்செய்தும் ஹத்திதொலையாமல் கடைசியாக மதுரையில்வந்து சிவபூசைசெய்து புனிதனாயினனென்க. அவன் கொண்டுவந்து அங்கமைத்ததே இந்திரவிமானமாம். இவற்றை யாம் ஒப்போமெனின், கிறிஸ்தவர்கள் வேதாதிகளை ஒப்பமாட்டோமென்பதற் கிணப்படுத்தி அவரை யாமொதுக்குவோமென்க ஹாலாஸ்யமாஹாத்மியத்தில் (மஹதாம் பாதகாநாந்து, சிவலிங்கார்ச்சநம்விநா, ப்ராயச்சித்தம்ஹியந்நாஸ்தி, தஸ்மாத்தத் குருயத்நத:) எனப்போந்த வசனத்தையும் நமதன்பரறிந்து உபசாந்தியடைவாராக. நமது பண்டிதர் சிவபுராணங்களைத் தாமசம் என்று கூறும் ஓர்வித்தை கற்றுக்கொண்டிருக்கின்றார். இன்னகாரணத்தால் தாமசம் என்று அவர் சொல்லவறியார். விஷ்ணுவுக்கே (க்ஷத்திரியத்வம், கரிநிறம், ஜநநமரணதுக்கம், அசுரவாதை, அதிகநித்திரை, பக்தவஞ்சனை முதலிய தோஷங்களால் தாமஸத்வம் பிராப்தமாம். சிவனாருக்கு (பராத்மமணத்வம், குருமூர்த்தம், ஸர்வசாஸ்திரவக்த்ருத்வம், ஞானநடிவம், ஆநந்தத்தாண்டவம், ஸர்வாநுக்ரஹம்) முதலிய லட்சணங்களால் தாமஸத்வம் ஏறமாட்டாது. ஆகையால், சிவபுராணம் வேதத்தைப்போல ஸப்பிரமாணமாயிடுதல் ஸத்தியம். இதற்குமேல் நமதன்பர் கையைநீட்டுவாரெனின், யாம் அப்போது எமது கையைக்காட்டாமற் போகோம். இப்பண்டித சிரோமணியார் தமது வழுத்திரட்டினோர்மூலையில் (சிவபுராணங்களோ சிவன் தனக்குப் பெருமைகட்ட ஒருபுராண மெழுதித்தரவேண்டுமென்று வேண்டவே பிறந்தவைகளாம்) எனவும் எழுதி மகிழ்ந்திருக்கின்றார். இதைப் பார்ப்பவர்கள் இவரைக் கிறிஸ்தவரினுங் கடையாக வொதுக்கவே யோசிப்பார்கள். பதினெட்டுப் புராணங்களும் வியாஸரால் வெளியிடப்பட்டனவென்னும் வைதிகஸங்கேதம் என்னவது? தமது கல்பிதபாத்மம், க

பிதபாகவதங்களைப்போல நமதன்பர் சிவபுராணங்களையும் எண்ணி ஞர்போலும், நமதன்பர் கொண்டாடும் விஷ்ணுபுராணத்தில் சிவபு ராணங்களைப் பிரஸ்தாபித்திருப்பதற்கு என்னகதி தேடினர்?, அந்த விஷ்ணுபுராணம் சிவபுராணங்களையொப்பி ஸந்தோஷிக்குமானல், நமதன்பர் அவைகளை ஹேயமாகக்கூறியது அவரது பிறப்பின்பெரு மையேயாம். இவர் கொண்டாடியபாரதத்தில் சிவபுராணங்களையும், விஷ்ணுபுராணங்களையும், எல்லாப்புராணங்களையும், எல்லாக்கலை களையும் சிவனே சொல்லியருளினர் என்று துதித்திருப்பதற்கு என்ன செய்வார்? நமதன்பருக்குச் சிவனிடத்தி லுண்டாயிருக்குந் துவேஷமிகுதியே அவத்தையாலலறி யிடருழப்பதற் காதரவாயிற் றென்க. இவர் எவ்வளவு பாடுபெட்டுப் பரிந்துபரிந்து எழுந்தாலும் இராமர்தலைமேலேறிய சிவலிங்கம் இறங்கமாட்டாது. இராமர்தலை மேற் சிவலிங்கப்பெருமான் எழுந்தருளியிருப்பதைப் (பத்திராசலத் தில்) சென்று பார்த்துநாணுக. இவரிவ்வளவி லமையாது இந்திர னுக்கு (பிரஹ்மஹத்திப்பேய்) பின்னே தொடர்ந்ததுபோல இராம னுக்கும் பின்னே தொடரவேண்டுமே என்று வினவினர். இராமாய ணத்தில் ஹத்திப்பிரஸங்கம் மறைந்திருத்தலால், அது தொடர்ந்தது என்பதுங் கூடவே மறைந்துகிடக்கின்றது. ஸேதுமாஹாத்மியத்தில் "த்ருச்யதேராவணேத்யாபி சாயாரூபேணதத்ரவை, ததக்ரோ நாக லோகஸ்ய பிலமஸ்திமஹத்தபம், தத்பிலம்ப்ராபயாமாஸ ஜானகீர மணோத்விஜா:, தஸ்யோபரிபிலஸ்யாத க்ருத்வாமண்டப முத்தமம், பைரவம்ஸ்தாபயாமாஸ ரக்ஷார்த்தம்தத்ரராகவ:" என்னும் வசனங்க ளால் இராமர் சிவலிங்கபிரதிஷ்டைசெய்து பிரஹ்மஹத்தியைப் போக்கிக்கொண்டார். அங்குள்ள தீர்த்தத்திற்குப் பிரஹ்மஹத்திவி மோசனதீர்த்தம் என்றுபேர். அதற்கு அக்ரஸ்தானத்தில் நாகலோக பரியந்தமாழ்ந்த பிலமொன்றுண்டு. அந்தப்பிலத்தில் இராமசந்திரர் அந்தப்பிரஹ்மஹத்தியைத் தள்ளி ஓர்பாறையான்மூடி அதற்குமேல் ஒருமண்டபத்தைக்கட்டி அதில் பைரவமூர்த்தியை ரக்ஷார்த்தமாகப் பிரதிஷ்டித்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தவுண்மை யை யுணராமல் இராமனைப் பிரஹ்மஹத்திப்பேய் தொடர்ந்த விஷயம் எங்கே பெறப்பட்டது எனக்கடாவியது அவரது விசாரக்குறைவென நாம் அதிகமாக விசாரப்பட்டோம். இம்மட்டிலாவது அடங்கி க்ஷேம படுவாராக. இதுநிற்க.

நமதன்பர் (இதிஹாஸபுராணாப்யாம்வேதம் ஸமுபப்ரஹ்மயேத்) என்பதைக்கூறி (இதிஹாஸ புராணங்களை வேதத்துக்கு உபபிரஹ்

மணங்களாகச் சொல்லி யிருக்கின்றது) என விவகரித்தார். இவர்மீண்டும் (இதிஹாஸமே பிரபலம். இதற்கு இதிஹாஸபுராணம் என்னும் பிரயோகத்தில் இதிஹாஸம் முதல்பிரயோகிக்கப்பட்டதே ஸாட்சி) எனவும் கூறினார். அன்றியும், (வேதத்தில் உத்தரபாகம் சிறந்தது) என்றார். மீண்டும் வேதோத்தரபாகத்துக்கு இதிஹாஸம் உபபிரஹ்மணம் என்றுகூறினர். இதற்கு (இதிஹாஸ புராணாப்யாம் வேதார்ந்தார்த்த: ப்ரகாச்யதே) என்பதை ஸாக்ஷிகூறினார். இனி (இதிஹாஸமென்பது பாரதராமாயணாதிகளேயாம்) எனவும், சாந்தோக்யத்தில் (இதிஹாஸபுராணம் பஞ்சமம்) என்றுகூறியிருப்பதால், அதுபாரதம் எனவும், (பாரத: பஞ்சமோவேதா:) என்று சொல்லப்படுவதே அதற்கு ஸாக்ஷியெனவும், சங்கராசாரியரும் இதிஹாஸம் பாரதமென்றே கூறினார் எனவும், (இதிஹாஸபுராணம்,) என்று சாந்தோக்யத்திற் கூறியது முழுப்பதம் எனவும், இவ்விதிகாசமாகிய பாரதம் பலபுராணங்களிலுங் கொண்டாடப்பட்டிருக்கின்றது எனவும், (இந்தப்பாரதத்தினுடைய நடுநெஞ்சிலணியாக ஸ்ரீராமாயணமஹிமை விளங்குகின்றது) எனவும், அன்றியும் (அது அநேகபுராணங்களின் முடிமீதும் அணிகலமாய் விளங்குகின்றது) எனவும் அவர் பிரகாசப்படுத்தினார். இதிலுள்ள ஆபாஸங்களை முறையே களைந்தெறிவாம். நமதன்பர் முதல்காட்டிய வசனம் இதிஹாஸமும், புராணமும் வேதத்துக்கு உபபிரஹ்மணங்களெனத் தெரிவித்தது. இதனை யநுசரித்த பண்டிதர் இதிற்போந்த புராணத்தை யிழித்து இதிகாசத்தை யுயர்த்தினார். அந்தவசனத்தில் இதிஹாஸம் உயர்ந்தது, புராணம்தாழ்ந்தது எனப்போதரவில்லை. அவர் வேறு பிரமாணமுங்காட்டினதில்லை, இதிஹாஸம் சிறந்ததென்பதற்கு அவ்விதிஹாஸபதம் அந்தவாக்கியத்தில் முதற்கண்வைக்கப்பட்டதே போதும் என அவர்கூறியது (வேதத்தில் உத்தரபாகம் சிறந்தது) என அவர் எழுதியதற்கு விரோதம். முதற்கண்ணமைந்த பூர்வபாகம் தாழ்ந்தும், பின்னரமைந்த உத்தரபாகம் உயர்ந்து மிருக்கக்கண்ட நமதன்பர் இதிஹாஸபதம் முதற்கண்வந்தது கொண்டே அதனைச் சிலாகித்தது யாங்ஙனம்? இவர் (வேதோத்தரபாகத்துக்கு இதிஹாஸம் உபபிரஹ்மணம்) என்றுகூறியதுந்தவறு. இவர் முதலுதகரித்த வசனத்தில் இதிஹாஸமும், புராணமும் வேதத்துக்கு உபபிரஹ்மணங்களெனக்கூறி யிருப்பதால், வேதத்தின் முதற்கட்போந்த பூர்வபாகத்துக்கு இதிகாசமும், பின்னர்ப்போந்த உத்தரபாகத்துக்குப் புராணமும் முறையே உபபிரஹ்மணங்களாயின. இனி (இதிஹாஸபுராணாப்யாம் வேதார்ந்தார்த்த: ப்ரகாச்யதே) என்னும்

வசனம் இதிகாசமே வேதோத்தரபாகத்துக்கு உபபிரஹ்மண மென்ப தைச் சாதிக்கமாட்டாது. அது இதிகாசமும் புராணமும் வேதாந்தா ர்த்தங்களைப் பிரகாசிப்பிக்கும் என்று கூறுகின்றது. புராணத்தைத் தள்ளி இதிகாசத்தை மாத்திரம் அதுகொண்டு கூறினதில்லை. இங்ஙன மாக, நமதன்பர் இஷ்டம்போ லெழுதியிருமாந்தது அவரினத்தவர்க் கே யொப்பென்க. இம்மட்டோ, (இதிஹாஸமென்பது. பாரதராமாய ணாதிகளேயாம்) என்று இவர் வாய்திறந்ததை ஸாட்சியால் நிரூபித்து க்கொண்டிலர். இவருதகரித்த வசனங்களோவெனின், 'இதிகாசமும் புராணமும் ஐந்தாம்வேதம் எனவும், பாரதம் ஐந்தாம்வேதம் எனவுங் கூறின. இவற்றுள் இராமாயணபிரஸ்தாபமே கிடையாது. இங்ஙன மாக, பாரதத்தோடு இராமாயணத்தை யினப்படுத்தியது யாங்ஙனம்? இவரோ (சங்கராசாரியரும் இதிகாசம் பாரதம்) என்று கூறினார் எின ஸாக்ஷிகாட்டினார். இந்த ஸாக்ஷியாலும் இராமாயணம் இதிஹாஸஸ் தானத்தில் நிலைபெறவில்லை. நமதன்பரது ஆசை இராமாயணத்தை இதிஹாஸமெனப்பிரஸ்தாபித்துப் புகழவும், புராணம் அதிற்றாழ்ந்த து என்று இகழவுமே எழுந்தது. அவர் நினைத்தபடியாகாமல் சாந் தோக்யம் புராணத்தைப் புகழ்ந்து, இராமாயணத்தைச் சட்டைசெய் யாமல் வாளாவிட்டது. வாளாவிடுதல் மதிப்பில்லாமையேயாம். அவர்காட்டிய வசனங்கள் பாரதத்தையும் இதிகாசமென விளக்கின தில்லையெனின், அவ்வசனங்களைத் தழுவிய சங்கராசாரியர் பாரதத் தை இதிஹாஸமென விளக்கினமையாலும், அது ஐந்தாம்வேதம் என் றுமுழங்கியவசனம் ஸர்வஸம்பிரதிபந்நமாகையாலும், அதனை அந்தச் சங்கராசாரியரும் அங்கீகரித்தமையாலும் இராமாயணம் ஆதரவற்று ஒதுங்கினதுபோலப் பாரதம் ஒதுங்கினதில்லையென்க. இவர் சாந் தோக்யத்திற்போந்த (புராணம்) என்பதை இதிகாசமாகிய புராணம் என்று பொருள்கொண்டு (இதிகாசபுராணம்) என்பது முழுப்பதம் என்றதும் முழுமோசமாம். புராணத்தை வெறுக்கினால், அது வேதப டிதமாகிச் சிறந்திடுதலைநோக்கியே குழறுபடிசெய்தார். இதிகாசம் என்னுஞ் சொல்லுக்கும், புராணம் என்னுஞ் சொல்லுக்கும் முறை யே பாரதாதிகளும், ஸ்காந்தாதிகளும் பொருள்களாகி நிலைபெறவும், நமதன்பர் இரண்டையு மொன்றுக்கத்தலைப்பட்டது தெளிவின்மை யேயாம். இதிகாசங்களைத்தவிரப் புராணங்கள் வேறுஇல்லாமற்போ யின்,' அவரதுமோசம் பலிக்கும். இதிகாசம்உயர்ந்தது. புராணம் தாழ்ந்தது என்றுகொண்டிருக்குமிவர் (இதிகாசமாகிய புராணம்) என்று இதிகாசத்தையே புராணமாக்கியதும் இவரதுகட்சிக்குத் தலை கோயாயிற்று. இனி ... இதிஹாஸமாகிய பாரதத்தை வேதமென்று

கூறியபடியேயன்றோ அதனைப்புராணமென்று கூறுதலுஞ்சிறக்கும்? வேதத்தினுங் கிழிட்ட இதிகாசத்தை வேதமென்று உபசரித்தபடியே புராணத்தினுங் கிழிட்ட இதிகாசத்தைப் புராணம் என்று உபசரித்தல் ஸாமஞ்சஸமாம். நமதன்பரது கருத்தை யாம்தழுவியபோதும் அந்தவசனத்தால் புராணத்துக்கே ஏற்றமுண்டாயினமையால், புராணத்தைக் குறைகூறப்புகுந்த அவரது எண்ணம் பலியாமற்போயிற்று. இதிகாசத்தினும் புராணம்தாழ்ந்தது என்று நமதன்பருக்குப் பிரமாணங்கிடைக்கிறவனாயில் இதிகாசஸமும்-புராணமும் வேதம் என்றுகூறிய சுருதியின்சோலிக்கு வராமலிருப்பாராக. இதிகாசத்தினும் புராணம் உயர்ந்தது என்று பிரமாணங்கிடைத்தால், வாய்மாண்டு வலிகெட்டுவாழ்வாராக. இவர் இராமாயணம் பாரதத்தினுடைய நடுநெஞ்சில் விளங்குகிறது எனக்கூறியதும் அஸங்கதம். (அஸ்ருஜத் ஸர்வசாஸ்த்ராணி, மஹாதேவோ மஹேச்வர:) என்றற்றொடக்கத்துச் சாந்திபர்வவசனங்களால் (தண்டநீதி-பிரயோகம்-பிரமாணம்-கூடஸ்தம்-அவற்றினுட் பிரிவுகள்- வேதங்கள்-ஷடங்கங்கள் - மீமாம்ஸை-நியாயவிஸ்தரம்-புராணம்-தர்க்கசாஸ்திரம்-ஆயுர்வேதம் - தநுர்வேதம்-காந்தர்வவேதம்-அர்த்தசாஸ்திரம் - இவற்றின் பிரிவான மூந்நூறுசாஸ்திரங்கள் - ஏழுதந்திரங்கள்) என்னும் இவைகளையும் பாரதம் எடுத்துப்புகழ்தலால், அது இராமாயணத்தையே புகழ்ந்தது எனக்கூறியது விபசரித்தது. அன்றியும், அவர் அநேகபுராணங்களில் இராமாயணம் புகழப்பட்டிருக்கிறது என்றாரன்றோ? அவர்தாமே (இவ்விதிகாசமாகிய பாரதம் பலப்ராணங்களிலுங் கொண்டாடப்பட்டிருக்கின்றது) எனக்கூறினாராகையால், இராமாயணத்தினது ஏற்றம் ஸாமாந்யமாய்விட்டது. நமதன்பர் தொடுத்தவிஷய மொவ்வொன்றுஞ்சிதைந்து சீரழிந்தமையால் அவர்புராணத்தைத் தாழ்த்தி இதிகாசத்தை யுயர்த்தியது அவரது வீணேயேயாய் முடிந்தது. இதுநிற்க.

யாம், நமதன்பரை மறுத்து (இதிஹாஸபுராணாப்யாம்) என்றற்றொடக்கத்துப் பிரயோகத்தில் இதிகாசம் வேதத்தின் பூர்வபாகத்துக்கும், புராணம் அதனுத்தரபாகத்துக்கும் உபபிரஹ்மணமாம் என்று கூறினோமன்றோ? வேதாந்தங்களுக்குப் பாஷ்யங்களெழுதிய பூர்விகர்கள் இதிகாசம், புராணம் இரண்டையுமேதழுவி யுபபிரஹ்மணங்களாக உதகரித்திருக்கின்றார்கள். இதனால், இரண்டுமே உபபிரஹ்மணங்களென்பது ஸித்தம். இங்ஙனமாக, யாம் இதிகாசத்தைப் பூர்வபாகத்துக்கும், புராணத்தை உத்தரபாகத்துக்கும், அமைதியாக்கியதென்

னெனின், நமதுபண்டிதர் இதிகாசமே உத்தரபாகத்திற்குரித்தென விபரீதம்பேசியதை வெட்டிச்சாய்க்கவென்க.வேதாந்தபாகத்திற்கு இரடுமே உபபிரஹ்மணம் என்பதை (இதிஹாஸபுராணாப்யாம் வேதாந்தார்த்த: ப்ரகாச்யதே) என்பதும் நிறுத்தும். ஆயினும், முதனூலாகிய வேதவேதாந்தங்களுக்குச் சார்புநூலாகிய இதிகாசத்தினும் வழிநூலாகிய புராணமே முக்கியமென்பது ஸர்வஸம்பிரதிபந்நமென்க. "அஷ்டாதசபுராணாநி க்ருத்வாஸத்யவதீசுத: , பாரதாக்யாணமகிலம். சக்ரே தது பப்ரம்ஹணம்" என்னும் பிரமாணவசனத்தால் புராணங்களை இயற்றிய முனிவர் அவற்றினுபபிரம்ஹணமாய்ப் பாரதத்தைக்கூறினர் என்று பெறப்படுகின்றது. இது இதிகாசம் புராணத்திற்றாழ்ந்தது என்பதற்குப் பிரமாணமாயினமையால்,இதுவே அவர் யோகாவுக்கீரப்பாயினதறிக. இங்ஙனநிற்க.

நமதுபண்டிதர் இராமாயணம் (இதிகாசம்) என்பதற்குத் தமது பிரசங்கத்தில் ஓர் ஆதரவுங்கட்டாமையால், அது இதிஹாஸஸ்தானத்தி னிலைபெறவில்லையென்று மேல்யாம் சங்கித்தோம். அதனைக்காவியம் என்று யாவருமொப்புவதே நைஜம் என்க. ஆயினும், அது இதிஹாஸப்பேராலும் உபசரிக்கப்பட்டுவருகின்றது. இலட்சங்கிரந்தமுள்ள பெரிய இதிஹாஸம் (சிவரஹஸ்யம்) என்று சிஷ்டர்கள் பலரொப்பியிருக்கின்றார்கள். இதனையும் நமதன்பர் விசாரித்தடங்குக. இதற்குப் (புரமேதிஹாஸம்) என்னும் பிரஸித்தியுண்டு. இவைகளைத்தெளிந்திடாமல் செருக்கியது பேதமையேயாம். இவர் இராமாயணம் பாரதத்திற் றுதிக்கப்பட்டிருக்கிறது என்றாரேயன்றி இவர்எடுத்துக்கொண்டசாந்தோக்யத்தில் துதிக்கப்பட்டிருக்கிறதெனக் காட்டினாரில்லை. இதிஹாஸப்பிரஸ்தாபம் பொதுவேயன்றிச் சிறப்பாகமாட்டாது. மநுஸ்மிருதிமுதலிய நூல்களை யெடுத்தோதியபடி இராமாயணத்தை வேதம் எடுத்தோதியதின்றென்க. அந்தவேதத்தில் புராணப்பிரஸ்தாபமுண்டு. இதனையும் யோசிக்க நமதன்பர் நாணுவாராக. இன்னும் விரிக்கிற்பெருகும்.

இனி, நமதுஐயங்கார் ஹரிவம்சம், ஸகாந்தமுதலிய நூல்களில் இராமாயணம் புகழப்பட்டிருக்கிறதெனவும், இவ்விராமாயணத்திற்குப் பலர் வியாக்யானஞ்செய்திருக்கிறார்களெனவும், பலமுனிவர்கள் இராமாயணங்கள் செய்திருக்கின்றார்களெனவும், ஸகலவைதிகர்களுடைய மனையிலும் இது பூஜிக்கப்பட்டுவருகிறதெனவும், அப்பை

பரீக்ஷிதர் இதனை ஸங்கிரஹித்திருக்கிறார் எனவும், கம்பர் இதனைத் தமிழில் செய்திருக்கிறாரெனவும், இது அருள்வாக்கெனவும், பொய்யில்பாடலெனவும், இதில் நாராயணனது பரத்வமே முக்கியபிரமேயமெனவும், இதில் அறியவேண்டிய அர்த்தங்களெல்லா முளவெனவும், இது ஸகலசிஷ்டர்களு மொப்புக்கொண்டது எனவும், சகலப்ல சாதனமானது என்வும், இது விஷ்ணுதேவதையினிடத்தில் பக்ஷபாதத்தினுதித்ததல்ல, இராமபக்திவெள்ளமே இராமாயணமாகவந்தது எனவும், இதனைச்செய்த வான்மீகிக்கு அஞ்ஞானலேசமுமில்லையெனவும், இதில் சொல்லப்பட்டபரதேவதை இரகுநாயகன் எனவும், இதில் பரப்பிரஹ்மம் ஆர் என்று எழுந்தவினாவுக்கு விஷ்ணு-இராமன் என்று விடைபிறந்திருக்கின்றது எனவும், இவ்வளவுபெருமைநிறைந்த இதிஹாசமாகிய இராமாயணத்தை நோக்கப் புராணம் சிறவாது எனவும் சோனைமாரியாகத் தமது ஆபாசங்களைக் கொட்டினார். இதனைப்பார்த்தபோது எமக்குண்டாகிய சிரிப்பை யாம் அடக்கமுடியாமற்போயிற்று. இனி இவர்காட்டிய துச்சஹேதுக்களை முறையே யாம்கீழேதள்ளுவாம். இராமாயணமொன்றுதானோ பலநூல்களிற் கொண்டாடப்பட்டிருக்கின்றது ? இதற்குமாத்திரந்தானோ பல வியாக்யானங்கள் பிறந்திருக்கின்றன ? இராமகதையைமாத்திரந்தானோ பலமுனிவர் நூல்களாகச் செய்தனர் ? வியாஸபாரதத்தைப் போல ஜைமினிபாரதம் பிரஸித்தியன்றோ ? வேறுநூல்களை வைதிகர் மனையில் பூசிப்பதில்லையோ ? பரீக்ஷிதரவர்கள் இராமாயணத்தை மாத்திரந்தான் ஸங்க்ரஹித்தனரோ ? அவர் பாரதபாகவதாதிகளை ஸங்க்ரஹித்ததில்லையோ ? கம்பர் இராமாயணமாத்திரந்தான் செய்தாரோ ? ஏரெழுபது முதலியனவுஞ் செய்தாரே ! இவ்விராமாயணமன்றி வேறுநூல்கள் சிஷ்டர்களால் தமிழில் செய்யப்படவில்லையோ ? வேறுநூல்கள் அருள்வாக்கும், பொய்யில்பாடலுமாகாவோ ? நாராயணனது பரத்வங்கூறும் அதில் சிவனைப் பரத்துவமல்ல என்று சொல்லப்பட்டிருக்கின்றதோ ? அறியவேண்டிய அர்த்தங்களெல்லாம் இதிற்கிடைக்கையால், வேதாந்தசூத்திரமுதலியன இனி வேண்டப்படாவோ? சிஷ்டர்கள் இந்தநூலையன்றிவேறுநூல்களை யொப்பினதில்லையோ ? இராமாயணமேயன்றி அநேகநூல்கள் ஸகலபுலஸாதனமென்பது அவ்வந்நூல்களிற்கூறப்படும் பலசுருதிகள் ஸாட்சிக்குமே! அப்படி அனுபவமுமுண்டே! அன்பின்வெள்ளத்தாலிதுமாத்திரந்தான் உலகத்திற்பிறந்துள்ளதோ ? வேறுநூல்கள் அன்பில்லாதவர்கள்செய்தனவோ? வான்மீகியை அஞ்ஞானி என்று யாவரேனுஞ்சொன்னார்களோ ? புராணங்களைச்சொல்லியருளியவியாஸ

திகள் அஞ்ஞானமுடையவர்களோ? இராமாயணத்தில் இரகுநாயகர் பர தேவதையென்பது அதிசயமோ? அதில் பரப்பிரஹ்மம்விஷ்ணு-இராமன் என்று வெளிப்படுவது ஒருபுதுமையோ? நமது பண்டிதரது பிரஸங்கத்தால் இராமாயணஞ்செய்தவர்களாக வெளிப்பட்ட முனிவர்கள், ஸ்ரீமத் அப்பயதீக்ஷிதேந்திரர், கம்பர்முதலிய யாவருஞ் சிவனடியார்கள். இவர்கள் இராமனைச் சிவபக்தாக்ரேஸர் எனக்கொண்டே அவரது சரித்திரமஹிமாவர்ணங்களி னுழைந்து ஸந்தோஷித்தார்கள். அதனுல், இராமர் சிவனுக்குமேலிட்ட பரத்துவமுடையராதல் சிறந்திடாது. இவ்வுண்மையறியாது நமதுபண்டிதர் இராமாயணத்தைச் சிலாகித்தது சிவபரத்துவத்துக்கு ஒருஹானியையும் உண்டுபண்ணின தில்லை யென்க. அவ்விராமாயணத்தில் சிவன்பரமாத்மாவன்று, விஷ்ணுவே மரமாத்மா என்று கூறுமையால், அதிற் கூறப்படும் விஷ்ணு பரத்துவம் அவரிற்கீழிட்டபிரஹ்மாதிகளை யபேக்ஷித்துச் சிறக்குமென்க. இது எமக்குச் சம்மதியேயாகையால்,ஈண்டு ஐயங்காரது அலைச்சலுக்கே யாம் பரிதாபப்படுகிறோம். சிவமஹிமையை வியஞ்சனையா லுணர்த்துவதாகிய இதனைநோக்கச் சிவபுராணங்கள் பாஹீனியமாய்ச் சைவமணத்தைவீசுதலால், நமதன்பர் இதிகாசம் எனக்கொண்டாடிய இராமாயணத்தினும் புராணமே உயர்ந்ததெனல் பசுமரத்தாணியெனச் சாதிக்கப்பட்டது. இன்னும் விரிக்கிற்பெருகும்.

இனிநமதன்பர் இராமாயணத்தில் (க்ருதாபிஷேக:)என்னும்வசனத்தால் (பகவானும் ஈசருமானபரமேசுவரர் பார்வதியாருடன் ஸ்நானஞ்செய்து நந்தியுடன் கூடிவிளங்கியதுபோல் இராமர் ஸீதையுடன் கோதாவரியில் ஸ்நானஞ்செய்து லட்சுமணருடன்கூடி விளங்கினர்) என்று பெறப்படுகின்றது என எமதுநாயகரவர்கள் பிரஸ்தாபித்ததை அஸங்கதம் என்று கூறினர்.இதில் இராமருக்குக் கௌரவ முண்டாகச் சிவனையும், ஸீதைக்குமகிமையுண்டாகப் பார்வதியாரையும், இலட்சுமணருக்குப்பெருமையுண்டாக நந்திதேவரையும்வருவித்திருத்தல் நமது பண்டிதருக்கு வயிற்றெரிச்சலாக முடிந்தது. இதற்கு நமதன்பர் (உபநிஷத்தில் பிரஹ்மத்துக்கு ஆகாசத்தை உபமானமாகச் சொல்லியிருப்பதால், பிரஹ்மத்தைக்காட்டிலும் ஆகாசம் பெரிதோ) எனவும், (பாணம்போல் சூரியன்செல்லுகிறானென்றால், பாணவேகம் பெரிதோ) எனவும் ஸமாதானந்தேடிக்கொண்டனர். அன்றியும், (குணங்களில் தசரதனை இராமனுக்கு உபமானமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனுல், இராமனைவிடத் தசரதன் அதிகனோ?) எனவுங் கடாயினர். இவ்வுபமானங்கள் வால்மீகிபகவான் காட்டிய வுபமானத்

தோடினப்பட்டு நிலைபெறமாட்டா. அதனை யீண்டு விளக்குதும். ஒரு சிறியபட்டணத்தைப்பார்த்து இது இந்திரலோகம்போலிருக்கின்றது என்றால், அவ்விந்திரலோகம் தாழ்ந்ததாமோ? ஒருகிணற்றுநீரைப்பார்த்து இது கங்காஜலம்போலிருக்கின்றது என்றால்,அக்கங்கை நீர் தாழ்ந்துவிடுமோ? நமது ஐயங்காரையே யொருவன்பார்த்து, இவர் பெருமாளைப்போலிருக்கிறார் என்றால், அப்பெருமாள் தாழ்ந்து விடுவரோ? இவைகளை யோசிக்கிறபோது நமதன்பர்காட்டிய வுபமானங்கள் எடுத்துக்கொண்ட பிரமேயத்திற் கிணங்கினவல்லவெனல் சரதமாயிற்று. வால்மீகிபகவான் இராமர் நீராடியதைச் சிவனார் நீராடியதுபோலிருந்தது என்று சொல்லியதனாலுண்டாகிய விசேடந்தான்யாது? யாதானுமொருகுணத்தை அதுபயவாதபோது அம்முனிவேந்தர் அதனை அவலமாகப் பிரயோகித்தார் என்று அவர்மேல் தோஷமன்றோ ஏறும்? சிவனார் நிக்ருஷ்டராயின், அவரைப்போல் இராமர் விளங்கினாரென்பது இராமருஞ் சிவனைப்போல் நிக்ருஷ்டராய்விட்டார் என்னும் பொருளையே பயக்கும். ஒரு பிராஹ்மணனைப்பார்த்து இவர் நீராடியது பறையன் நீராடியதுபோலிருந்தது என்றால், அந்தப் பிராஹ்மணனிடத்திலே நீச்சத்வமே பிராப்தமாம். இதனால், இராமருக்கு நிகிருஷ்டோபமானத்தைக்கூறிய வால்மீகி அவ்விராமரைத் தூஷித்தார் என்பதே அமையும். இனி நமதன்பர் நிகிருஷ்டோபமானத்தால் இராமரது உத்கர்ஷடம் கெடாதெனவாவது,நிக்ருஷ்டத்தை அது பயவாதெனவாவது நியாயங்காட்டிச் சாதிக்கவேண்டும். அங்ஙனஞ்செய்தலின்றிப் பிரகிருதோபயுக்தமாகாத சில வுபமானங்களையெடுத்தாண்டு திருப்தியடைந்தது அவிவேகமேயாம்

நமது ஐயங்கார்மணிபோன்ற அதிகாரிகள் இப்படியுளறுவார்களென்றறிந்தே இராமருக்குச் சிவனாரை யுபமானமாகக்கூறிய ஸந்தர்ப்பத்தில் வால்மீகிபகவான் அச்சிவபெருமானைப் பகவான்எனவும், ஈசன் எனவும் இனிதுவிளக்கினர். பகவான்என்பது ஷட்குணைசுவரியசம்பந்நரென்பதையும், ஈசன் என்பது சீவர்க்களை ஆளுகின்றவனென்பதையும் வியக்தமாக்கின. இதனால், இராமர் பகவானும், ஈசருமாகாரென்பது வால்மீகியினது ஹ்ருதயமாயிற்று. வேறுஸந்தர்ப்பங்களில் இராமரையும் அம்முனிவர் (பகவான்—ஈசன்) என்று கூறியிருந்தாலோவெனின், அவ்விராமரிற் கீழ்ப்பட்டவர்களை நோக்க அவை பயன்படுமென்க. சிவனாரதுஸந்நிதியில் இராமர் பகவானும், ஈசருமாகமாட்டாரென்பதே ஸித்தம். பகவானும் ஈசருமாய்விளங்குஞ் சிவபரஞ்சுடரை வால்மீகிஎடுத்துக்கூறியதைத் நிகிருஷ்டோபமா

னம் என நமதுபண்டிதர் வாய்திறந்தது அவரது ஆணவபந்தத்தி ஞதிக்யமென்றே ஸந்தோஷித்தோம். இனி, இராமர் நீராடிப் பின்னர் சிவனைப்போல்விளங்கினர் என்றதனால் அவ்விராமர் பஸ்மத்தினல் அலங்கரிக்கப்பட்டுவிளங்கினர்என்பதும் அமையும். சிவனரது திருக்கோலம் திருநீற்றெழிலினிறைந்து விளங்குவது. அதுவே இராமரிடத்துஞ் சிறந்தது. இராமருக்கு வால்மீகிபகவான் விபூதியைக்கூறவில்லையெனின்,ஸ்நாநானந்தரம் இராமருக்கு அவர்பாழ்முகத்ஸ்தயாவொப்பினர் ? (க்ருதாபிஷேக:) என்று கூறிய வுபமானத்தால் விபூதிதாரணத்தைக் குறிப்பித்தார் எனவே அமையும். இராமாயணத்தில் (தஸ்யகல்மாஷபாதஸ்ய, யஜ்ஞபூதிரியம்சுபம்) என்னும் வசனத்தால் விபூதிமகிமை பெறப்பட்டிருக்கின்றது. வேறு எதனையும் அந்தநூல்விதந்தோதியதில்லை. இதனல் காவியகர்த்தாவினது ஹ்ருதயம் இனிதுவிளங்கியது. விபூதி அதிகபுனிதமென்புதை "ஊர்த்வபுண்ட்ராணிகுர்வீத, வாரிம்ருத்பஸ்மசந்தனை:" என்னும் பாஞ்சராத்திரவசனமும் எடுத்தோதியது. இத்யாதி அர்த்தங்களைக்கொண்டு விளங்கும் உபமானத்தை நமதன்பர் நிகிருஷ்டமாக்கியது அவரது மதாந்தகாரத்தின் மயக்கமேயாம். இனியேனும் உண்மையுணர்ந்திடுவாராக. இதுநிற்க.

அவர்கூறிய உபமானங்களைச் சற்று யோசிப்பாம். பிரஹ்மம் ஆகாசம்போல்வது என்றதனல், பிரஹ்மத்தைநோக்க ஆகாசம் உயர்ந்ததோ என்று கடாயினர். பிரஹ்மம் எட்டாதபொருள். அதையுணர்த்தவேண்டி எட்டியபொருளாகியஆகாசத்தைக்காட்டலாயிற்று. பிரஹ்மத்துக்குமேல் ஒருபொருளிருந்தால், அதனையெடுத்துவமிக்கக்கூடும். ஒருபொருளுமில்லை. அதனல், பிரஹ்மத்துக்குக் கீழிட்டபொருள்களிலேயே யொன்றையெடுத்தோதியது ஸஹஜமாயிற்று. இப்படியே சூரியன் எட்டாதபொருள். அவனதுவேகத்தையுணர்த்தவேண்டி எட்டியதாகிய பாணவேகத்தை யெடுத்திசைத்தல் யுக்தமாயிற்று. ஈண்டு உபமேயப்பொருள்கள் எட்டாதனவும், உபமானப்பொருள்கள் எட்டினவுமாயின. வால்மீகர் உபமேயமாகக்கூறிய இராமர் எட்டியபொருளும், உபமானமாகக்கூறிய சிவன் எட்டாதபொருளுமாயினர். எட்டியபொருள்கள் தாழ்ந்தனவும், எட்டாதபொருள்கள் உயர்ந்தனவுமாகியவுண்மையே ஈண்டுமுடிவாயிற்று. இந்தவியவஸ்தையால் நமது ஐயங்கார்காட்டியவுபமானம் இராமரது பரத்துவத்தையே அழித்தது. இவ்வுண்மைகளால், வால்மீகிபகவான் சிவஸர்வோத்தமத்தைப் பிரதிபாதித்துஅச்சிவபெருமானை

இராமர் பூசித்தாரென்பதை நாட்டினானெனலே ஸத்தியம். இராமனைக்காட்டிலுந் தசரதர் உயர்ந்தவரென்பதை யாம்பலஸந்தர்ப்பங்களிற் பிரகாசப்படுத்தியிருக்கின்றோம். ஆகையால், இவர்களை நம்மவர் உபமானோபமேயங்களாகக் கொண்டதும் பயன்றரா தொழிந்தது. இங்ஙனமிற்க.

நமதன்பர் (ஸ்ரீமநோநீலகண்டஸ்ய) என்று இராமர் சிவபெருமானைப் பிரஸ்தாபித்தது உலகில் ஒருவருக்கொருவர் (ம-ா-ா-ஸ்ரீ) என்று எழுதுவதுபோலாம் என்றுபிதற்றி ஸந்தோஷித்தார். அன்றியும்,(அவ்விராமர் விபீஷணனையும் ஸ்ரீமான் என்று பூஷித்தார். ஆகையால், விபீஷணன் இராமருக்கு எஜமானனாவனோ) எனவும் வினவி மகிழ்ந்தார். சுக்ரீவதசரதர்களை முன்னிட்டு (நாதம்-பிரஸாதம்-தெய்வதே) என்று இராமர்பிரஸ்தாபித்தார் என்று ஐயங்கார் வாயாடியதற்கு இனிவாயாடாமலிருக்க யாம் அடித்துவைத்திருக்கும் ஆப்பே ஈண்டும் பிரயோசனமென்க. இனி, அவர் (ஸ்ரீமநோ நீலகண்டஸ்ய) என்கிற சுலோகத்தில் "சிவனுடையஆணை தனக்குங் கடக்கமுடியாதென்று இராமன்சொன்னதாக இல்லை" என்று பிரஸங்கித்தனர். அவ்வளவேயன்றி அதற்குப்பொருள் இதுவென்று விரித்தாரில்லை. அந்தப்பிரயோகம் இன்னஸந்தர்ப்பத்தினதுஎன்றுங்காட்டினாரில்லை. இவர்மயக்கந்தீரப் பின்வாக்கியத்தை யூகிப்பாராக. "சத்துருக்கன் றன்னை லவணாசுரன்மேற்போர்க்குத்-தானனுப்புங்காநீல கண்டர்திருவாணை, யித்தரையிலெவராலுங் கடக்கவொண்ணாதென்னு-மீதறியாய்கொல்லோநீ யென்றிராகவனும், ருத்தரராமாயணத்தி லுரைத்தபடியாலு-முறையளவையின்னுமுள வாருமதனாலும், தத்துவசிங்காதனராஞ் சிவனாணை தன்னைச்-சகலர்களும்வகிக்கின்றா ரென்பதுசத்தியமே" என்னு மிந்தஸந்தர்ப்பத்தை யுய்த்துணரும் புத்திபோதாமல் நமதன்பர்செய்த ஜாலவித்தை இழிவேற்று நின்றது. விரிக்கிற்பெருகும்.

இவ்வளவிலமையாத நமது சிற்றுத்துக்காட்டார் "பார்த்தனுக்குப் பரமபுருஷன் தேர்ப்பாகனானகதை பாரதத்தில் ஸ்பஷ்டமல்லவா? அதனால்பார்த்தன்பெரியவனா"எனவும்,"பரமசிவன் தன் பக்தனுக்காக விலைமாதினிடம் தூதுநடந்தாரே. அதனால், சிவன் தண்ணியரா?" எனவும் வீண்பிரஸங்கக்கடையை விரித்தார். இவைகளை அவமொழிக்காட்டியதற்கு ஓர் ஏதுவும் புலப்படவில்லை. பார்த்தனுக்குக் கண்ணன்தேரோட்டியபடிச் சிவனுக்கு இராமர் யாது காரியஞ்செய்தார்? சுந்தரனுக்காகச் சிவன் பரவையாரிடந்தூதுநட

ந்தபடிச் சிவனுருக்காக இராமர் யாவரிடம் [illegible] நடந்தார்? இரா மாயணமுழுதும் பார்த்தவர்கள் சங்கரனதுகிங்கரன் இராமனென்பார்களேயன்றி நமதன்பர்பிதற்றியபடி (கிங்கரனாகிய சங்கரன்) என்று புலம்பிப் பாவத்திற்கு மடிகட்டிக்கொள்ளார்கள். இவ்வுண்மைதேராது வீணிலுதகரித்த வுபமானங்கள் அஸாமஞ்சஸமாயின. பார்த்தனுக்குக் கண்ணன்றேரோட்டியுய்த்து அந்தப்பார்த்தன் தனதிஷ்டனும், மைத்துனனும்,சீடனுமாகிய வுரிமைமேற்கொண்டு. அவ்வளவேயன்றிக் கண்ணன்தெய்வமும்,பார்த்தன் அவனுக்குஅன்பனுமாகார்கள். கீதாசாரியனாய் வெளிப்பட்டகண்ணன் உடனிருந்தும் அவனைப்பூசிக்காமல், அவனிடத்திற்பார்த்தன் சிவனைப்பூசித்தவாறென்னை? அசுவத்தாமாவைப்பார்த்துக் கிருஷ்ணார்ஜுனர்களது சிவபூஜாமகிமையை வியாஸபகவான் விதந்தோதியவாறென்னை? அவருள்,அர்ஜுனன் தனதுசஸ்திரங்களின் சிரசினின்றுகொண்டு ஓர் மஹாபுருஷன் சூலமேந்தித்திரிந்து தனது சத்ருக்களையெல்லாந் துவம்ஸஞ்செய்கிறானென்று வியாஸரிடம் எடுத்தோதியவாறென்னை? இவைகளையுணர்ந்தபேர் பார்த்தனை விஷ்ணுபக்தன் என்றி யாங்ஙனங் கூறுவர்? அவன் சிவபக்தன் என்பதேஸித்தம். மேற் பிரஸ்தாபத்தில் கண்ணனுஞ் சிவபூஜாநிஷ்டனாதலைப் பிரகாசிப்பித்தோமாகையால், சிவபக்தர்களாகிய இருவரும் ஒருவருக்கொருவர் அன்புபாராட்டினார்கள் எனவு முசிதமாம். இதைவிட்டுக் கண்ணன் தெய்வம், பார்த்தன் அடிமை என்று நமதுபண்டிதர்கூறியது வெறுங்கையை முழம்போட்டதாக முடிந்தது.

இதுமட்டோ, நமது அன்பர் "சங்கரன்கேட்டுக்கொண்டபடி நாராயணன் கிருஷ்ணவதாரத்தில் சிவனை ஆராதித்துப் பெருமைப் படுத்தினார்" என ஒன்றுகூறினார். இதுவிந்தையினும் விந்தையாம். ஓர் தண்ணீர்ப்பந்தலையடைந்து நீரருந்தித் தாகந்தணிந்த வொருவன் (இந்தத்தண்ணீர்ப்பந்தர் வைத்தவனுக்குப் புண்ணியமுண்டாகும் பொருட்டு நானிங்குவந்தேன். என்னுடைய தாகந்தணிக்கிடவந்ததில்லை) என்று கூறுமுபமானமே இதற்கு நிதரிசனம். இப்படியும் ஒருபொய்யைக் கற்பிப்பாருண்டா? சங்கரன் நாராயணனை நோக்கி நீ என்னைப்பூசித்து எனக்குப் பெருமையுண்டாக்கவேண்டியது என்று கேட்டது சத்தியமாயின், நமதன்பர் பின்வருங் கேள்விக்குப் பதில்கூறுவாராக. ஓரன்பன் கடவுளைநோக்கி (என்னைக்கடவுளாக்கிவிடும், நீர் அடிமையாய்விடும்) என்று வரங்கேட்டால், அதனை அக்கடவுள் அருளுதல்கூடுமோ? சுபாவபாவவிருத்தமானகாரி

மம நடவாதாகையால், விஷ்ணுவானவர் கிருஷ்ணவதாரத்தில் சிவனைப்பூசித்துப் பெருமைபடுத்தினர் என்றது நமதன்பர் விஷ்ணுவுக்குத்தேடிய பரத்துவதானமாகவே முடிந்தது. நாடகம் அது என்பாராயின், அப்போது வரதானபாலனம் அழியும். நமது ஐயங்காரை அவரிஷ்டப்படி நடந்துகொள்ளும் அம்பட்டனொருவனடைந்து எனக்குஒருநாள் தங்கள்க்ஷவரஞ்செய்து என்னைப்பெருமைபடுத்தவேண்டியுளது என்று கேட்டால், அதற்கு அவரிசைந்து அந்தக் காரியத்தைச் செய்துமுடிப்பாரா? தெய்வத்தைத் தான்பூசித்தலைவிட்டுத் தன்னைத் தெய்வம் பூசிக்கக்கேட்டலும், அவ்வாறு அத்தெய்வம் ஒருவனுக்கு வரங்கொடுத்தலும், பூசித்தலும் மூடர்கழகத்து முன்னுக்குவருமேயன்றி முற்றுணர்ந்தோர்கழகத்து முனைத்தெழாதென்க. நமதன்பரதுகற்பிதம் அம்பட்டன் அந்தணனாவதும் கறுப்புநாய் வெள்ளைநாயாவதுமாகிய அதிசயங்களுக்கே ஒப்பிடத்தக்கது. பாரதம், துரோணபர்வத்தில் "ததோர்வபச்யத்கிரிசஸ்யவாமே" என்னும் வசனத்தால் ஸ்ரீகிருஷ்ணருடைய தவத்தை ஸந்தோஷித்துப் பரமசிவம் அநுக்ரஹார்த்தமாய் வெளிப்பட்ட அவஸரத்தில் அவரது இடதுபாகத்தில் சங்கசக்ரதரனாய், அனேக திவ்யஸ்தோத்திரங்களால் துதிசெய்துகொண்டிருந்த விஷ்ணுவை அந்தக்கிருஷ்ணர் பார்த்தார் என்று பெறப்படுகின்றது. இதில், மூலவிஷ்ணுவும் அவதாரவிஷ்ணுவும் ஏககாலத்திற் சிவனைவழிபடுதல் பெறப்பட்டது. அவதாரவிஷ்ணு செய்த சிவபூசையை வரதானபாலனம் என்று நாட்டினவர் மூலவிஷ்ணுவைத் தெருவில்விட்டது என்னையோ? கண்ணன் சிவனைநோக்கிப் பிள்ளைவரங்கேட்டுத் தவங்கிடந்ததும், தவப்பேறுகக்கிடைத்த மகவுக்கு அவர் ஸாம்பன் எனப்போட்டதும் நமதன்பருக்கு வரதானபாலனமாயினது அவரது புந்திபிரமமேயாம். "விச்வாதிகோருத்ரோ மஹர்ஷி:" எனச்சுருதியிற் போந்த சிவபரஞ்சுடருக்கு "ப்ரக்ருதி:பரமோவிஷ்ணு:" எனப்போந்த நாராயணர் பெருமையுண்டுபண்ணுகின்றார் என்பது வேதமறியாத விழலாக்கே ஒப்பென்க. இந்தவியவஸ்தையால், சுந்தரருக்கு அன்பாலே சிவனார் தூதுநடந்தார் என்று ஐயங்கார் தேடிக்கொண்டதும் அவருக்கு ஸாதகமாகாமற்போயிற்று. சுந்தரர் தன்னைப்பூசித்துத் தனக்குப்பெருமையுண்டுபண்ணும்படிச் சிவனைவேண்டினரா? தானேயன்றோ சிவனைப்பூசித்துப் பெருமைபெற்றார்? அன்றியும், சிவனும் சுந்தரரும் மூலமூர்த்தியும், அவதாரமூர்த்தியுமாயுள்ளவர்கள். அவர்களை நம்மவராதரித்தது கூடாது. இனி, அடியார்களெபாருட்டுப் பக

வான் எவ்வளவு தாழ்வானகாரியஞ்செய்தாலுஞ் செய்வர். அவ்வடியார்களை ஆண்டவனென்று வணங்குவதுமாத்திரஞ்செய்யார். அது அடியார்களைப் பெருமைபடுத்துவதாகாமல், அவர்களை நரகிலமுழ்த்துவதாகவே முடியும். அடியார்கள் என்னுஞ்சொல்லே அடியிற்கிடக்கின்றவர்கள் என்று பொருளைப்பயக்கின்றது. அவர்களது அடியில் கடவுள்கிடத்தல் யாங்ஙனம்? அரசன்காலில் அடிமைவீழ்வதே அவ்வடிமைக்குப் பெருமையன்றி அவ்வரசன் அடிமைகாலில் வீழ்வது அவனுக்குப்பெருமையாகாது. அரசன் வீழவுமாட்டான். அப்படிவீழ்பவன் அரசனாகவுமாட்டான். இந்தவுண்மைகளால், சிவன்காலில்வீழ்ந்து கும்பிட்டகண்ணனை அச்சிவனுக்குத்தெய்வம் என்று நமதன்பர்கண்டஸ்வப்நம் அவரதுபித்தின்விகாரமென்பதே ஸத்தியம். விரிக்கிற்பெருகும். இங்ஙனநிற்க.

நமது பண்டிதர் "ஹரியேசிவனைப்படைத்து ஸம்ஹாராதிகாரத்தில் முடிசூட்டினதும், அவரது திருவிளையப்படி அயன் சிவன் முதலானோர்கள் இடியைக்கண்டு நடுங்குமாப்போலே நடந்துவருகின்றனரென்பதும்உபநிஷத்துப்பாரதபாத்மாதிகளாலே ஸ்பஷ்டம்" என்று பரக்கத் தீட்டினார். "தவச்ரியேமருதோ மர்ஜயந்தருத்ராத்தே ஜநிமசாருசித்ரம்"என்னும் ருக்ஸம்ஹிதாவசனத்தால் ஸமஸ்த தேவர்களும் சிவலிங்காராதனத்தால் எல்லா ஐசுவரியங்களையும் அடைந்தார்களெனவும், லட்சுமீஸமேதராகிய விஷ்ணுவானவர் பரமபதவாழ்வை அடைந்தாரெனவும் பெறப்படுகின்றது. இதற்கு உபபிரஹ்மணமாக "ரௌத்ரம் ஸமப்யர்ச்சஹிலிங்கமாதௌ" என்னும் பிரம்ஹகைவர்த்தவசனமானது இந்தவிஷ்ணுவானவர் ஆதியில் சுந்தரமாகவும், சிலாமயமாகவுமிருக்கின்ற சிவலிங்கத்தைப் பூசித்து ஸர்வோத்தமமாகிய பரமபதவாழ்வை அடைந்தார் என்று வெளிப்படுத்துகின்றது. இந்த வுபநிஷதர்த்தத்தைப் பொருமையின்றிப் பார்த்து க்ஷேமமடையாமல் நமது ஐயங்கார் உபநிஷத்தென்னுஞ் சொல்லை வீணிற்பிரஸ்தாபித்து அது ஸம்ஹாராதிகாரத்தைச் சிவனுருக்கு விஷ்ணுகொடுத்தாரென்று சொல்லுவதாகப் பிதற்றியது பேதமையே.இனிப்பாரதம், அநுசாஸநீகத்தில் "ஸோஸ்ருஜத்தக்ஷிணாதங்காத் - ப்ரம்ஹாணம் லோகஸம்பவம், வாமபார்ச்வாத்ததாவிஷ்ணும்-லோகரக்ஷார்த்தமீச்வர:, யுகாந்தேசைவஸம்ப்ராப்தே-ருத்ரம்ப்ரபுரதாஸ்ருஜத்" என்னும் வசனத்தால் சிவபெருமான் தனது வலதுபாகத்தினின்றும் லோகஸ்ருஷ்டியின்பொருட்டுப் பிரஹ்மா

வையும், வாமபாரிசத்தினின்றும் லோகரக்ஷணார்த்தமாய் விஷ்ணுவையும், ஸம்ஹாரத்தின்பொருட்டு உருத்திரமூர்த்தியையும் உண்டுபண்ணினாரென்று பெறப்படுகின்றது. பாத்மத்தில், "விஹாயஸாம்பமீசாநம் யஜந்தேதேவதாந்தரம்" என்னும் வசனத்தாலும், "விஷ்ணுதர்சனமாத்ரேண சிவத்ரோஹப்ரஜாயதே" என்னும் வசனத்தாலும் சிவேதரோபாஸனையுடையவர்கள் நற்கதியடையமாட்டார்கள், அவர்கள் துர்க்கதியையே அடைவார்கள் எனப் பெறப்படுகின்றது. இவைகளை யூன்றிப்பாராமல் பாரதபாத்மங்கள் சிவாபகர்ஷங்கூறுவதாக வெறிகொண்டெழுந்தது அவரது வினையின்பெருக்கேயாம். சூரன், தாரகன் முதலிய அசுரராணையிற்கட்டுண்டு இடியைக்கண்டு நடுங்குமாப்போலேகிடந்த விஷ்ணுவை எமது சிவபரஞ்சுடருக்கடங்கிக்கிடந்தாரென்று யாம்பிரஸ்தாபிப்பது எமக்கே அதிக லஜ்ஜையாக விருக்கின்றது. இவைகளை இனியேனும் ஆய்ந்தடங்கிச்சுகிப்பாராக.

இனி, நமதன்பர் சிலசுருதிகளை யுதகரித்து,அவற்றால் விஷ்ணுவுக்குப் பரத்துவமுண்டென்று சாதித்தார். அவை, "அந்தர்ப்பஹிச்சதத்ஸர்வம்-வ்யாப்யநாராயணஸ்திதः, எனவும், "யமாத்மானமந்தரோயமயதி" எனவும், "அக்கினிர்தேவனுமவமோ விஷ்ணு: பரம:" எனவும், "நாராயணபரப்ரஹ்மா தத்வம்நாராயண: பர" எனவும், "யஸ்மாத்பரமநாபரமஸ்திகிஞ்சித்" எனவும், "நாஸ்திநாராயணஸமம் நபூதம் நபவிஷ்யதி" எனவும் பேரந்தனவேயாம். இவற்றுள், முதல்வாக்கியம் நாராயணனே வியாபகனெனச் சாதித்ததாக மகிழ்ந்தார். பிருதிவி, அப்பு என்னுந் தத்துவங்களில் விஷ்ணுவுக்கு அப்புதத்துவத்தி லாதிக்யமுண்டாகையால், அவ்வப்புவானது பிருதிவிக்குமேலிட்ட வியாபகமுடையதெனல் ஸித்தம். அதனால், விஷ்ணுவுக்குப் பிருதிவியண்டத்திலுள்ள வியாபகத்தை யாம் மறுக்கவரவில்லை. அவர் மண்ணுண்டதையே உலகமுண்டதாக நூல்களுபசரிக்கும். "ப்ருதிவ்யோப்வ, ஆபச்சர்வ, அக்னேருத்ரோ,வாயுர்ப்பீம,ஆகாசஸ்யமஹாதேவ,சூர்யஸ்யோக்ர:, சந்த்ரஸ்ய ஸோம:, ஆத்மாந:பசுபதி:" என்னுஞ் சுருதியால் சிவனுருக்கு ஸர்வவியாபகத்வம் கேட்கப்படுகின்றது. இந்தப் பரமேசுவரவியாபகத்தின் முன்னர் விஷ்ணுவினது வியாப்கம் ஜீவிப்பதெங்ஙனம்? மண்ணை. வியாபித்துநின்ற நீரின்மேற்கிடக்கும் விஷ்ணுவை ஸர்வவியாபியெனல் யாங்ஙனம்? ஸகலதத்வாதீதனும், "விச்வாதிகோருத்ரோ மஹர்ஷி:" என்று பிரதிபாதிக்கப்பட்டவனுமாகிய தனிமுதலே ஸர்வவியாபியென லமை

வுடைத்து. "ஸர்வவ்யாபீசபகவான் - தஸ்மாத்ஸர்வகதச்சிவ என்னுஞ்சுருதியும் அதனை நிறுத்தும். இதனையுணராது நமதன்பர்கூறிய நாராயணவியாபகத்வம் நலம்பெறாதழிந்தது. இனி இரண்டாவது-வசனத்தால் நாராயணர் ஸர்வாந்தரியாமியென்று சாதித்தார். அந்தவசனம் பரமாத்மபரமாய் நிற்கின்றது. பரமாத்மா சிவனாகையால் சிவனே ஸர்வாந்தரியாமியென்பது ஸித்தம். "ஈசானம் பரமம் வித்யாத் ப்ரேரகம்புத்திஸாக்ஷிணம்" என்னுஞ் சுருதியும் அதனை நிலைபெறுவித்தது. இதனால், நாராயணர்தான் ஸர்வாந்தரியாமி என்று அவர்சாதித்தது நிலைதளர்ந்தது. இனிஅவர்காட்டிய மூன்றாவது வசனம் அக்னி தேவர்களுக்குக்கீழானவன் விஷ்ணு மேலானவன் என்று தெரிவிக்கையால் விஷ்ணுவைத் தேவோத்தமனென்று சாதித்தார். தேவர்க்களில் அக்னிதானோ கீழிட்டவன்? சூரியன் சந்திரன்முதலிய வொளிகளுக்கெல்லா முள்ளொளியாயிருந்து பிரகாசிப்பிக்குஞ் சுடர்ப்பிழம்பாகிய அக்கினியை யாவரினுங் கீழிட்டவனாகக்கொள்ளுதல் யாங்ஙனம்? அக்னிகாரியத்தினாற்றானே அந்தணராகுதிபெருகி அவர்க்கு வாழ்வுண்டாமெனின், அவ்வக்கினியைத் தாழ்பொருளாகக் கோடல் யாங்ஙனம்? இவைகளை யோசிக்கையில் அக்கினியைக் கீழிட்டவன் என்றது ஓரவசரமேயன்றி ஸார்வகாலிகமல்ல. அவனுக்கு மேலிட்டவர்களில் அவன்கீழானவன் என்பதையே அண்டுக்கிரகிக்கவேண்டியது. இப்படியே விஷ்ணுவேபரமன் என்றவிடத்திலுங் கொள்ளவேண்டியது. விஷ்ணுவானவர் ஜலதத்வாதிஷ்டான தேவதையேயன்றி வேறில்லை. ஜலத்துக்குமேல் அக்னி, அக்னிக்குமேல் வாயு, வாயுவுக்குமேல் ஆகாசம் என்னுந் தத்துவங்களுளவாகையால், அவ்வத்தத்வாதிஷ்டானதேவதைகளைநோக்க, விஷ்ணுவுக்கு யாண்டுப் பாரம்யம் நிலைக்கும்? இப்படியே யொடுக்கத்தினுங் கண்டுகொள்க. எங்ஙனமெனின், எல்லாம் ஜலார்ணவமாகின்றகாலத்தில்நாராயணர் வடபத்திரசாயியாய் அந்தவெள்ளத்தின்மேற்கிடப்பர். ஜலம் அதிக்ரமித்தலையால் பிருதிவி அதில் லீனமாயினதென்பதே விஷ்ணுபரமன் என்பதன்கருத்து. பிருதிவிக்கதிஷ்டானமாகிய பிரமனும், அவனிற்கீழிட்டகாரியகோடிகளுமாகியதேவர்க்களில்விஷ்ணுவேபரமன்என்பதில்எமக்காக்ஷேபமின்று. இவ்வளவேயன்றி அக்னிதத்வாதிஷ்டான தெய்வமாகிய உருத்திரனைநோக்க விஷ்ணுவுக்குப் பரமன் அல்லது மேலான்வன் என்னுஞ்சிறப்பு நிலைக்கமாட்டாது. "ப்ராத்பரதரோப்ரஹ்மா-தத்பராத்பரதோஹரி:-தத்பராத்பரதோ ஈச:-தஸ்மாத்துல்

யோதிகோநஹி" எனவும், "விஷ்ணு:ருத்ராபரஸ்யவித்வான்" என
வும்போந்த சுருதிகளை நமதன்பர் பார்த்திருந்தால் (விஷ்ணு:பரம:)
என்னுஞ்சுருதியைக் கையிற்பிடித்துக்கொண்டு இறுமாந்திடார்.
அன்றியும், "நாஸ்திநாராயணஸமம்" என்னுஞ்சுருதியையு மெடுத்து
எமக்குப் புதுமைகாட்டார். யாம்காட்டிய சுருதிகளால் விஷ்ணுவுக்
குப்பரம் ஈசன், அவருக்குத்துல்யமும் பரமுமில்லை எனவும், விஷ்
ணுவானவர் உருத்திரனைக்காட்டிலுங் குறைந்தவர் எனவும் வெளி
யாயினமையால், விஷ்ணுபரமன்-நாராயணனுக்குஸமம் ஒருவரு
ல்லை என்று கூறியசுருதிகள் கீழடங்கிப்போயின. "தமீசவராணா
பரமம் மஹேச்வரம்" என்னுஞ்சுருதியால் ஈசுவரர்களைநோக்க மஹே
சுவரரும், தேவர்களைநோக்க மஹாதேவரும், பசுக்களைநோக்கப் ப
தியுமாய் விளங்குகின்றார் சிவபெருமான் என்று பெறப்பட்ட அ
த்தபாஹுள்யத்தையும் இனி நமதுதோழர் அறிந்து சுகிப்பாராக.

நமது சிற்றுத்துக்காட்டார் பின்புகாட்டிய "நாராயணப
ரம்ஹ்ரா" என்னும் வசனத்தின்சொரூபத்தை முன்னொருஸந்தர்
பத்தில் இந்தநூலில் யாம் இனிதுவிளக்கியிருக்கின்றோம். ஆண்டு
கண்டுகொள்க. இவர் "யஸ்மாத்பரம்நா பரமஸ்திகிஞ்சித்
என்று காட்டியவசனம் சைவபரத்வபோதகமென்றறிக. நமதன்ப
காட்டிய ஒவ்வொருவசனமும் அவருக்கு ஸாதகமாகாமல் அவர்பே
டிக்கொண்ட விஷ்ணுபரத்துவத்தைச் சாதிக்கவலியில்லாதடா
யின. அதர்வசிரஸில் (ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரேந்த்ராஸ் ஸம்ப்ரஸூய
ந்தே - ஸகாரணம் காரணந்துத்யேயச் சம்பு:" என்னும்வசனமான
விஷ்ணுவை (ஸகாரணம்) என்று பிரதிஷேதித்தலை யறிந்தும் நம
ன்பர் அவரைப் பரம் என்று சாதிக்கவெழுந்தது அவரது பாவ
த்தின் கொழுமையேயாம். இந்தச்சுருதியில் நாலாவதுபரம் சம்பு
சிவம் என்னும் வாசகங்களால் வெளிப்பட்டமையால், இதற்குமே
விட்ட ஐந்தாவதுபரம் விஷ்ணு, நாராயணவாசகங்களால் நமதன்ப
சாதிப்பினன்றோ அவரது விஷ்ணுபரத்துவம் நிலைக்கும்? இதற்கு
கதிதேடாமல் விஷ்ணுவேபரம் என்று அவர்சாதித்தது எ
என்பதோடொத்து இழிந்ததென்க.

இனி, நமதன்பர் "ஸர்வேதேவா: பசுதாமவாபு:, ஸ்வயம்தஸ்
பசுபதிஸ்ஸம்பபூவ" என்னுஞ்சுருதியில் ஸர்வதேவர்களும் பசு
க்கள் என்றிருப்பதற்கு ஒருவியாக்யானஞ்செய்தார். தேவர்கள்
என்பது சிவபூதங்கள் எனவும், அவர்களுக்குப்பதி சிவன் எனவும்,

ஸமர்த்தித்து விஷ்ணுமுதலியதேவர்களை அப்பசுக்கூட்டத்தினின்று நதப்பவைத்தார். அன்றியும் சிவன், தேவஸேனாபதியாக முடிசூட்டப்பட்டவனாகையால், அவர்களைரக்ஷிக்கும் தன்மையால் பதியெனவும் ஆம் என ஒன்றுகூறினார். இதனால், சிவன் ஸர்வரக்ஷகனாகமாட்டான் எனவுஞ் சாதித்தார். ஆதித்யபுராணத்தில் (ப்ரஹ்மவிஷ்ணு ஸுரேந்த்ராத்யா:-பசவ:பரிகீர்த்திதா:) என்னும் வசனம் சுருதிவிலக்கெனக்கூறி, அது பிரமாணமாகாதென வொதுக்கினார். "ருத்ராயபூதாதிபதயே" என்று சிவனையும், "விஷ்ணவே ஸர்வாதிபதயே" என்று விஷ்ணுவையும் (யமஸ்மிருதி) கூறுகின்றதெனவும் பிரஸ்தாபித்து ஸந்தோஷித்தார். இவரது அகந்தையடங்க யாம் இவை கூறுகின்றோம். "ஸர்வேதேவா: பசுதாமவாயு" என்னும் வசனத்தைப்பலாதத்திற்போந்தது. அதிற்றானே "ஹேயாந்விஷ்ண்வாதிகாநஸுராந்" என்று விஷ்ணுவை வர்ஜித்திருக்கின்றது. அதர்வசிரசில் விஷ்ணுவை(நகாரணம்) என்று பிரதிஷேதித்திருப்பதும் விடத்தம். ஹேயமாக நகாரணம் என்று வர்ஜித்திருக்கும் விஷ்ணுவைப் பசுவென்பது அதிசயமா? இந்த அர்த்தத்தைக் கடைப்பிடித்து விஷ்ணுவைப் பசுவென்றுகூறிய ஆதித்யபுராணம் சுருதிசிஷ்டமென்பது ஸத்தியம். இவ்வுண்மைதேராது கபோதித்தனமாக அந்தப் புராணத்தைச் சுருதிவிலக்கென அவர்பிதற்றியது தெளிவின்மையேயாம். இந்த முடிவால் (தேவா:) என்பதற்குப் பிரமதகணங்களை என்று அவர்கூறியபொருள் தடுமாறிவிட்டது. 'பிரமதகணங்கள் தேவர்களினும் அதிகர்; பிரமதாதிபதியாகிய சிவன் தேவாதிபதியாதல் அதிசயமோ? பிரமதர்களில் ஒருவனாகிய சங்குகர்ணன் ஓர்கால் விஷ்ணுவினது சிகையை அறுத்துக்கொண்டு துரத்தியதை நமதன்பர் அறியார். பூதாதிபதி என்றதை ஆதிக்யங்குறைந்ததாக எண்ணி (ருத்ராயபூதாதிபதயே)என்றுஎடுத்துக்காட்டினவர் (ஈசாநஸ்ஸர்வவித்யாநாம்-ஈச்வரஸ்ஸர்வபூதாநாம்) என்ற சுருதியிற்போந்த பூதபதித்வத்துக்கு யாது செய்வர்? கண்ணன் கீதையில் (ஈச்வரஸ் ஸர்வபூதாநாம்) என்ற பூதபதித்வம் யாது? பூதபதி என்பதும், பசுபதி என்பதும் சிவனது பரியாயநாமங்களெனத் தெளிந்தடங்குவாராக. நகாரணம்என்றுவேதம்பிரதிஷேதித்துவிட்ட விஷ்ணுவை நமதன்பர் ஸர்வாதிபதிஎன்று கொண்டாடியது(ஸர்வாதிகாரமோர்வேலைக்காரனை அவனையாளும் அரசனெனத் துணிந்திடல் போலாம். அவருக்குக் கீழ்ப்பட்டபுவனங்களில் அவர் ஸர்வாதிகாரியெனல் கிராக்ஷேபம். இவ்வுண்மைகளைச் சித்தஸமாதானத்துட

ன் விசாரிப்பதொழிந்து, "ஸ்வதச்சிவ:பசுபதி:" என்ற சுருதி யைப்பார்த்து வயிறெரிந்து, இப்படி நமக்கு ஒருசுருதி அகப்படவி ல்லையே யென்று கண்ணீர்விட்டழுது நமதுபண்டிதர் எமக்குப்பரா க்குக்காட்டியுது அவரது ஏழைமையேயாம். அவரதுதெய்வம் பசு வென்பதை இன்னும் விரிக்கின்றும். "சிவஏகோத்யேயச் சிவம்கர ஸ்ஸர்வமந்யத்பரித்யஜ்ய" என்னுஞ் சுருதியால் சிவேதரமாயுள்ள விஷ்ணுவாதி ஸமஸ்தரும் பரித்யஜிக்கத்தக்கவராயினர். விஷ்ணு வானவர் பதியாயின், (ஹேயாந்) என்று பிரயோகித்து அவரைப் பரித்யஜிக்க வேதம்விதிக்கமாட்டாது. அன்றியும், "யோமாத்ஸ்ய கூர் மாதி வராஹஸிம்ஹாந், விஷ்ணுக்ரமந்தம் வாமனமாதிவிஷ்ணும், ஸவிகலபம் பீட்யாமாநம்," என்னுஞ்சுருதியால் விஷ்ணுவையும், அவ ரது அவதாரங்களான மத்ஸ்ய கூர்ம வராஹ ந்ருஸிம்ஹாதிகளையும் வாட்டிப்பிடித்து ரக்ஷிக்கின்றவர் சிவன் என்று வியக்தமாகின் றது. விஷ்ணுவை முவடக்தாரகக்கொண்டே தந்நிவர்த்திமைத்தே டும் சிகைக்ஷரகைக்ஷகளை வேதம்ஒப்பிப் பிரஸங்கித்தமையால், அவ ரைப்பசுவென்று கூறியதால் குடிமுழுகிப்போய்விட்டதாகப் பரி ந்துவெளிவந்த நமது பண்டிதரதுவாதம் பாழாய்விட்டது. இங்ஙன நிற்க.

சிவன் தேவஸேநாபதியாக முடிசூட்டப்பட்டான். அதனால், அவன் பதியாகலாம். அவ்வளவேயன்றி ஸர்வரக்ஷகனுகமாட்டான் என்று நமதுபண்டிதப்பிஞ்சு பாழ்வாய்திறந்தபண்பையுங் கொஞ்சம் பார்த்து விடுவோம். சிவன் தேவஸேநாபதியாயினமையால், அவருக் குப் பதியென்னும்பட்டத்தை நமதன்ப ஆகந்துகமாக அங்கீகரித் தார். விஷ்ணுவுக்கு அது நைஜமாயின், அவரைப் பதிஎன்று கூறு மோர்வசனத்தை வேதத்தில் அவர் காட்டாததென்னை? சிவனைப் பதி என்று அழுதுகொண்டே யொப்பினவர் "ஸர்வேதேவா: பசுதாமவாபு:" என்னும் வசனத்தால் தேவர்களைப் பசுக்கள் என்று வேதம் ஒப்பியதற்கு என்செய்தார்? அவரது சித்தாந்தப்படிச் சிவ னைத் தேவர்களுக்குப் பதியென்பதுமாத்திரம் உசிதமேயன்றி அத் தேவர்களைப் பசுக்கள் என்று பிரஸ்தாபிக்க அவசியமில்லை. பசுவென் பது பாசவீக்கப்பொருள். அதற்குப் பதியெனவொன்றைக் கூறுங் கால் அது பாசநீக்கப்பொருளாம். நமதன்பர் சிவனைப் பாசநீக்கப்பொ ருளெனக் கொண்டிலர். அற்றேல், சிவனை வேறுகழித்துத் தேவர்க் களைமாத்திரம் பசுக்கள் என்று வேதங்கூறியது என்னை? பசுக்களில் ஒருவனாகிய சிவன் பதியாகமுடிசூட்டப்பெற்றான் என்று அந்த வச

னம் உணர்த்தாமையால், கலிபுருஷராகிய நமது பண்டிதரது வாதம் காலைவாரிக்கொண்டது. இதனால், பசுபதி என்று வேதங்கூறியது ஸர்வசேதனபதித்வமென்பதே ஸித்தம். சிவனே பசுபதி என்று விள க்கும் வேறு சுருதிகளையும் ஈண்டு உதகரிக்கின்றாம்."உமாபதி:பசுபதி:" எனவும், "உமாபதயே பசுபதயே நமோநம:" எனவும், "விச்வாதி கோருத்ரோமஹர்ஷி:" எனவும், "மாயினந்துமஹேச்வரம்" என வும், 'ய:பரஸ்ஸமஹேச்வர:" எனவும், "தஸ்மாத்ருத்ர : பசூநாம்தி பதி:" எனவும் போந்தனவே அவை. இனி, இவைகளுக்குத் தப்பு எடுத்துக்கொண்டு நம்மவர் வெளிவரவேண்டியதே. அங்ஙனம்வரின், அவரது ஐயமகற்ற யாம் ஸித்தமாயிருக்கின்றோம். இந்த வியவஸ்தை யால், "ஸர்வேதேவா: பசுதாமவாய:" என்ற சுருதியிற்போந்த தேவர் களாகிய பசுக்கள் ஆதித்யபுராணத்திற்போந்த விஷ்ணுவாதிகளென் பதே ஸித்தம். இந்தப் பசுக்களுக்குப்பதி சிவனென்பதே வியக்தம். இப்பரஞ்சுடர்ப்பிரானையே "ஈசானஸ்ஸஏகோருத்ர:" எனவும், "ஏகஏவருத்ரோநத்விதிய்யாயதஸ்தே" எனவும், "ஸசிவஏகோதேவ:" எனவும், "சிவஏவகேவல:" எனவும், "தமேகம் புருஷம ருத்ரம்" எனவும்," யஏகோருத்ரவச்யதே" எனவும், "ஸஏகோருத்ரோத்யே ய:" எனவும், "த்யாவாபூமீஜநயந்தேவ ஏக:" எனவும், "ஏகமேவா த்விதியம்ப்ரம்ஹா" எனவும சுருதிகள் உணர்த்திப் பிரகாசிப்பித்தன. இதனால், ஸர்வரக்ஷகர் சிவனேயென்று ஸித்தாந்தமாயிற்று. இவைக ளைச் சித்தஸமாதானத்துடன் நமதுஐயங்கார்மணிஆய்ந்தடங்கிச்சுகிப் பாராக.

நமதன்பர் சித்தாந்தலேசம் என்னுங் கிரந்தத்தில் ஸ்ரீமத் அப் பையதீக்ஷிதரவர்கள் ஸீதாபஹாரத்தில் இராமன் அழுததுமுதலான காரியங்களை அபிநயமாக வொப்பினார் என ஒரு ஆதரவுதேடினார். ஸித்தாந்தலேசம் என்பது அத்வைதசாஸ்திரம். தீக்ஷிதரவர்களை வை ஷ்ணவர்கள் யாசித்ததனால் அவர்களுக்குச் சில சாஸ்திரங்களெழுதி க்கொடுத்தனர். அதுபோல அத்வைதிகளுக்கும், மாத்வர்களுக்கும் அவ் வச்சமயங்களின் சார்பாகச் சிலநூல்களை எழுதிக்கொடுத்திருக்கின்ற னர். அத்வைதிகள் விஷ்ணுவைப் பதிவர்க்கத்திற் கொண்டவர்கள். அந்த ஸித்தாந்தத்தையநுசரித்து இராமனது செயலை அபிநயமெ ன்று ஸித்தாந்தலேசத்தில் தீக்ஷிதரவர்கள் எழுதியிருப்பின், அதுவே அவரது ஹ்ருதயமெனல் சிறவாது. அவரது ஹ்ருதயம் அதுதானெ ன்று நமதன்பர் சாதிப்பாரொனின், அவர் (இராமாயணதாத்பரிய ஸார ஸங்க்ரஹம்) என்னுங் கிரந்தமொன்று தனியேயியற்றி, அதில் இராம

னது பாரம்யத்தையழித்து, சிவஸர்வோத்தமத்தன்மையை நாட்ட அவசியமில்லை. சிவகர்ணாமிர்தம்-சிவதத்வவிவேகம்-பிரஹ்மதர்க்கஸ்தவம்-ரத்நத்திரயபரீக்ஷா முதலிய விஷ்ணுபரத்வபங்கப் பிரதிபாதிதமான வாதகிரந்தங்களைச்செய்யவும் அவசியமில்லை. விஷ்ணுபரத்வஹானியை வேதமூலங்காட்டி நிரூபித்து, "சைவாசாராப்திசந்த்ரஸ்ஸஜயதிகவிராட்ப்பயாக்யாத்வரீந்த்ர:" என்று கொண்டாடப்பட்டு, சைவரத்னமாய் விளங்கியிருந்த எமது தீக்ஷிதஸ்வாமிகளை நமதன்ப ராதரித்தது விளக்கில்வீழ்ந்தவிந்த விட்டிலின்கதியாக முடிந்தது. அவரது சித்தாந்தம் நமதன்பருக்குத் தெரியவேண்டின், குருஜ்ஞானவாஸிஷ்டம்-ஞானகாண்டத்தில், வேதாந்தசூத்திரவிர்த்திக்கு அவர்செய்திருக்கும் வியாக்யானத்தைப் பரிசோதித்துத் தெளிந்திவ்வாசாக... விக்கிற்பெருகும்.

இனி நமதன்பர் "பாசுபதாகமத்தைந்த வேதவிருத்த மாகையால் பிரமாணமல்லவென்று பிரஹ்மமீமாம்ஸையில் (பத்யுரஸாமஞ்சஸ்யாத்) என்கிற சூத்திரத்தால் வியாஸர் தீர்மானித்துவிட்டார் என்று செருக்கியழுதார். வைதிகர்கள் ஆகமத்தைக் கொள்ளார்களெனவுங் குளறிவழிந்தார். இச்சிவாகம நிந்தையிலிறங்கி இவர் சாதித்ததென்னையோ? இவரதுசாதனை இவருக்கேவேதனையாகமுடியச் சிலவீண்டெடாக்கின்றும். இவர் ஈண்டுச் சிவாகமவிசாரம் என்செய்யவந்தார்? வேதத்தினுஞ் சிவாகமம் உயர்ந்தது எனப் பிரகிருதவிசாரத்தில் எங்காவது நாயகரவர்கள் பிரஸ்தாபித்திருக்கின்றனரா? சிவாகமங்களை வேதபாஹ்யமெனக்காட்டவந்தநமதுபண்டிதர் தம்மை வைதிகசிலர்கள்சிரிப்பதைநோக்காததென்னை? பாஞ்சராத்திரமென்னும்அவைதிகப் படுகுழியில் வீழ்ந்து கரையேறமாட்டாது தியங்குந் தமது புன்மையைநாடி நாணுவாராக. வியாஸர் வேதாந்தசூத்திரத்தில் "பத்யுரஸாமஞ்சஸ்யாத்" என்றுகூறிச் சிவாகமங்களைப் பழித்தார் என்றது பாழுரையேயாம். வியாஸர் சூத்திரமே செய்தனர். அதற்குப்பல வியாக்யாதாக்கள் புறப்பட்டார்கள். அவர்களோ ஒருவர் போனவழி யொருவர் போகவில்லை. இவருளொருவர் பாசுபதம்அநாதரணியம் என்றுபிரஸ்தாபித்தார். மற்றொருவர் பாசுபதம் ஸித்தாந்தம் என்று சாதித்தார். இங்ஙனமாக, வியாஸரதுமதமாகப் பாசுபததூஷணத்தை நமதுபண்டிதரொப்பியது அவிவேகமேயாம். ஒருபாஷ்யகாரர் தூஷித்தார். மற்றொருபாஷ்யகாரர் பூஷித்தார். பூஷித்தவரது கருத்தைத் தள்ளித் தூஷித்தவரது கருத்தையே வியாஸரது கருத்தாக வொப்பியது யாங்ஙனம்? தூஷித்தபாஷ்யமே எமக்கொப்பெனின், "உத்

பத்யஸ்ம்பவா:" என்றதுமுதலிய வசனங்களால் வைஷ்ணவ ஸித்தாந்தத்தின்வாயில் அவர் மண்போட்டிருப்பதையும் ஒப்பவேண்டுமெல்லவா? இதனைமற்றொருபாஷ்யத்திலன்றோ அவர் சாதிக்கவெழுவர்? தமதுமதத்தைத் தூஷித்ததை யொப்பாதவர் எமதுமதத்தைத் தூஷித்ததை யொப்பியது விவேகமா? இந்தவியவஸ்தையால் வியாஸர் தூஷித்தார் என்பதழிந்து யாரோவொருவர் தூஷித்தார் என்று ஏற்பட்டமையால், அதை யாம்சட்டைசெய்திலேம். இவ்வஸங்கதத்தைப் பிரயோசனமின்றி யெடுத்துரைத்த ஐயங்காரது கொடுமைக்கே விசனப்படுகிறோம். பாரதத்தில் "உக்தவாநித மவ்யக்ரம், ஜ்ஞாநம்பாசுபதம் சிவ:" என்று வியாஸர்கூறினர். இதில், இந்தப் பாசுபதஞானத்தைச் சிவன்மயக்கமின்றி அருளிச்செய்தார் என்று கூறினர். அன்றியும், "ஜ்ஞாநம்பாசுபதம்ததா" எனவுங்கூறினர். இவற்றால் வியாஸரது அபிமதம் இனிது வெளிப்பட்டது. பிரத்யக்ஷதமாகிய இதனைவிடுத்து அவர் பாசுபத தூஷணஞ்செய்தார் என்று நமதுபண்டிதர் பிதற்றியது அஸங்கதமேயாம். வியாஸர் பாசுபதஸ்தாபனஞ்செய்த பாரதவசனங்களை யாம் வெளிப்படுத்திலேமாகையால், வேதாந்தசூத்திரத்திலும் அவர் பாசுபதத்தை ஆதரித்தாரென்றுகூறுவதே ஒக்கும். அதனால் பாசுபதத்தைப்பூஷித்தபாஷ்யகராரோ அவரதுஹ்ருதயத்தை அறிந்துரைத்தவராயினர். தூஷித்த பாஷ்யகாரர் அவரதுஹ்ருதயத்தை அறியாது குழப்பினவராயினர். இவ்வுண்மைகளையறியும் புத்திபோதாமல் நமது சிற்றூத்துக்காட்டார் சீரழிந்தது பரிதாபமென்க. எமது சைவபாஷ்யத்தில், "வயந்து வேதசிவாகமயோர்ப்பேதம் நபச்யாம: வேதோபிசிவாகம:" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதற்கு விரோதமாகமற்றொருபாஷ்யகாரர் கூறியது வியாஸரது அபிமதமாகாதழிந்தமையால், வைதிகராவார் பாசுபதத்தை ஒப்பார்களென்று நமதன்பரூகியிட்டது ஒன்றுக்கு மூதவாதாயிற்று. காளிதாசர், போஜதேவர் முதலினோர் சைவபத்தர்கள் செய்திருக்கின்றார்கள்; இவர்கள் வைதிகர்களேயன்றோ? இவர்களால் ஸேவிக்கப்பட்ட தந்திரங்கள் அவைதிகமாதல் யாங்ஙனம்? வித்யாரண்யர் ஸூதஸம்ஹிதா வியாக்யானஞ் செய்திருக்கின்றனர். அதில், ஸூதமுனிவர் வ்யாஸ முனிவரைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினார் என்னும் ஸந்தர்ப்பத்தில் (பார்த்து) என்பதற்கு நயனதீக்ஷைசெய்து என்னும் பொருளமையவிரித்து இவ்வுண்மை சிவாகமத்திற் பெறப்பட்டது என்று விதந்தருளினர்.

அது "ஏவம்முனிபி: ப்ருஷ்டோமுநீநாம் புராணஸம்ஹிதா ச்ரவணே முக்யாதிகாரஸித்தயே பரசிவப்ரணிதான புரஸ்ஸரா வலோகநரூபாம் சாக்ஷுஷீம்தீக்ஷாம் அகார்ஷீத். இத்யாதி ஆகமேஷு சாக்ஷுஷீதீக்ஷா-உக்தா. சக்ஷுருந்மீல்யயத்தத்வம் த்யாத்வாசிஷ்யம்ஸமீக்ஷதே, பசுபந்தவிமோக்ஷாய தீக்ஷாயம் சாக்ஷுஷீமதா" என்பது. இது வைதிகமணியாய்விளங்கிய மாதவாசாரியர் திருவாக்காதலையுணராது சைவம் வைதிகர்களுக்கு அமுக்யம் என்று நமது பண்டிதர் தொடுத்தது வீணவதியென்க. சிவபுராணசிரவண முக்யாதிகாரம் தீட்சையில்லாதபோது கூடாதென்பதே அந்தவியாக்யாதாவினுடைய கருத்தாயினமையால், சிவபுராணசிரவணஞ் செய்வோர் சைவதீட்சைபெற்றே தீரவேண்டுமெனல் ஸித்தமாயிற்று. சுரோதாக்களுக்கு அமைந்தவிதியே வக்தாவுக்குமாம். இதனால், சிவபுராணம் சொல்பவா கேட்பவரிருவரும் சிவதீட்சைக்குரியவராகிப் பாசுபதாநுஷ்டானபரராதல் அவசியமாயிற்று. இவ்வுண்மைதெளியாத சூதஸம்ஹிதாப்பிரஸங்கியாரும் நமதன்பரைப்போல் பாசுபதாகமதூஷணஞ்செய்யத் தலைப்பட்டனா. மாதவாசாரியரது வியாக்யானத்தை நமது எதிவரர் தழுவுவாரோ, அல்லது தள்ளுவாரோ தெரியாது. தள்ளுவாரெனின்மாத்திரம் அவரது அசைவப் பிரஸங்கம் சேவிக்கும். தழுவுவாரெனின், அந்தஸூதஸம்ஹிதையை அவர் தொடவேயோக்யரன்றென அது அவரைத்தள்ளிவிடுமென்க. நமது ஐயங்கார் வெள்ளைமண்யோனிபுண்டரதாரியாகையால் அவருக்குச் சிவாகமத்திக் துவேஷமுண்டாகலாம். ஸந்யாஸியாருக்குத் துவேஷமுண்டாயிருப்பது கலியின்கொடுமையேயாம். சிவாகமங்கள் பிரதிபாதிக்கும்விஷயங்கடாம் யாவை? சிவமகிமை-விபூதிமகிமை-ருத்ராக்ஷமகிமை-பஞ்சாக்ஷரமகிமை - சிவபூசைமகிமை - சிவாலயமகிமை-சிவதீக்ஷைமகிமை-சிவஞானமகிமை முதலியனவேயன்றோ? வேதத்திலும் இவைகளேயன்றோ பிரதிபாதிக்கப்படுகின்றன? நமது எதிவரர் உள்ளபடியே சிவதர்மங்களிலன்புடையவராயின், அவற்றைக்கூறுஞ் சிவாகமத்திலன்புவையாமல், அதனைத்தூஷிக்கவிசைவரா? அவர் விஷ்ணுமுதலியவர்களைத் தெய்வங்களாகமதித்தல் கூடாதென இரவும்பகலும் போதித்துவருகிறார். இவரிதற்குமேலுபதேசித்தாலும் இவரினத்தவர்க்கு உண்மைவிளங்காது. ஏனெனின், இவர் உயர்வாகக்கொண்டிருக்கும்வேதத்தில் ஸந்துபொந்துகளிலெல்லாம் இந்திரனே பிரஹ்மம், சந்திரனேபிரஹ்மம், கறுப்பண்ணனே பிரஹ்மம், விஷ்ணுவே பிரஹ்மம், பிரமனே பிரஹ்மம், ஆத்மாவேபிரஹ்மம் என்றுகுழப்பமுண்டாகக் கூறப்பட்டிருக்கின்

றது. உள்ளத்தைக்கலக்கு முபதேசமாகிய இந்த ஆபத்திற்றப்பமா ட்டாமலேயன்றோ வைஷ்ணவப்படுகுழியில் வைதிகரெல்லாம்வீழ் ந்து சூடுண்மோய்ந்தார்கள் ? இவைகளுக்குக்கதிகல்பித்துச் சிவபாத வபுத்தியுண்பெண்ணுவது கஷ்டம்! கஷ்டம்!! சிவாகமம் இந்தரோத ணங்களிலே யுயிர்களைச்செலுத்தாமல் கேவலம் சிவத்திவதீதப்பட் டிருக்க வுபதேசிக்கும். அவை சைவநலங்களையேயன்றிச் சூடுண்டு புழுங்குதன்முதலிய வஸங்கதங்களைப் போதிக்கமாட்டா. சைவதர் மங்களன்றி வேறுதர்மங்களை மறந்துங்கூறவறியாத பாசுபதத் தைச் சிவதூஷணையேவடிவமாகிய பாஞ்சராத்திரமுதலியவற்றோ டொன்றுபடுத்திச் சிவபுராணப்பிரஸங்கியார்தூஷிப்பது அன்று எம்பெருமக்களா லந்தணருக்குக்கிடைத்தசாபத்தினரும்பய னவரி டத்துமணுகியதனுற்றுனென்றறிக. வேதத்திற் குழம்பியறியத்தக்க சைவநலத்தைச் சிவாகமத்திற் குழம்பாமலறிந்துதெளியலாம். வேதம் சூத்திரமும், சிவாகமம் அதனது பாஷ்யமும்போல விளங்குவன. வேதத்திற் பொருள்பலபடவிரிக்கு மோர்விஷ யத்தைச் சிவாகமம்தெளித்துரைக்கும். ஆகையால், சிவாகம ஞானமுடையார்க்கே வேதப்பிரதிபாதிதஞானம் இனிதுவிளங்கும். சிவாகமம்வேண்டாமல் எத்தனைகற்பகோடிகாலம் வேதம்படித் தாலும் மயக்கந்தீராதென்க. ஸநகாதிமுனிவர்கள் வேதமனை த்தையோதியும் ஞானநிலைபெறாதவராயினரெனவும், பின்னர் ஆகமாந்தமென்னும் சித்தாந்தத்தையோதி ஞானநிலைபெற்றன ரெனவும் சங்கரஸம்ஹிதையிற்கூறப்படுதல் பிரத்யக்ஷம். இதனா லும் வேதாந்தஞானத்தால் தெளிவுண்டாகாதெனல் போதரும். வேதம் ஸாமானியர்க்கும், சிவாகமம் சத்திநிபாதர்க்கும் உரியன. ஸாமானியராயுள்ளவர்கள் சத்திநிபாதர்க்குரிய சிவாகமத்தின்நற முணர்வது கஷ்டந்தான். சிவாகமஞானமெய்தினபேர்க்கே சிவஞா னம்ஸித்திக்கும். அங்ஙனமாகவே அது ஸித்தியாதென்க. இதனால், சிவா கமம்வேண்டாதபேர்க்குச் சிவஞானம்ஸித்தியாதென்பதுஸத்தியம். என்னை? சிவாகமம்வேண்டாத அவ்வெதிவரர் சிவனைத்தெளிந்து கூறுவதெனின், அவரது தெளிவினழகு அந்தப்பரமசிவனுக்கே வெளிச்சம். ஒருநாளைக்குச்சிவனேபரம், அவருக்குஸமமாக விஷ் ணுவைநினைப்பினும்நரகம் என்பார். மறுநாளைக்கு யாவர்விஷ் ணுவை ஈசுவரஸ்வரூபமல்லவென்பார்களோ, அவர்களுக்கே நரகம் என்பார். ஒருநாளைக்கு விஷ்ணு ஓர்பசு என்பார். மறுநாளைக்கு அவ ரது கோவிந்தநாமக்கூச்சல்போடுவர். இப்படியலக்கண்படுதல் எத னால்? சிவாகமத்தெளிவிழந்தமையினாலென்க. அவருக்குச்சிவாகமத்

தில் விசுவாஸமில்லாவிடினும், அதனை நிந்தைபுரியாதிருப்பது விவேகமாம். அவரும், அவர்போன்ற வைதிகசிலர்களுங்கொண்டாடிமகிழும் (பரிமளம்) என்னும் ஓர்அத்வைதசாஸ்திரத்திற்குக் கர்த்தாவாயெழுந்தருளியிருந்த தீக்ஷிதஸ்வாமிகள் (சிவத்தியாநபத்ததி) என்னுநூலில் சிவாகமங்களை வர்ணித்திருக்கின்றனர்.எங்ஙனமெனின்,

"காமிகம்பர்த...... யோகஜம்குல்பயோர்யுகம்
சிந்த்யம்பதாங்குளீரூபம் காரணம் ப்ரஸ்ருதித்வயம்
அஜிதம்ஜாநுநோர்யுக்மம் தீப்தமூருத்வயம்விபோ:
குஹ்யம்பீஜாத்மகம்ஸூக்ஷ்மம் ஸஹஸ்ரந்துகடீதடம்
ப்ருஷ்டபாகோம்சுமானஸ்ய நாபிஸ்ரீசுப்ரபேதகம்
விஜயம்ஜடரம்பாஹூர் விச்வாஸம்ஹ்ருதயாத்மகம்
ஸ்வாயம்புவம்ஸ்தனத்வந்தம் அனலம்லோசனத்ரயம்
விராகம: கண்டதேச: ரௌரவம்சரணத்வயம்
முகுடம்மகுடம்தந்த்ரம் பாஹவோவிமலாகம:
சந்த்ரஜ்ஞானமுரச்சம்போர் பிம்பம்வதனபங்கஜம்
ஜிஹ்வப்ரோத்கீதமீசஸ்ய லலிதம்கண்டயோர்யுகம்
ஸித்தம்லலாடபலகம் ஸந்தானம்குண்டலத்வயம்
யஜ்ஞோபவீதம்ஸர்வோக்தம் ஹாரஸ்ஸார்க்கபாரமேச்வரம்
கிரணம்ரத்நபூஷாஸ்ய வாதுலம்வஸநாத்மகம்
ஏவம்தந்த்ராத்மகம்ரூபம் ஈச்வரஸ்யவிசிந்தயேத்
சிவஜ்ஞானப்ரதம்பும்ஸாம் சிவதர்மப்ரவர்த்தகம்
ப்ரணவஸ்யசமாத்ராபி: வர்ணை: பஞ்சாக்ஷரஸ்யச
வதனம்ஸோருயுகளம் கல்பயேதம்பிகாபதே:"

என்று பிரகாசப்படுத்தியிருத்தலேயாம். இனியேனும் உண்ணரிந்து பாசுபததூஷணத்தைப் பரிகரித்துக்கொள்வாராக.

சிவாகமங்களையே சிவனாகத்துதித்திருக்கின்றமையால், அச்சிவாகமதூஷணஞ்செய்பவர்களை சிவனைத் தூஷிப்பவர்களென்றே நினைக்குவர்மேலோர். அதவா வைதிகர்கள் வேதம் முதலும், சிவாகமம் இரண்டாவதுமாக எண்ணட்டும். அதனால், சிவாகமத்தைத்தூஷித்தல் கூடுமோ? சூதஸம்ஹிதையில், "அஷ்டாதசபுராணாநாம் கர்த்தா ஸத்யவதீஸுத:, காமிகாதிப்ரபேதஸ்ய யதாதேவோமஹேச்வர:" என்னும் வசனத்தால் சிவபெருமான் காமிகாதி சிவாகமங்களை அருளிச்செய்தபடி வியாஸர் புராணங்களைச்செய்தனர் என்று பெறப்படுகின்றது. ஈண்டு வியாஸருக்குச் சிவபெருமானையும், புராணங்களுக்குச்சிவாகமங்களையும் உவமைகூறியிருக்கின்றது. இதனால், புரா

றது. உள்ளத்தைக்கலக்கு முபதேசமாகிய இந்த ஆபத்திற்றப்பமாட்டாமலேயன்றோ வைஷ்ணவப்படுகுழியில் வைதிகரெல்லாம்வீழ்ந்து சூடுண்டுமாய்ந்தார்கள்? இவைகளுக்குக்கதிகல்பித்துச் சிவபரதவபுத்தியுண்டுபெண்ணுவது கஷ்டம்! கஷ்டம்!! சிவாகமம் இந்தரோதனங்களிலே யுயிர்களைச்செலுத்தாமல் கேவலம் சிவத்திலுதித்தப்பட்டுநிற்க வுபதேசிக்கும். அவை சைவநலங்களையேயன்றிச் சூடுண்டுபுழுங்குதன்முதலிய வஸங்கதங்களைப் போதிக்கமாட்டா. சைவதர்மங்களன்றி வேறுதர்மங்களை மறந்துங்கூறவறியாத பாசுபதத்தைச் சிவதூஷணையேவடிவமாகிய பாஞ்சராத்திரமுதலியவற்றோடொன்றுபடுத்திச் சிவபுராணப்பிரஸங்கியார்தூஷிப்பது அன்று எம்பெருமக்களா லந்தணருக்குக்கிடைத்தசாபத்தினரும்பய னவரிடத்துமணுகியதனாற்றானென்றறிக. வேதத்திற் குழம்பியறியத்தக்க சைவநலத்தைச் சிவாகமத்திற் குழம்பாமலறிந்துதெளியலாம். வேதம் சூத்திரமும், சிவாகமம் அதனது பாஷ்யமும்போல விளங்குவன. வேதத்திற் பொருள்பலபடவிரிக்கு மோர்விஷயத்தைச் சிவாகமம்தெளித்துரைக்கும். ஆகையால், சிவாகமஞானமுடையார்க்கே வேதப்பிரதிபாதிதஞானம் இனிதுவிளங்கும். சிவாகமம்வேண்டாமல் எத்தனைகற்பகோடிகாலம் வேதம்படித்தாலும் மயக்கந்தீராதென்க. ஸநகாதிமுனிவர்கள் வேதத்தை நெடுநாளோதியும் ஞானநிலைபெறாதவராயினரெனவும், பின்னர் ஆகமாந்தமென்னும் சித்தாந்தத்தையோதி ஞானநிலைபெற்றனரெனவும் சங்கரஸம்ஹிதையிற்கூறப்படுதல் பிரத்யக்ஷம். இதனானும் வேதாந்தஞானத்தால் தெளிவுண்டாகாதெனல் தேற்றம். வேதம் ஸாமானியர்க்கும், சிவாகமம் சத்திநிபாதர்க்கும் உரியன. ஸாமானியராயுள்ளவர்கள் சத்திநிபாதர்க்குரிய சிவாகமத்தின்முறைமுணர்வது கஷ்டந்தான். சிவாகமஞானமெய்தினபேர்க்கே சிவஞானம்ஸித்திக்கும். அந்யதா அது ஸித்தியாதென்க. இதனால், சிவாகமம்வேண்டாதபேர்க்குச சிவஞானம்ஸித்தியாதென்பது ஸத்தியம். என்னை? சிவாகமம்வேண்டாத அவ்வைதிகர் சிவனைத்தெளிந்து கூறுவதெனின், அவரது தெளிவினழகு அந்தப்பரமசிவனுக்கே வெளிச்சம். ஒருநாளைக்குச்சிவனேபரம், அவருக்குஸமமாக விஷ்ணுவைநினைப்பினும்நரகம் என்பார். மறுநாளைக்கு யாவர்விஷ்ணுவை ஈசுவரஸ்வரூபமல்லவென்பார்களோ, அவர்களுக்கே நரகம் என்பார். ஒருநாளைக்கு விஷ்ணு ஓர்பசு என்பார். மறுநாளைக்கு அவரது கோவிந்தநாமக்கூச்சல்போடுவர். இப்படியலக்கண்படுதல் எதனால்? சிவாகமத்தெளிவிழந்தமையினாலென்க. அவருக்குச்சிவாகமத்

தில் விசுவாஸமில்லாவிடினும், அதனை நிந்தைபுரியாதிருப்பது விவேகமாம். அவரும், அவர்போன்ற வைதிகசிலர்களுங்கொண்டாடிமகிழும் (பரிமளம்) என்னும் ஓர்அத்வைதசாஸ்திரத்திற்குக் கர்த்தாவாயெழுந்தருளியிருந்த தீக்ஷிதஸ்வாமிகள் (சிவத்தியாகபத்ததி) என்னுநூலில் சிவாகமங்களை வர்ணித்திருக்கின்றனர். எங்ஙனமெனின்,

"காமிகம்பர்தகம்லம் யோகஜம்குல்பயோர்யுகம்
சிந்த்யம்பதாங்குளீரூபம் காரணம் ப்ரஸ்ருதித்வயம்
அஜிதம்ஜாநுநோர்யுக்மம் தீப்தமூருத்வயம்விபோ:
குஹ்யம்பீஜாத்மகம்ஸூக்ஷ்மம் ஸஹஸ்ரந்துகடீதடம்
ப்ருஷ்டபாகோம்சுமானஸ்ய நாபிஸ்ரீசுப்ரபேதகம்
விஜயம்ஜடரம்பாஹுர் விச்வாஸம்ஹ்ருதயாத்மகம்
ஸ்வாயம்புவம்ஸ்தனத்வந்தம் அனலம்லோசனத்ரயம்
விராகம: கண்டதேச: ரௌரவம்சரணத்வயம்
முகுடம்மகுடம்தந்த்ரம் பாஹவோவிமலாகம:
சந்த்ரஜ்ஞானமுரச்சம்போர் பிம்பம்வதனபங்கஜம்
ஜிஹ்வப்ரோத்கீதமீசஸ்ய லலிதம்கண்டயோர்யுகம்
ஸித்தம்லலாடபலகம் ஸந்தாநம்குண்டலத்வயம்
யஜ்ஞோபவீதம்ஸர்வோக்தம் ஹாரஸ்ஸார்க்கபாரமேச்வரம்
கிரணம்ரத்நபூஷாஸ்ய வாதுலம்வஸநாத்மகம்
ஏவம்தந்த்ராத்மகம்ரூபம் ஈச்வரஸ்யவிசிந்தயேத்
சிவஜ்ஞானப்ரதம்பும்ஸாம் சிவதர்மப்ரவர்த்தகம்
ப்ரணவஸ்யசமாத்ராபி: வர்ணை: பஞ்சாக்ஷரஸ்யச
வதனம்ஸோருயுகளம் கல்பயேதம்பிகாபதே:"

என்று பிரகாசப்படுத்தியிருத்தலேயாம். இனியேனும் உண்மைதெளிந்து பாசுபததூஷணத்தைப் பரிகரித்துக்கொள்வாராக. இதில், சிவாகமங்களையே சிவனாகத்துதித்திருக்கின்றமையால், அச்சிவாகமதூஷணஞ்செய்பவர்களை சிவனைத் தூஷிப்பவர்களென்றே ஒதுக்குவர்மேலோர். அதவா வைதிகர்கள் வேதம்முதலும், சிவாகமம் இரண்டாவதுமாக எண்ணட்டும். அதனால், சிவாகமத்தைத்தூஷித்தல் கூடுமோ? சூதஸம்ஹிதையில், "அஷ்டாதசபுராணாநாம் கர்த்தா ஸத்யவதீஸுத:, காமிகாதிப்ரபேதஸ்ய யதாதேவோமஹேச்வர:" என்னும் வசனத்தால் சிவபெருமான் காமிகாதி சிவாகமங்களை அருளிச்செய்தபடி வியாஸர் புராணங்களைச்செய்தனர் என்று பெறப்படுகின்றது. ஈண்டு வியாஸருக்குச் சிவபெருமானையும், புராணங்களுக்குச்சிவாகமங்களையும் உவமைகூறியிருக்கின்றது. இதனால், புரா

ணம் சிவாகமத்தினுபபிரஹ்மணமென்று ஏற்படுகின்றது. வியாஸர் சிவாநுக்ரஹத்துக்குப் பாத்திரராயினரென்பதும் வியக்தம். இவ்வுண்மையால், சிவாகமம் ஸர்வோத்கர்ஷமெனல் சரதமாயிற்று. இதற்குமாறாகச் சிவாகமம் புராணேதிகாசங்களினுந் தாழ்ந்ததுஎன அவ்வெதியார் கதிகூறுகின்றனர். இனிக் குருன்-ஸைபழில்முதலியவற்றினுந் தாழ்ந்ததாகவதனைக்கூற அவர் பின்னிடார்போலும். வரம்புகடந்துபேசுபவர்கள் எதுதான் செய்யார்கள்? நமது ஐயங்காருக்குச் சிவம்எப்படிக்கசக்கிறதோ, அப்படியேயன்றோ நமதுஸந்யாசியாருக்குச் சிவாகமம்கசப்பெடுத்துப்போயிற்று? சூதபகவான் சிவாகமங்களையும், புராணங்களையும் உபமான வுபமேயங்களாக வெடுத்தோதியிருப்பதோர்ந்திடாமல் சிவாகமங்களைப்பாஹ்யமென்று தூஷிப்பவரையே வேதபாஹ்யரெனல் சிறக்கும்.

அச்சூதஸம்ஹிதை, சிவமாஹாத்மியகாண்டம், ௪ - வது அத்தியாயத்தில் "ஆகமேனைவசாஸ்த்ரேண, ப்ரோக்தலட்சண லட்சிதம்" என்னும் வசனத்தால் சிவாகமங்களாலும், சாஸ்திரங்களாலும் பிரதிபாதிக்கப்பட்ட இலக்கணமுடையது சிவலிங்கம் என்று பெறப்படுகின்றது. ௫ - வது அத்யாயத்தில், "வைதிகீதாந்த்ரிகீசேதி த்விஜேந்த்ராஸ்தாஸ்த்ரிகீதுயா" என்னும்வசனத்தால் பராசக்தியாருக்கு வைதிகம்-தாந்திரிகம் என்னும் இரண்டுவிதபூஜைகளுங் கேட்கப்படுகின்றன. ௯-வது அத்தியாயத்தில், "ஏதானி தீர்த்தானி புரோதிதானி, வேதேஷு சாஸ்த்ரேஷு சிவாகமேஷு" என்னும்வசனத்தால் வேதம், சாஸ்திரம், சிவாகமம் என்னுமிவைகளாற் சொல்லப்படுந்தீர்த்தங்களைப் பார்வதியாருக்குச் சிவன்சொல்லியருளினார் என்று வியக்தமாகின்றது. இவற்றால் சூதஸம்ஹிதையில் பாசுபததூஷணம் பெறப்பட்டதில்லை. அதனதுபூஷணமே எங்கும் முழங்கப்படுகின்றது. அன்றியும், "தந்த்ரோக்தேனப்ரகாரேண-தேவதாயாப்ரதிஷ்டிதா, ஸாந்நித்யம் ஸஸேவ்யாச பூஜநீயாசவைதிகைக:, சுத்தமேவஹிஸர்வத்ர தேவதாரூபமாஸ்திகா:" என்னும்வசனத்தால் சிவாகமவிதியின்படி பிரதிஷ்டிக்கப்பட்ட சிவலிங்கத்தை வேதவழியினிற்பவன் வணங்கியுய்யக்கடவன் என்று பெறப்படுகின்றது. இதனைத் "தெளிதருமாகமவிதியிற் பதிட்டைசெயப்படுதெய்வ, மொளிமிகுவைதிகன்பூசித்துறவணங்கத்தக்கதேயளியுடையீரொப்பேது மமைதருபண்ணவரூபம், விளிதலிலாச் சுத்தமாயிருப்பதன்றி வேறுளதோ" என்பதால் மேலோர் விளக்கியிருக்கின்றனர். இவ்வுண்மைதேராது வைதிகர்க்குப் பாசுபதனே

வைகூடாதென்று பிணங்கிப்பேசிய ஐயங்காருக்கும், ஸந்யாஸியாருக்கும் சூதாதுவாக்குச்சுரிகையாய்முடிந்தது. சிவாகமங்களைப் பரமபாவனமெனக்கூறும் சூதர்வாக்கைத் தரிசித்தும், ஹேயப்பிரஸங்கத்திற் பிரவர்த்தகமுண்டாகஸஞ்சரிப்பவர் புபுக்ஷக்களென்றே ஒதுக்கப்படுவர். சிவமகிமையுணர்த்தப்போந்த சிவபுராணம்பத்தனுளொன்று ஸ்காந்தம். அதிற்போந்த ஆறுஸம்ஹிதையிலொன்று சூதஸம்ஹிதை. இச்சூதஸம்ஹிதை சிவதர்மங்களைவழுத்தாமல் அவைகளைப்பழித்தோ சிவிக்கும்? சூதஸம்ஹிதையில் சிவம்பழிக்கப்படுமாயினன்றோ அச்சிவத்தைப்பூஷிக்குஞ் சிவாகமமும்பழிக்கப்படும்? இதுநிற்க. சிவதர்மோத்தரத்தில், "சிவநிந்தாபரோபூத்வா சிவசாஸ்த்ர விநிந்தக: - தஸ்யநோநிஷ்க்ருதிர்த்ருஷ்ட்வா க்வாபிசாஸ்த்ரே பிகாசக" என்னும்வசனத்தால் சிவநிந்தாபரனாய்ச் சிவாகமங்களையவன் தூஷிப்பானோ அவனுக்குச் சாஸ்திரங்களில் பிராயச்சித்தம் நிர்ணயித்துக்கூறவில்லை என்று பெறப்படுகின்றது. இது பிரஹ்மஹத்யாதி மஹாபாதகங்கள்செய்த துர்ஜநனுக்குச்செய்யப்படும் மரணாந்தப்பிராயச்சித்தத்தோடுசேர்ந்து நிலைபெறுமென்க. இன்னும் விரிக்கிற்பெருகும். இன்ன பலபிரமாணங்கள் பஹுளமாய்க்கிடப்பதறியாது சிற்றுத்துக்காட்டார் சிரமழிவதும், ஸந்யாஸியார் ஸாதுமார்க்கம்விடுப்பதுஞ் சாபத்தின்பயனையாம்.

சூதஸம்ஹிதையில் பாசுபதவிரதமே முக்கியமென்று பலவிடங்களிற் படிக்கப்பட்டிருக்கின்றது. இயமாதிகளையுணர்த்தப்புகுந்தஸந்தர்ப்பத்தில் நியமமுறைத்தீஅத்தியாயத்தில் பாசுபதவிரதமே ஸித்தாந்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஏனையவிரதங்கள் பாசகாரியங்களைப் பொருள்களெனக்கொண்டவர்களும், பசுவைப் பொருளெனக்கொண்டவர்களும் அநுட்டிக்கத்தக்கவை. அவை பாசவிரதமும், பசுவிரதமுமாம். விஷ்ணுவைவழிபடுதல் பசுவிரதமேயாம். பசுபதியாகிய சிவனைவழிபடுதலே பாசுபதவிரதமாம். பசுபதிஸம்பந்தம் பாசுபதம். இந்தப்பாசுபதமே ஸித்தாந்தமாகிப் பசுபாசமார்க்கங்களைப் பூவர்பட்சமாக்கி முனைத்துநிற்பதுணராது பூர்வபட்சிகள் கூறுந்தூஷணங்கள் நிஸ்புருஹமென்க. அந்தஸந்யாஸியார் சிவஸர்வோத்தமங் கூறுமிடத்தும் அந்தச்சிவம் பசுவாகியதானன்றி வேறில்லையென்பது அவரதுஸித்தாந்தமாகையால், அவரது ஞானம் பசுஞானமாவதிற் றட்டில்லை. பசுஞானியாகியஅவர் பதிஞானமாகிய பாசுபதத்தைத்தூஷிப்பது அதிசயமன்று. அப்படியே பசுவாகியவிஷ்ணுவையுபாஸிக்கும் பசுஞானச்செல்வராகிய சிற்றுத்

துக்காட்டாரதுவைபவமுங் கொள்ளத்தக்கது. ஸந்யாசியார் பசுவாகிய தன்னையும்,ஐயங்கார் விஷ்ணுவாகிய வேற்றுப்பசுவையும் பொருள்களாகமதித்தலால் இருவர்க்கும் பதிஞானஸம்பந்தத்தைப்பயக்கும் பாசுபதம் கசப்பாயிற்று.இந்தப்பாசுபதத்தை ஸ்மார்த்தப்போலிகள் வெறுத்ததற்கும், வைஷ்ணவர்கள் வெறுத்ததற்கும் இங்கு யாம் காட்டியகாரணத்தைத்தவிர வேறொருகாரணமுமில்லை.இன்னுமிதனைத்தெளிவாகக் கூறுகின்றோம். பாசுபதாகமங்கள் விஷ்ணுபதியன்று, அவருபாஸ்யராகார்,சிவன்பதி, அவரேஉபாஸ்யர் என்றுகூறுகையால் வைஷ்ணவர்கள் அவற்றைவெறுத்தார்கள். அவை மீண்டும் சிவம் நிர்மலப்பொருள், அதற்கு மலங்கூறுதல் கூடாது, ஆன்மாமலபத்தப்பொருள், அதனால் அதுசிவமாதல்கூடாது என்று கூறுகையால் ஸ்மார்த்தப்போலிகள் அவற்றை வெறுத்தார்கள். உண்மையான ஸ்மார்த்தர் அவற்றைவிரோதியார்கள். ஸ்மார்த்தம் சிவனைவழிபடும் ஓர்மார்க்கம். சிவனைவழிபடுதற்குச் சிவாகமபத்ததிமுதலும், இந்தஸ்மார்த்தபத்ததி இரண்டாவதுமாம். வேதமே சிவாகமத்திற்கீழிடுமாயின், ஸ்மிருதிகளைக்கீழென்றது அதிசயமோ? இவ்வுண்மையைச் சதுர்வேததாத்பரியஸங்கிரஹத்தில், ஸ்ரீஹரதத்தாசாரியஸ்வாமிகள் "திகழ்தவளநீறுமரன் கண்மணியுமைந்தெழுத்துந் தேவர்போற்ற, மிகுபரமசிவலிங்கோ பாசனையும் வைதிகத்தில் விதித்தாற்றாலும், அகமகிழுமாகமத்தின் படிமேலாந்தீக்கையடைந் தார்கட்கன்றிப், புகலருமானதக்கிரியா பாவனையுஞ் சிவனருளும் பொருந்திடாதே" என்று பிரகாசப்படுத்தியிருக்கின்றனர். இவரே உண்மையான சைவரும், வைதிகரும், ஸ்மார்த்தருமாவர். இவர் ஆத்மாவையே மெய்ப்பொருளென்று கொள்ளாமையால்,இவருக்குப் பாசுபதம் சிரஸாயிற்று. சிவாகமம் வேதத்தைக்காட்டிலும் தாழ்ந்ததெனவும், வேதத்தோடொத்ததெனவும், வேதத்துக்கு அதிகமெனவுங் கூறுமதிகாரிகளிருப்புக் கேட்கப்படுகையால் நமது ஐயங்காரும், ஸந்யாஸியாரும் கடைவகுப்பிற் சேர்ந்து கலங்கினவராயினர். வேதம் சிவாகமம் என்னுமிரண்டும் பொதுச்சிறப்புகளாகவிளங்கிச் சிவனது உண்மையையே விளக்கலால் இரண்டும் எமக்குப்பிரமாணமாயின. "வேதமொடாகம மெய்யாமிறைவனூல், ஓதும்பொதுவுஞ் சிறப்புமென்றுன்னுக, நாதனுரையிவை நாடிலிரண்டந்தம், பேதமதென்னிற் பெரியோர்க்கபேதமே," என்று திருமந்திரத்திற்கூறியவாய்மையும் இவ்வுண்மையை நிறுத்தும். இந்தவியவஸ்தையால், வெள்ளைமண்யோகிபுண்டரதாரணம், சூட்டுக்கோல்வைபவம், க்ஷுத்ரதேவதாபரத்வம் இத்யாதி

களைக்கூறும் பாஞ்சராத்திரமே வேதபாஹ்யமாயினது ஸித்தம். சூதஸம்ஹிதை, ஸர்வவேதாந்தஸங்கிரஹமுரைத்த அத்தியாயத்தில் சிவாகமம், விஷ்ணுவாகமம், ஹிரண்யகர்ப்பாகமம், பௌத்தாகம முதலிய எல்லாஆகமங்களையும்பிரஸ்தாபித்து, வைதிகனுவான் இவ் வாகமங்களைத் தழுவவேண்டியதில்லையென்று பொதுப்படக்கூறிச் சிவாகமம், வேதம் இவைகளையநுஸரிப்போர் திரியக்புண்டரத்தை விபூதியாற்றரிக்கக்கடவர்எனவும், மாயனுகமத்திற்கூறுஞ் சங்கசக்ர தாரணத்தை வைதிகர்தழுவின், அவர்கள்நரகத்தில்வருந்துவர் என வும், சிவாகமவிதியின்படிப் பிரதிஷ்டித்தசிவலிங்கசொரூபம் அதி பரிசுத்தமாயிடுதலால், வைதிகன்அதனைப்பூசிக்கக்கடவன் எனவுஞ் சிறப்புத்தோன்ற விதந்தோதப்பட்டிருக்கின்றது. சிவாகமங்களைப் பூஷித்தும், பாஞ்சராத்திரமுதலியவைகளைத் தூஷித்தும் சூதஸம் ஹிதைபிரவர்த்திக்கும் வாஸ்தவஸ்வரூபத்தை நமதுஐயங்காரறியா துமயங்குவது ஸஹஜம். ஸந்யாஸியார் மயங்கியதுதான் கொடுமை. ஆகமப்பொதுவாற் சிவாகமத்தையுந்தூஷித்தது வாமபாசுபதத்தை யேயாம். வாமபசுபதம் அநாதரணியமென்று சிவாகமத்தினுங்கேட் கப்படுகையால், தக்ஷிணபாசுபதமாகியசைவம் ஸர்வஸம்பிரதிபந்ந மாயிற்று. சூதஸம்ஹிதையிலும் சைவாகமமானது ஊர்த்வஸ்ரோ தஸ்ஸ—எனவும், அதஸ்ரோதஸ்ஸ—எனவும் இரண்டாகப்பிரிந்து முதலாவது வேதாவிருத்தமும், இரண்டாவது வேதவிருத்தமுமாய் விளங்குமென்று சொல்லியிருத்தலால், அச்சூதஸம்ஹிதையிற்பெ றப்பட்ட சிவாகமதூஷணம் இனைத்தென்று வெளிப்பட்டது. ஸ்ரீ பாஷ்யகாரரும் "சிவாகமைகதேசே" என்றுபிரஸ்தாபித்து வாம பாசுபதத்தைக்கழித்து ஊர்த்வஸ்ரோதஸ்ஸையே பிரதிஷ்டாப னஞ்செய்தனர். இதனுல், காமிகாதிசிவாகமங்கள் ஸித்தாந்தமாயி னதுஸித்தம். கூர்மபுராணத்தில் "வாமபாசுபதாசாரா: - பாஞ்ச ராத்ராச்ரயா:பரே, ச்ருதிஸ்ம்ருதிவிருத்தத்வாந்-நஸேவ்யாஸ்தேமு முக்ஷுபி:" என்னும் வசனத்தால் வாமபசுபதாசாரமும், பாஞ்ச ராத்திராசாரமும் சுருதிஸ்மிருதிகளுக்கு விருத்தாசாரங்களாக விள ங்கலான், அத்துராசாரங்களையுடையவர்கள் முமுக்ஷுக்களால் பூஜி க்கப்பெறுர்களென்று வெளிப்படுகின்றது. அந்தப்புராணத்திற் றுனே "நிர்மிதம்ஹிமயாபூர்வம் - வ்ரதம்பாசுபதம்சுபம்-குஹ்யாத் குஹ்யதமம்ஸூக்ஷ்மம்-வேதஸாரம் விமுக்தயே - ஏஷபாசுபதாசா ரஸ-ஸேவநீயோமுமுக்ஷுபி:" என்னும்வசனத்தால் பாசுபத விரதத்தைத்தெரிவிக்கும் ஆகமமந்திரங்கள் வேதஸாரமெனவும், மோக்ஷாபேக்ஷையுடையவர்களால் ஸேவிக்கத்தக்கவையெனவும்

பெறபபடுகின்றன. முதல்வசனத்தால் வாமபாசுபததூஷணமும், இரண்டாவதுவசனத்தால் தக்ஷிணபாசுபதபூஷணமும் ஸித்தித்தன. இவ்வுண்மையறியாதவர்களே சிவாகமதூஷணத்திலிறங்கிச் சிவத்துரோகத்துக்குப்பாத்திரராகி வருந்தியுழல்வார்கள். இவ்வாறு பாஞ்சராத்திரத்தைக் காத்துக்கொள்ளுதல் யாண்டும் அமையாது. இங்கேபோந்த இரண்டாவதுசுலோகத்தில் "ஸேவநீயோமுமுக்ஷுபி:" என்றபகுதியில் "அமுமுக்ஷுபி:" என்று பதம்பிரித்து அமுமுக்ஷுக்களாலே பாசுபதம்ஸேவிக்கத்தக்கது என்று முன்னொருபோது எம்பார்ஜீயர்என்னும் பாஞ்சராத்திரியொருவர்பரக்கத்தீட்டிப் பாம்பின்வாய்க்கிரையாயினர். இந்தச்சுலோகத்தில் பூஷித்திருக்கும் பாசுபதத்தை.(சுபம். குஹ்யாத்குஹ்யதமம். சூக்ஷ்மம். வேதஸாரம். விமுக்தம்) என்னும் சப்தங்களால் விளக்கியநலமுணர்ந்தும், எங்ஙனே அம்மதுராமங்கலத்தார் மதிமூர்ந்தொழிந்தனர்? அபார்த்தஞ்செய்து வாஸ்தவத்துக்கிடையூறுசேர்தலும், அவாஸ்தவத்தைச்சாதிக்க முத்துலேபோட்டுவாதுதலும் நமது ஐயங்காரினத்தவர்க்குப் பாலன்னமுண்பதாக முடிகையால், அந்தக்கைங்கரியத்திலேயே சிற்றுாத்துக்காட்டாருதுழைந்து சிறந்திடப்பார்க்கிறார். காமிகாதிஆகமங்கள் எனப்பேர்குறித்து, அவை அப்பிரமாணம் என எந்தவைதிகநூலிலாவது யாவரேனுங்காட்டுவாரெனின், யாம் அஞ்சவேண்டியது. அங்ஙனமின்மையாலும், எமதுநியாயங்களை ஒருவரும் மறுக்கமுடியாதாகையாலும், நமது ஐயங்காரையும், அவரினத்தவரையும் யாம்காதைப்பிடித்தாட்டத்துணிந்தோம். சூதஸம்ஹிதையில் சிலமறையோர்க்குக் கௌதமசாபம்சேர்ந்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதில், சக்ராங்கனுதிபாஞ்சராத்ரதர்மம் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றதேயன்றிப் பாசுபததீக்ஷாதிசிவாகமதர்மம் நிஷேதிக்கப்பட்டிலது. பாசுபதமகிமையே அதில்முற்றும்பூஷிக்கப்பட்டிருக்கின்றது. இவைகளை இனியேனும் பூர்வபட்சிகள் யோசிக்கக்கடவர். பாஞ்சராத்திரத்தைச் சூதஸம்ஹிதையேயன்றி எந்தவைதிகநூல்களும் மெடுத்துச்சிதைத்திடுதலால், ஐயங்கார் சிவாகமதூஷணத்திலிறங்குவதற்கவகாசமின்றி இப்பொழுது நிரயப்படுகுழிக்கிரையாயிடச் சித்தமாயினரென்க. பிருஹந்நாரதீயத்தில், "யஸ்துஸந்தப்தசங்காதி-லிங்கசிந்ஹிததநுர்நர:, ஸஸர்வயாதநாபோகி-சண்டால: கோடிஜந்மபி:" என்று பெறப்பட்ட வசனத்தால் சக்ராங்கனமும், லிங்கதாரணமும் சண்டாளப்பிராப்தத்தைப் பயப்பனவாக வியக்தமாகின்றது. அன்றியும், "யோத்விஜஸ்தப்தசங்காதி - லிங்காங்கிததநுர்நர:, ஸம்பாஷ்ய ரௌர

வம்யாதி-யாவதாசந்த்ரதாரகம்'' என்னும்வசனத்தால் சங்கசக்ர லிங்கதாரணங்களையுடையவர்களோடு ஸம்பாஷித்தலும் நரகம் என்று வெளிப்படுகின்றது. இம்மட்டோ, "சக்ராங்கித தநுர்த்ருஷ்டவாத் - பச்யேத்ஸௌர்யம்ஜபேந்நர:, ஜபேச்ச பௌருஷம்ஸூக்த-ம்ந்யதாரௌரவம் வ்ரஜேத்'' என்னும்வசனத்தால் சக்ராங்கனம் என்னுங்கிரியையால் சூடுண்டவனைப்பார்த்தால் சூரியஜபமும், புருஷசூக்தஜபமுஞ் செய்யவேண்டியது, அவைகளைச் செய்யாவிடின் ரௌரவம் என்னுநரகத்தை அடைவது ஸித்தம் என்று பெறப்படுகின்றது. இன்னபல பிரபலபிரமாணங்கள் சக்ராங்கனவைபவம் நரகஹேதுவாயுள்ளதென முழங்கலால், நமது ஐயங்கார் தம்மைச்சிரிக்கிறதுதெரியாமல் இறுமாந்தது அவரது வினையேயாம்.

என்னை? பாரதம் மோக்ஷதன்மத்தில் பாஞ்சராத்திரம் ஆகிய வைஷ்ணவதர்மமும் படிக்கப்பட்டிருக்கின்றதெனின், அந்தப்பாரதத்தினுபக்ரமத்தில் எடுத்துக்கொண்டபிரமேயங்களி னட்டவணையில் பாசுபதம் பிரஸ்தாபத்துக்குவந்ததுபோல் பாஞ்சராத்திரம் வாராமையால், நமதன்பர் தேடிக்கொண்ட வைஷ்ணவதர்மம் அதில் முக்கியமாகாதொழிந்தது. ஒருபிராஹ்மணன் தனது ஆசிரியனைவணங்கிச் சூத்திரதருமம் எப்படிப் பட்டது? அதனைக் கேட்க அபேக்ஷிக்கிறேன் என்றுவினவுகையில், அந்தப்பிராஹ்மணனுக்கு அந்தச்சூத்திரதருமம் ஸேவ்யமெனல் கூடுமோ? அவனிற் கீழிட்டவனது தருமத்தை அவன் விசாரித்ததே யன்றி அந்தக்கீழிட்டதருமத்தைத் தான் ஆசரித்தானெனல் கூடாது. இதனால், அந்தத்தருமம் அவனுக்கு அமுக்கியமென்பதே ஸித்தம். இந்தவிசாரத்தால், பாரதத்திலடங்கிய விஷயஅட்டவணையிலெடுத்துக்கொள்ளாத வைஷ்ணவதர்மம் வியாஸரது அபிமதமாகாதொழிந்தது. பாரதத்தில் வைஷ்ணவதர்மம் பிரபலமெனின், அநேக ஸ்மிருதிகளுக்கும், புராணங்களுக்கும் விரோதமாகப் பாரதங் கூறுமேல், அது பலவேதியர்களை யெதிர்த்துக்கூறுஞ் சண்டாளனது ஸாக்ஷியோடினப்பட்டு ஒதுக்கப்படுமென்க. பாரதம் சிவஸர்வோத்தமங் கூறுவதாகையால், அதில் விஷ்ணுஸர்வோத்தமம் கல்பிதமேயாம். இதனால் பாரதம் விஷ்ணுதர்மத்தை அமுக்கியமாகப் பிரஸ்தாபித்ததெனவறிந்து, அதில் முக்கியமாகப்பிரஸ்தாபிக்கப்பட்ட பாசுபதஞானத்தையே வைதிகர்கள் ஆசரிப்பார்களென்க. அந்தப்பாரதத்தில் ஸ்ரீகிருஷ்ணர் உபமன்யுபகவானிடம்

த்தில் பாசுபததீக்ஷையடைந்து கிருதார்த்தராயினமையை இனி து பிரகாசப்படுத்தியிருத்தலே இதற்குச்சான்றாம். இதுபற்றியே யன்றோ "யாதவன்றுவரைக்கிறையாகிய-மாதவன்முடி மேலடி வைத்தவன்" என்று உபமன்யுபகவான் ஸாதுக்களால் கொண்டாடப்பட்டிருக்கின்றனர்? இவ்வுண்மைகளையறிந்து குணப்படாமல் பாசுபததூஷணத்திலிறங்கிய நமதன்பரதுபிரயத்னம் நிஷ்பலமாயிற்று. இன்னும்விரிக்கிற் பெருகும்.

இனி, நமதன்பர் பாரதம் தருமர்கதைஆகாதெனவும, பாரதத்தில் பக்வத்கீதைஇருக்கிறதெனவும்,அதனைக்கூறியகண்ணன் நாராயணரது அவதாரமெனவும், அந்தக்கண்ணனைத் தருமர்வழிபட்டெய்ந்தாரெனவும், அந்தக்கண்ணனுக்கு முன்னவதாரம் இராமனெனவும், அவ்விராமரும்-தருமரும் ஸமமாதல் யாங்ஙனமெனவும், பாரதம் நாராயணரதுகதையேயாமெனவும் பிரஸங்கித்துத் திருப்தியடைந்தார். இதனை முறையேமறுத்திடுவோம். இரகுகுலத்தில்வந்த இராமன் இராகவனாயினன். அவனதுகதை இராகவீயம் என்னும் பேர்பெறும். அப்படியே பரதனதுகுலத்தில்வந்ததருமன் பாரதனாயினன். அவனதுகதை பாரதம் என்னும்பேர்பெறும். இதனால், பாரதம் தருமர்கதையென்பதேஸித்தம். இதிற்போந்த பகவத்கீதையால் கண்ணன் அர்ச்சுனனுக்குக் குருவாயினதேயன்றித் தெய்வமாயினதில்லை. அர்ஜுனன் பிரஹ்மம் யாதுஎன்னும்பொருடோன்ற "கிம்தத்ப்ரஹ்மா" என்று கண்ணனைக்கேட்டதற்குக் கண்ணன் தானேபிரஹ்மமாயிருந்தால் "அஹமேவபரப்ரஹ்மா" எனவுரைத்து நானேபிரஹ்மம்என்று அவனைத்தெளிவிக்கவேண்டும். அங்ஙனமின்றி" "அக்ஷரம்ப்ரஹ்மபரமம்" என்றுகூறி, அழியாத பொருள்யாதோ அதுவேபிரஹ்மம் என்று விளக்கினர். இதில், கண்ணன் தன்னைப்பிரஹ்மம்என்றுகூற விசையாதொதுங்கிவிட்டனர். பாரதத்தினாரம்பத்திற்படிக்கப்பட்ட "மூலம்க்ருஷ்ணோப்ரஹ்மசப்ராஹ்மணாச்ச" என்னும்வசனத்தில் தருமம்என்னும் விருட்சத்தின் வேராயுள்ளவர்கள் கிருஷ்ணரும், பிரஹ்மமும், பிராஹ்மணரும் ஆவர் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதில், கிருஷ்ணருக்கு வேறாகப் பிரஹ்மமும், பிராஹ்மணரும் படிக்கப்பட்டிருத்தலால், கிருஷ்ணர் பிரஹ்மமாகாதிழிந்தனர். கிருஷ்ணர்வேறு, பிரஹ்மம் வேறு என்று ஏற்பட்டமையால் பாரதம் நாராயணரதுகதை என்றிறுமாந்துரைத்த ஐயங்காரதுமுகம் இறங்கிவிட்டது. பிரஹ்மம் என்பதற்கு வேதம்என்று பொருள்விரிப்பாருமுளர். கிருஷ்ணரும் பிராஹ்மணருஞ்சேதனர்கள், அவர்க்கிடையில் அசேதனத்தைச்

சேர்ப்பது அஸங்கதம். சேதனபிரஹ்மம் சிவனேயாகையாலும், அவரால் பாண்டவர்க்ஷேமமடைந்தது ஏராளமாகையாலும் பாரதம் சிவகதையென்பதே அமையும். கண்ணனும், பிராஹ்மணர்களும் பிரஹ்மத்திற்கடங்கினவர்களாகையால், அவர்களதுகதை பாரதம் என்னுது அதனைச்சிவனுரதுகதையென்றிடலே ஸர்வஸம்மதம். பாரதம் தருமரதுகதைஎன்று மேலேகூறினும். தருமர், அவரது சகோதரர்முதலினோர் வழிபடற்குரியதெய்வம் சிவமாகையால், அச் சிவனுரது பெருமையை யாண்டும்முழங்கிக்கூறுந்தன்மைநோக்கி (நமதுஐயங்காரைமறுத்து)அதனைச் சிவகதையென்றது இழுக்காது. ஆயின், எல்லாவற்றையும்விட்டு என்னையேசரணடைதி யென்று கண்ணன்கூறியது என்னையெனின், அது ஸோஹம்பாவனையாலெ ன்க. இவ்வுபதேசத்தைக்கேட்டுத்தெளிந்த அர்ஜுனன் சாங்காறுஞ் சிவபூஜையேசெய்திருந்தானென்பது ஸித்தமாகையால், கண்ணன துஹ்ருதயமும், அர்ஜுனனதுஹ்ருதயமும் இனிதுவெளியாயின. இதனுல், அர்ஜுனனுக்குத்தெய்வம் சிவனென்பதேஸித்தம். அர் ஜுனனைப்போல் கண்ணனுஞ் சிவபக்தனுதலே மேலே யாம்விரித் தாம். இந்தக்கண்ணனுக்கு முன்னவதாரமாகிய இராமரும், இவருக் கு மூலமாகியநாராயணரும் ஸேவகர்கள்என்று பலபிரமாணங்களை யும், நியாயங்களையும் பிரகாசப்படுத்தினும். இவர்களைச் சீவர்கள்என் பதற்காதாரமான பலஹேதுக்களையும் எடுத்துக்காட்டினும். தரு மர் கண்ணனைவழிபட்டானென்பது அத்தருமர் துரோணர், வியா சர், துர்வாசர் முதலினோரை வழிபட்டானென்பதோடொத்து ஒதுங் குமென்க. கண்ணனுந் தன்னின்முத்தோர்களையும், முனிவர்களை யும் வழிபட்டிருக்கின்ருர். இப்படியே இராமர்வழிபட்டதும் ஏரா ளம். இதனுல், "இராமர் முனிவர்களைவணங்கினது இழுக்கென்று சைவப்பழத்தின்கருத்து" என்று நமதுவைஷ்ணவப்பிஞ்சு வாய் திறந்ததும் வாளாபோயிற்று. இந்தவியவஸ்தையால், கண்ணன் பரதத்வமாயிடுதல் சிறந்திடமாட்டாது. இந்தக்கண்ணனுக்கு முன் னும்,மூலமுமாகிய இராமரும், நாராயணரும் பரதத்வமாயிடார்கள் "ஸர்வேதேவா:பசுதாமவாபு:" என்றபடி விஷ்ணுவாகியதேவரும் இயமனுகியதேவரும் பசுக்களாயினர். தேவஜந்மம்பெற்ற நாராய ணராகியபசு இராமராஜாவாயினதுபோலத் தேவஜந்மம்பெற்ற இ யமனுகியபசுவுந் தருமராஜாவாயினது ஸத்தியம். "ஸர்வஸ்யப்ரபு மீசாநம்" என்னுஞ்சுவேதாஸ்வதரவசனப்படிப் பசுக்களாகிய தேவர் களுக்கும், முனிவர்களுக்கும், அசுரர்களுக்கும், மற்றவர்களுக்கும் பிரபுவாயுள்ளவர் சிவனேயாகையால், பாரதத்தாற்போந்த தருமர்

முதலிய உபாஸகர்களுக்கு உபாஸ்யர் அச்சிவனென்றே அந்தப்பாரதம் ஸித்தாந்தப்படுத்திவிட்டது. இதனால், பாரதம் அடங்கலுஞ் சிவபரத்வபோதகமென்பதே ஸித்தம். சூதஸம்ஹிதையில், "ச்ருதயச்சபுராணநி-பாரதாதிநிஸத்தம, சிவமேவஸதாஸாம்பம்-ஷ்ருதிக்ருத்வாப்ருவந்திஹி" என்னும் வசனத்தால் வேதங்களும், புராணங்களும், பாரதமுதலிய இதிஹாஸங்களுஞ் சிவபெருமானையே பிரதிபாதிக்கின்றன என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தப்பிரமாணவசனத்தால் பாரதம் சிவபரத்வபோதகமாயினது பிரஸித்தம். சிவனிடத்திலேநின்றும் விஷ்ணுபிறந்தார், சிவனைநோக்கித்தவங்கிடந்து அவர் அரியபேறுகள்பெற்றார் என்பனவாதி சிவஸர்வோத்தமங்களைப் பிரதிபாதிக்கும்அதனை நாராயணரது பரத்வபோதகமாக நமதன்பர் பிரஸ்தாபித்தது ஆசைவெட்கமறியாது என்பதற்கிணையாகி அழிந்ததென்க. இன்னும் விரிக்கிற்பெருகும்.

இதுகாறும் யாம்வியகரித்தமுடிவுகளால் நமது ஐயங்காரது தீபிகையினுபாஸம் இனிது விளக்கமாய்விட்டது. இவர் இனி இரண்டாவதுபாகமொன்று வெளியிடப்போவதாகவதந்தி. அது அவரது முதற்பாகத்தைப்போலவேயிருக்குமென்பதில் எமக்குஸந்தேகமில்லை. அது வெளிவந்தவுடன் எங்கள் இரண்டாவதுபாகமும் வெளிவருமென்பது யாவருமறிந்தவிஷயமே. அவரது முதற்பாகம் நாயகரவர்கள்விடுத்த "இராமர் சிவபூசைசெய்தது" என்பதற்கெழுந்தபதில். அது (பதில்) என்னும் பேர்பூண்டுவெளிவந்ததேயன்றி அதில்பதில்கிடையவேகிடையாது. எல்லாம் உளறல்களே. இப்படியுளறுவதானால்,சிறுபசகளும்பதில்விடுத்துத்திருப்தியடையலாம். கேட்டகேள்விகளுக்குப் பதில்சொல்லாமல் வேறுவிபரீதகேள்விகளைக்கேட்டுச் சுவடியைநிரப்பிவிட்டார். அந்தக்கேள்விகள் (ஸ்ரீராமர்சிவபூசைசெய்யவில்லை) என்னும் அவரதுபட்சத்தைச்சாதித்தற்கு ஸாதகமாயினவல்ல. அவை மூடர்கழகத்து முன்னுக்குவரத்தக்க யோக்யமுடையனவேயாம். ஆயினும் அவைகளையாம்வெட்டிச்சாய்த்தோம். இனிஅவரது பூச்சிமிரட்டல்களுக்குச் சிறுகுழந்தைகளும் அஞ்சார்கள். எமது நாயகரவர்களது பத்திரிகையிலடங்கிய விஷயங்களுள், நமதுபண்டிதர் பிரஸ்தாபத்துக்கே கொண்டுவராமல்விட்டசிலவற்றை ஈண்டுயாம்வெளிப்படுத்தி அவரதுயோக்யதையைப் பிரகாசப்படுத்துகிறோம்.

I. நாராயணர் தியாதா.அவரது அவதாரமாகியஇராமருந் தியாதா. தியாதாவாகிய இராமர் உபாஸ்யராதல்யாங்ஙனம்? அவர் உபா

ஸகராதலே சிறக்கும். அதனால், இராமர் சிவபூசைசெய்தாரெனலிழுக்காது.

II. சிவன் தியேயர். அதனால் அவர் உபாஸ்யர். உபாஸ்யராகிய அவரை இராமர்பூசித்தது பரிபவமாகாது.

III. இயமன்தெய்வம். இராமர்மனுஷ்யர். மனுஷ்யராகியஇராமர் தெய்வமாகிய இயமனை உபாஸித்தார். இயமனாகியதெய்வத்தை உபாஸித்தஇராமர் சிவனாகியதெய்வத்தை உபாஸித்தாரென்றால் துக்கமோ?

IV. கண்ணன் சாலுவயுத்தத்தில் மூர்ச்சையடைந்து கீழேவீழ்ந்தார். வேடனது அம்பால்லிறந்தார். அவருக்குப் பிரேதகிருத்யமும் நடந்தது. இவரது முன்னவதாரமாயுள்ளவர் இராமர். இவராற் கொல்லப்பட்டவாலியே இவரை இவரது பின்னவதாரத்தில் வேடனாகத்தோன்றி விசாரித்துக்கொண்டான். இராமர் வாலியை நேர்நின்று கொல்லாமற்போயினர். வாலிசுக்ரீவர்களுடைய அடையாளமுந் தெரிந்துகொள்ளாதவராயினர். இவரதுபின்னவதாரமாகிய கிருஷ்ணர் துர்வாசரதுசாபத்தைதக்கடந்திலர். வேடன் சரந் தொடுத்ததுந் தெரிந்துகொள்ளாதவராயினர். இவ்வியல்பினையுடையார் பாசநீக்கப்பொருளாதல் யாங்ஙனம்? இத்தகையார் சிவனைப்பூசித்தல் அதிசயமோ?

V. போதாயனர்முதலினோர் (இராமாயணம்) தனித்தனிக்கூறப்போந்தது இராமரிடம்வைத்த அன்புகாரணமன்றித் துவேஷங்காரணமன்று. அவர்கள் இராமர் சிவபூசைசெய்ததை ஒப்பினார்களாகையால், இராமர் சிவனைப்பூசித்தது ஸாதுக்கள்ஸம்மதம்.

VI. ஆதித்யபுராணம், பராசரபுராணம் இத்யாதிபிரமாணங்களால் இராமருக்குஹத்திவந்ததும், அதனைஅவர் சிவபூசையால் போக்கிக்கொண்டதும் வியக்தம். இவற்றால், 'இராமர் சிவபூசை செய்தது பிரமாணஸித்தம்.

VII. "பக்த்யாநம்ரதகோவிஷ்ணோ:, ப்ரஸாதமகரோச்சிவ:" என்னுஞ்சுருதியும், "அத்ரபூர்வம்மகாதேவ:, ப்ரஸாதமகரோச்சிவ:" என்னும் இராமாயணமும் ஏகார்த்தத்தைப்பயத்தலால், இராமர் சிவபூசைசெய்தாரெனல் வேதஸம்மதம்.

இந்தக்கட்சிகளுக்கு வாய்திறக்கவேவகையற்று மழுப்பியநமதன்பர். "சிவன் கர்மமடியாகப்பிறப்பினையுடையவரா? அல்லவா?" என்பதுமுதலிய விபரீதங்களை விளக்கப்போகின்றாராம். இவர் இதனைவிளக்கும்போது நமதுஜயங்கார் சூத்திரரினுங்கடையார்?

அல்லவா ? என்பதுமுதலியகட்சிகளைப் பிறர்விளக்காமற்போவார்க ளா ? நம்மவருக்குச்சிவனைத்தூஷிக்க எவ்வளவுஆதரவுகிடைக்கு மோ, அவ்வளவுஆதரவு அவர்விஷயத்தில் பிறர்க்குங்கிடைக்கும். பஞ்சருத்ரங்களிலொன்றாகிய சுவேதாசுவதரத்தில் "நதஸ்யகச் சித்பதிரஸ்திலோகே- நசேசிதாநைவசதஸ்யலிங்கம்-நகாரணம் கா ரணாநாமதிசோ - நதஸ்கச்சிஜ்ஜநிதாநபோதிப:" என்னும்வாக்கியத் தால் அந்தவுருத்திரருக்குப்பிரபுவும் ரக்ஷகனும் லோகத்திலொரு வருமில்லையெனவும், அவருக்குஜந்மஸ்தானமும் காரணமுமில்லை யெனவும், அவர் காரணங்களுக்கெல்லாம் பிரபுவானவர், அவருக்கு உற்பத்திகாரணமானவர்களொருவருமில்லை, அவர் ஆகாசாதிபதி எனவும பெறப்பட்டிருக்கின்றது. இதனையோசிப்பாம். அவருக் குமேலொரு பிரபுஇல்லையென்றதனால் அவர் ஒருவராளுகையி லில்லாதவரெனவும், அவருக்குமேலொரு ரக்ஷகரில்லையென்றத னால் தாமொருவருடைய ரக்ஷகத்தையெதிர்பார்க்கவேண்டியகு றைவு தம்பக்கலொன்று மெய்தாதவரெனவும்,அவர் தமக்குஜந்மஸ் தானமில்லாதவரென்றதனால் பிறப்புக்கேதுவாகிய பாசவீக்கமில் லாதவரெனவும், அவர் ஸ்தானமில்லாதவரென்றதனால் ஓர்காலத்தி லும் எந்தவிடத்திலும் பிறந்தேயறியாதவரெனவும், அவர் காரண மில்லாதவரென்றதனால் தமக்குவேறாகியமாயோபதாநமும், தம் மில்வேறாகிய நிமித்யஸஹகாரிகளும்வேண்டாத திருமேனிபடை த்தவரெனவும், அவர் காரணங்களுக்கெல்லாம் பிரபு என்றதனால் மூவிதகாரணங்களுந் தம்பாற்றொழிற்பாடுபெற விசைந்தவரென வும், அவருக்கு உற்பத்திகாரணமானவர்களொருவருமில்லையென்ற தனால் அவர் இன்னொரிடத்திற்பிறந்தாரென்னுந் தோஷமெய்தாதவ ரெனவும், அவர் ஆகாசாதிபதியென்றதனால் ஆகாசத்தைப்போல் யாவுந்தம்மிலடங்கப்பெற்று அவைஜீவிக்கவிடங்கொடுத்திருப்பவ ரெனவும், அல்லது ஒன்றிலுந்தாக்கற்று நிராலம்பமாத்திரமாயிருப் பவரெனவும் வியக்தமாகின்றது.

இதற்குமுறையே பொருள்கொள்ளுங்கால், தம்முடையஆளு கையில் யாவரையும்நடத்துபவரெனவும்,எல்லாவுயிர்களையுந் தாமே ரக்ஷிக்கின்றவரெனவும், யாவும்பிறப்பதற்குத் தாமேஜந்மஸ்தான மாயிருப்பவரெனவும், ஸர்வசராசரங்களுந் தம்மிடத்திலேதானே பிறக்கக்காண்கின்றவரெனவும், காரணத்திரயங்களுந் தம்மிடத்தி லேதானே ஜீவித்திங்கச்செய்கின்றவரெனவும், மூவிதகாரணங்க ளுக்குந் தாமேகர்த்தாவாயிருப்பவரெனவும், யாவருந்தமதாதரவி ன்றிப் பிறத்தற்கிடம்பெறாத தாரகமாயுள்ளவரெனவும், இவை

யிற்றையுடன்கொண்டியங்குதல்செய்தும் ஒன்றுஞ்செய்யாதவரெனவும் பிரகாசப்படுதெல்ஸித்தம்.

இவ்வியல்பினதாகிய பரசிவத்திற்குப் பிறப்பிறப்புகளைக் கற்பிக்கத்தொடங்கிய நமதுஐயங்காரதுஆசை இனி என்னாகுமோ? இவர்து வீணாசையின்பெருக்கால் விஷ்ணுவைத்தொடர்ந்திருக்கும் வினைவின்பெருக்கும், அதனாலாயபிறவியினதுநெருக்கும் அவனைவிட்டுவிலகிப்போகுமோ? இராமரதுதலைமேலேறிய பிரம்ஹஹத்திப்பேய் கீழேகுதித்தோடிப்போகுமோ? சிவாராதநமொன்றே அவர்தமதுரோகங்கள்நிவிர்த்திபெறுதற்குத் தேடிக்கொண்ட பரமௌஷதமென்க. சூதஸம்ஹிதையில், "ஸேதுமத்யேமஹாதீர்த்தே-கந்தமாதநபர்வதே, யத்ரஸ்நாத்வாமஹாபக்த்யா - ராகவஸ்ஸஹஸீதயா, லக்ஷ்மணேநததைவாந்யைஸ்-ஸுக்ரீவப்ரமுகைர்வரை:, முனிபிர்த்தேவகந்தர்வை - யக்ஷவித்யாதராதிபி:, ராக்ஷஸேசவதோத்பந்நம்-ப்ரஹ்மஹத்யாம்விஹாயஸ:, ப்ரதிஷ்டாப்யமஹாதேவம்-ஸ்ரீமத்ராமேச்வராபிதம்" என்றற்றொடக்கத்துவசனங்களால் இராமபத்திரர் ஸீதைமுதலினோருடன் மஹாதேவனைப் பிரதிஷ்டித்துப் புனிதராயினர் என்று வியக்தமாகின்றது. இதனால், சிவபிரதிஷ்டையால் இராமர்பிரஹ்மஹத்திநீங்கிச் சுத்தராயினரென்பது ஸத்தியமாயிறறு. இதனை ஆந்திரபாஷாமஹாகவியொருவர்செய்தருளிய தசாவதாரசரித்திரத்தில் "ராமசந்த்ருண்டு ராமேச்வரம்புசேரி, தனதுபேரஸமீரணதனயுபேர, திவ்யலிங்கம்புலடபரதிஷ்டிஞ்சிகொலிசி" என்றுகூறியிருக்கின்றனர். இப்படியே பலபாஷைகளிலும் முன்னோர்கள் இராமரதுசிவபூசையை ஸ்தாபித்திருக்கின்றார்கள். இத்யாதி பிரபலஸாக்ஷிகளைப்புறந்தள்ளி விபரீதத்தால்வெய்துற்றுக்ஷீணத்தைத்தேடிக்கொள்ளாமல்இராமநாதர்துபிரஸாதத்தால் இராமர்க்ஷேமமடைந்ததுபோல நமதன்பரும் அவரது பிரஸாதத்தைத் தேடுந்தவமுன்றுற்றித் திருவருளைப்பெற்றுவாழ்வாராக. நமது ஐயங்காரது துர்ப்போதனையிலகப்பட்டு ஸாதுக்கள்மயங்காவண்ணமே இச்சிவபுண்ணியத்தை யாம்கைக்கொண்டோம். இது ஸாதுக்களுடையக்ஷேமார்த்தம் உலகினிடுவாழ்க.

## வாழ்த்து.

வாழ்க கோசலை மாதவ மைந்தனார்
வாழ்க மாருதி சீதையின் வந்தவர்
வாழ்க வாங்கவர் வைத்தவி லிங்கங்கள்
வாழ்க சேதுவ ளம்பதி வாழ்கவே.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# இராமநாதசிவபிரதிட்டை.

## கண்ணிகள்.

சங்கரன்சம்புசி வன்சசிசேகரன்
தையலுமைமண வாளன்கண்டீர்
துங்கமறைப்பொரு ளென்றெவரும்புகழ்
தோன்றலுயர்பர மாம்பொருளே. (௧)

ஓதுமிராமக தையின்மாதேவனை,
யொப்பில்பகவனு மீசனுமென்
றோதரங்கூரவ றைந்திடலாற்சிவ
னேபரம்பொரு ளாகுங்கண்டீர். (௨)

கோசலைமைந்தன்சி வனைமகானென்றுங்
கோதில்ப்ரஸாதம்பு ரிந்தானென்றும்
ஆசைகொளும்ப்ரபு வென்றுந்துதித்திட
லாலேசிவன்பர மாகுங்கண்டீர். (௩)

மூர்க்கனிராவண னைக்கொன்றபாதக
முன்னும்பின்னுந்தொடர்ந் திர்த்திடவே
தீர்க்கவதனையி ராமனுஞ்சேதுவிற்
சென்றுசிவன்கழ லேத்தினனே. (௪)

தம்பியிலக்கும னுந்தன்பேராலொரு
தாணுவைவைத்தன னுங்கதுபோல்
வெம்பியசீதையுந் தன்பேராலாங்கொரு
வித்தகலிங்கம்வி ளக்கினளே. (௫)

அஞ்சனைபெற்றம கனுஞ்சிவனையாங்
கர்ச்சித்திடர்களைந் தானதனால்
நெஞ்சிலழுத்திவ ழுத்துகின்றோர்சிவ
நேயமலிந்திடர் நீங்குவரோ. (௬)

## வாழ்த்து.

வாழிமறையாக மங்கள்புராணங்கள்
வாழியிராமன்பெ ரும்புகழே
வாழிவளந்தரு சேதுவிலாங்கவுன்
வைத்தவிலிங்கமும் வாழியவே. (௭)

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

---

# இராமதத்வதீபிகையினது

## ஆபாசவிளக்கம்.

(இரண்டாவதுபாகம்.)

---

இஃது

ஸ்ரீலஸ்ரீ

சோமசுந்தரநாயகரவர்களது

மாணாக்கருளொருவராகிய

போரூர் அகரம்

முனிசாமிமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு

சென்னை

வேதாகமோக்த சைவசித்தாந்தசபையாரால்

வெளியிடப்பட்டது.

---

MADRAS:

PRINTED BY S. RUTHNA CHETTIA

AT THE MADRAS RIPON PRE

1889.

சிவமயம்.

# பிழை திருத்தம்.

(இரண்டாம்பாகம்.)

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௪ | மன்றோ? | மன்றோ?" |
| ௬ | ௧௭ | ருக்கின்றோம் | யிருக்கின்றோ |
| ௯ | ௫ | சிருஞருக்கே | சிவஞருக்கே |
| ,, | ௯ | ஈச்வர | ஈசாந |
| ௧௧ | ௨ | புறப்படது | புறப்பட்டது |
| ௨௯ | ௧௦ | துத்யேச் | யேயச் |
| ௨௪ | ௧௬ | துத்யேச் | யேயச் |
| ,, | ௨௯ | என்ற | று |
| ௨௮ | ௨௫ | மபத்தால் | பத்தால் |
| ௯௬ | ௨௨ | தரிமூர்த்தி | தரியமூர்த்தி |
| ௪௯ | ௧௯ | பில்லா | பிலா |
| ௫௧ | ௨௧ | ஆஜ்ஞை | ஆஜ்ஞை |
| ௫௭ | ௨௬ | யன் | பயன் |
| ௫௮ | ௧௧ | சங்கைகளும் | சங்கைகளும் |
| ,, | ,, | நிவரணை | நிவாரண |
| ,, | ௨௨ | உபநிஷத்துகள் | உபநிஷத்துக் |
| ௪௮ | ௭ | கல் | கால் |
| ௫௭ | ௧௨ | ஸலா: | ஸகலா: |

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவே நம:.

# இராமதத்வதீபிகையினது ஆபாசவிளக்கம்.

—:(*):—

(இரண்டாவதுபாகம்.)

காப்பு.

ஸ்ரீகணநாதர்.

எவனுமை தருமக வெனவில குறுமறை
எவனுயர் புகழினி துரைசெயு மிமையவர்
எவனருள் பெறவினி திசைகுவ ரிபமெனும்
அவனடி முடிபட வடைதிநின் மனனே.

## முகவுரை.

இராமதத்வதீபிகை(முதற்பாகம்)எனப்பேரிட்டு ஓராபாசத்திரட்டைச் சிற்றுத்துக்காடு சீநிவாஸாசாரியென்பவர் முன்புவெளியிட்டார். அதனை மறுத்து அதனுபாசவிளக்கம் எனப்பேரிட்டு ஓர் நூலை எமதுதோழர் ம-ா-ா-ஸ்ரீ நல்-சுப்பிரமணியமுதலியார் வெளியிட்டிருக்கின்றார். அதனால், நமதுபண்டிதராதுயோக்யதை வெட்டவெளியாயிற்று. அதனைக்கண்டும், வெட்கமின்றி மீண்டுந் தாம் ஓர்நூலாசிரியராகவெளிப்பட்டார். அந்நூல் "இராமதத்வதீபிகையினது 2-வதுபாகம்" என்பதே. இவ்வழுத்திரட்டில் இராமதத்வமொன்றுங்காணேம். எல்லாம் விராமதத்வமாகவேயிருக்கின்றது. இராமதத்வம் என்னும் ஓர்பிரயோகம் தத்வசாஸ்திரங்களில் எங்காவது படிதமுண்டா ? விஷ்ணுதத்வமிருந்தாலன்றோ இராமதத்வம்-கிருஷ்ணதத்வம்-கோவிந்ததத்வம் - லட்சுமிதத்வம் என்னும் ஆபாஸங்களுக்கு இடமுண்டாகும்? . வேதங்களில் சிவதத்வம், சக்திதத்வம், சிவஞானம்,சிவயோகம், சிவபோகம், சிவகரணம் இத்யாதிபிரயோகங்கள் பஹுளமாய்க்கிடப்பதறிந்து அகந்தையுடங்குவாராக. அதத்வரூபியாகிய இராமன்றலையில் தத்வம் என்னுமோர்மகுடஞ்சூட்டியது ஒட்டைநாழிக்குப்பூண்கட்டியதுபோலாம். இதுநிற்க. நமதுஐயங்காரது இரண்டாவதுபாகத்தின் முகத்திலொழுகுமழுக்கையும் இனியாம் கொஞ்சமெடுக்கக்காட்டுவோம்.

## நூல்.

அவ்வாபாசத்திரட்டினுபக்ரமத்தில் நமதன்பர் "மாதவன் தன்னடியாரைத் தான் வணங்கிப் பெருமைபடுத்துவது அக்கருணை வள்ளலுக்கு அணிகலமன்றோ? என வோர்பீடிகை போட்டுக்கொண்டார். இது நிஜமாயின், விசுவாமித்திராதிகளையும், ஏனைய பிராஹ்மணர்களையும் பரவாசுதேவராகிய மூலவிஷ்ணுவணங்கிப் பெருமைப்படுத்தல்வேண்டும். அங்ஙனமின்றி இராமகிருஷ்ணாதிகளேயன்றோ முனிவர்களதுகால்களில்வீழ்ந்து முன்னுக்குவந்தார்கள்? ஒருவன் கர்மவசத்தால் பிராஹ்மணனும், சூத்திரனும் பிறந்தகாலையில் பிராஹ்மணனாய்ப்பிறந்தபோது அவன் சூத்திரன்காலில் வீழமாட்டான். சூத்திரனாய்ப்பிறந்தபோது அவன் பிராஹ்மணன்காலில் வீழாமற்போகமாட்டான். கர்மத்தினாலேர்ந்தஜந்மங்களில் சூத்திரனில் பிராஹ்மணன் அதிகனானபடி இராமகிருஷ்ணாதி மநுஷ்யஜந்மங்களில் விஷ்ணுவாகிய தேவஜந்மம் உயர்ந்தது. விஷ்ணுவாகிய தேவஜந்மத்தையும், இராமகிருஷ்ணாதி மநுஷ்யஜந்மங்களையும் ஓர் ஜீவனேயெய்திச் சுகதுக்கங்களின்மொத்துண்டு போகத்தின்மூழ்கியது ஸஹஜமாகையால், அந்தஜீவன் விஷ்ணுவாகியஜந்மத்தில் பிராஹ்மணர்களை வணங்காமலும், இராமகிருஷ்ணாதி மநுஷ்யஜந்மத்தில் பிராஹ்மணர்களைவணங்கியும் உழன்றது. பிராஹ்மணர்கள் சீவர்கள். இராமகிருஷ்ணாதிகளுஞ்சீவர்கள். பிராஹ்மணர்முதல்வருணம். இராமகிருஷ்ணாதிகள் க்ஷத்திரியர்களாகிய இரண்டாவதுவருணம். முதல்வருணத்தவரை இரண்டாவதுவருணத்தவர் வணங்குவது அவருக்குத் தலையிலெழுதிய எழுத்து. அதனால், இராமருங் கிருஷ்ணரும் பிராஹ்மணர்களைவழிபட்டார்கள். இதனால், பிராஹ்மணர்களை நோக்க இராமகிருஷ்ணாதிகள் தாழ்ந்தவர்களென்பதே ஸித்தாந்தமாயிற்று. இவ்வுண்மைகளைத் தெளிந்துணரப்படாமல் "தன்னடிமையான தமோதேவதையாகியசிவனுக்குத்தான் கொடுத்தவரந்தப்பாது கண்ணனாகக்காசினியிலவதரித்துச் சிவனை ஆராதித்தாரே" என்றும் நமதன்பர் கொஞ்சியுரைத்தார். தமசு என்பதுபேரிருள். இதனைக்குணமாகவுடையவர் விஷ்ணுவுக்கு அடிமையானது ஆச்சரியம் அவ்வஞ்ஞானவடிவினராகிய சிவனாரதுகாலில் விஷ்ணுவீழ்ந்ததும் ஆச்சரியம். கண்ணன் சிவன்காலில்வீழ்ந்து அச்சிவனைத் தன்னைக்காட்டிலும் பெரியவராக உலகினிலைபெறுவித்தது ஸத்தியமாயின், அந்தக்கண்ணனது அபிமதத்திற்குவிரோதமாக ஏனோ பாஞ்சராத்திரிகள் சிவதூஷணத்திலிறங்கிக்கெடவேண்டும்? கண்ணன்வீழ்ந்த சிவன்காலில் நமதையங்காரும், அவரினத்தவரும்வீழ்ந்து அச்சிவனை

ஏன் பெருமைபடுத்தக்கூடாது? அந்தோ! இன்னோர் கண்ணனுக்கே துரோகமிழைத்தவராயினர். இரணியன் தானே பெரியவன் என்று எண்ணியதற்கு அவனை நாராயணர் நரசிங்கமாகத் தூணின்முளைத்துக் கொன்றாரன்றோ? சிவன் தானே பெரியவனுயிட வெண்ணியதை நாராயணரொப்பியது யாங்ஙனம்? சிவன் நாராயணனிடத்தில் அன்புடையவராயிருந்தால், நாராயணன் தன்னை வணங்கவேண்டுமென்று விரும்பமாட்டார். அவர் விரும்பினமையால், அவர் நாராயணனுக்கு அன்பராகமாட்டார். அவரன்பராகாமையால், அவருக்கு விஷ்ணுமூர்த்தி வரமுங்கொடுக்கமாட்டார். அவர் வரங்கொடுத்ததும், சிவன் வரம்பெற்றதும் அஸங்கதமென்க. நமதன்பரும் சிவனைத் தாமசி என்று பிரஸ்தாபித்திருக்கிறார். இந்தஹேயகுணமுடையவருக்கு அவரது அளவுக்கதிகமாகக் கேட்டவரத்தைக்கொடுத்துவிட்டு, விஷ்ணுபகவான் கொத்தடிமையாய்க்கிடந்தாரென்பது நமதன்பருக்கேயன்றி வேதம்படித்தவித்தகர்க்கு ஒப்பாது. இந்தவியவஸ்தையால், நமதுஐயங்கார் பூர்வத்தில் முட்டாள்களுக்கெல்லாஞ் சட்டாம்பிள்ளைகளாயிருந்த மூதேவிமக்களெழுதிவைத்த தப்புதஸ்தாவேசுகளைநம்பி அவதிப்பட்டுக்கொண்டு பண்டிதசபைகளிலவமானப்படுகின்றார். "ப்ரஹ்மவிஷ்ண்வாதிபிஸ்ஸேவ்யம்" எனவும், "பக்த்யாநம்ரதநோவிஷ்ணோ:-ப்ரஸாதமகரோச்சிவ:" எனவும் "யோவாமபாதார்ச்சிதவிஷ்ணுநேத்ர - ஸ்தஸ்மைதநௌசக்ரமதீவஹ்ருஷ்ட:" எனவும் சுருதிகள்கோஷிக்கும் வாஸ்தவமறிந்தவர்கள் சிவனைத் தமோதேவதையாகிய அஹங்காரி எனவும், அவரைக் கண்ணன்பூசித்தது வரதானபாலனமெனவும் பிதற்றிய ஐயங்காரது துச்சஹேதுக்களைக் காற்கடைகொண்டெற்றுவரென்க. இவ்விஷயத்தை எமது தோழர் தமதுமுதற்பாகத்திற்றானே செவ்வையாகச் சிங்காரித்திருக்கின்றார். நமதன்பரிடம்வைத்த விசுவாசத்தால் ஈண்டு யாமுங்கொஞ்சம் அழகுபடுத்தினோம். இனியேனும் அடங்கிவாழ்வாராக.

இவ்வைஷ்ணவப்பிஞ்சு சிவனைச் சீவனென்றும், அவர் கர்மவசியர்கப்பிறந்திறக்கிறவரென்றும், இந்தவுண்மை மஹோபநிஷத்து, நாராயணோபநிஷத்து, சுபாலோபநிஷத்து, ப்ருஹதாரணியகோபநிஷத்துமுதலிய பலவுபநிஷத்துக்களிற் சொல்லப்பட்டிருக்கிறதென்றும், நாராயணரது அவதாரத்துக்கு அவரது இச்சையேயன்றிக் கர்மம் காரணமாகமாட்டாதென்றும் "அனபஹதபாப்மாவாஹமஸ்மி" என்று சிவன் தன்னைச் சொல்லிக்கொண்டவசனம் சிவனது பிறப்புக்குக் கர்ம்மகாரணமென்று தெரிவிக்கிறதென்றும், பிறந்தசிவன்வேறு பிறவாதசிவன்வேறு என்று சைவர்கள் சொல்லுவார்களெ

ன்றும், இரண்டுசிவனில்லை சிவன் ஒருவரோயென்றும், விஷ்ணுவினது அவதாரங்களுக்கு இச்சையே ஹேது என்பதைப் பகவத்கீதை நிறுத்துகிறதென்றும், தனது ஊத்தைவாய்திறந்து ஸந்தோஷித்தது. இம்மஹாகவி உபநிஷத்துக்களின்பேரைப் பிரஸ்தாபித்துவிட்டதனாலேயே எதிரிகள் அஞ்சியொளிப்பார்களென்று எண்ணியது போலும். அவர்குறித்த வுபநிஷத்துக்களிலெல்லாம் நாராயணர் பெரும்பாவியென்று கூறியிருப்பதாக யாம்தெரிவிக்கின்றோம். அவ்வுபநிஷத்துக்களால் நமதன்பர் சிவனது பிறப்பிறப்புக்களை ஸித்தாந்தம் பண்ணுகிறபோது அவற்றைக்கொண்டே நாராயணன்பெரும்பாவி என்பதை யாமும் ஸித்தாந்தம்பண்ணுவோம். சிவன், கர்மமடியாகப் பிறந்தார், செத்தார் என்று மொத்தமாகக்கூறாமல், அவ்வாறு பொருளுண்டாகக்கூறுஞ் சுருதிவசனங்களையும், அநுபவங்களையும் நமதன்பர்காட்டுவாரெனின், வாமனனையும், இராமனையும், கண்ணனையும் பிருகுசாபத்தால் அதிதி-கோசலை-தேவகி என்பவர்களது கர்ப்பங்களிலுழன்று அவர்களது யோநித்தழும்புகளேறக் கீழேவீழ்ந்துபுரண்டு சிலபோதிருந்து துர்மரணங்களானுசமெய்திய மஹான்களென்று யாம்வாய்திறக்கமாட்டோம். முனிவரதுசாபம் விஷ்ணுவினது பிறப்புக்குக் காரணம்என்று வைதிகநூல்களெல்லாம் முறையிடுவதை நமதன்பர் ஞாபகத்திற்குக்கொண்டுவந்திலர். இந்தஆபத்தை நிவிர்த்தித்துக்கொள்ள இருசமயவிளக்கக்காரன் பிருகு பக்தனானபடியால், அவனதுவாக்கைப் பரிபாலித்தார் விஷ்ணுவென்று ஓர் ஸமாதானந்தேடிக்கொண்டான். இச்சையினால் ஒருவன் தனது யோக்யதையைக் கெடுத்துக்கொள்வது யாங்ஙனம்? எத்தனைதிருமேனிகளெடுத்தாலும், யோக்யதைகுன்றாமலிருக்கவேண்டும். கர்மாதீனமானஇச்சையால் யோநித்தழும்புகளேறப்பிறந்தியங்குமோர் பொருள் தெய்வமானால், நாமும் ஏன் தெய்வமாகக்கூடாது? பாடையிலேற்றிக் கட்டைமேற்கிடத்திப் பரக்கத்தீமூட்டிக் கொளுத்தப்பெற்றபாக்யம் யாருடையது? இவைகளைப் பெருநிதியாகப்படைத்த நமதுஐயங்கார் தாமுமொருமானியாகச் சபையில் வாய்திறக்கவந்தாரன்றோ? என்னபேதைமை! நமதன்பர்செய்கை வியபிசாரி ஸம்ஸாரியோடு சண்டையிட்டெதிர்த்துக் கூச்சலிடுதற்கே ஒப்பிடத்தக்கது. சுவேதாசுவதரத்தில் "நதஸ்யகச்சித்பதிரஸ்திலோகே" என்கிறவாக்கியத்தால் சிவன் ஜநகமில்லாதவர் என்று இனிது விளங்குகின்றது. "அஜாதஇத்யேவம்கச்சித்பீரு:" எனவும், "அஜம்த்ருவம்ஸர்வதத்வைர்விசுத்தம்" எனவும் சுருதிகளெழுந்து இவன் பிறவாதபொருள் என்று கோஷிக்கின்றன. இவைக

ளுக்கு விரோதமாகச் சிவன் பிறந்தார், இறந்தார் என்று நம்மவர் கத்துவது மாதுவீகதர்ம்மாவதெங்ஙனம்? மாதாவுதரத்திற்றங்கிப்பிதுங்கி மடிந்தவர்கள் சிவர்களா? ஓர்பிறப்புமெய்தாதவர் சிவனா? சிவனாரது கதையில் அவருக்கு இழவெடுத்த வைபவம் எங்காவது படிதமுண்டாயின், நமதன்பர் அதனை யெடுத்துப் பிரஸங்கிப்பாராக. விஷ்ணுவினது அவதாரங்களைச் சிந்நபிந்நமாகச்சிதைத்தார் சிவபெருமான் என்று "யோமத்ஸ்யகூர்மாதிவராஹஸிஹ்மாந், விஷ்ணுக்ரமந்தம் வாமநமாதிவிஷ்ணும், ஸவிக்லபம்பீட்யமாநம்" என்னுஞ்சுருதியெழுந்து வெளிப்படுத்தும் அர்த்தவைபவத்திற்கு யார் என்ன செய்யலாம்? இச்சாவதாரங்கள் படும்பாட்டை நமதன்பரே யோசிக்கவேண்டியது. கர்மங்காரணமாக விஷ்ணுவானவர் பிறந்தும், செத்துஞ்சிரழிந்தகதைகளை நமதன்பர் மறைக்கப்பார்த்தால் மறையுமா? சுக்கிலசோணிதபரிணமங் காரணமாகத் திருமேனிபடைத்தவர்கள் கண்ணன் முதலினோரொன்னும் வைபவத்தை இனியேனுங்கண்டு நமதன்பர்களிப்பாராக. சுருதியில் "அநபஹதபாப்மாவாஹமஸ்மி" என்னும்வசனம் நான்போக்கடிக்கக்கூடாத பாவத்தையுடையவனாகிறேன்" என்று பொருள்பயப்பதாக அவரது கருத்து. இதனால் சிவன் பாவிஎனவும், அதற்கு என்றுந்தீர்வில்லையெனவும் ஏற்படுகின்றது. இத்தகையமஹாபாவிக்குக் கண்ணன்வரங்கொடுத்து அவன் காலில்வீழ்ந்துவணங்கியது ஆச்சரியம்மல்லவா? அவனைவிடப் பெரும்பாவியேஅவன்காலில்வீழத்தக்கவனுவான். இதுநிற்க. நமதன்பர் எழுதிய துண்டுவசனம் சிவன்சொன்னதோ, விஷ்ணுவேசொன்னதோ அதில்விளங்கவில்லை. அது இன்னசுருதியில் இன்னஸந்தர்ப்பத்தினது என்று அவர் விளங்கக்காட்டுகிறவரையில் அதை யாம்கவனிப்பது அவசியமன்று. நாராயணர் தியாதாஎன்று படிக்கப்பட்டமைகொண்டே அவர் பாபிஎன்றும், சிவன் தியேயர் என்று படிக்கப்பட்டமைகொண்டே அந்தப்பாபத்தை அவர் போக்கடிக்கிறவரென்றுஞ் சுருதிவிளக்கினமையால், இத்தகையசுருதி சிவனைப் போக்கடிக்கக்கூடாதபாவத்தையுடையவர் என்றுகூறினதாக ஸந்தோஷித்தது "விச்வாதிகோருத்ரோ என்னுஞ் சுருதியைநாடாத விவேகஹீனருக்கே சிறக்கும்." இவர்பிறந்தசிவன்வேறு பிறவாதசிவன்வேறு எனச் சைவர்கள்ஒப்பியதாகத் தப்புக்கொட்டுகிறான்றே? திரிமூர்த்திகளில்ஒருசிவனும், அவர்களில்வேறாகிய வொருசிவனுமிருப்பதாக யாம் ஒப்பியது ஸத்தியமே. இவருள் மூவரிலடங்கயசிவன் பசுவும், அவர்களைக்கடந்தசிவன் பதியுமாம். ஓர்சிவனே "புல்லாகிப்பூடாய்ப் புழுவாய்மரமாகி"என்றபடி எல்லாப்பிறவிகளிலு முழன்ற

பின்னர், பிரமனுய்-விஷ்ணுவாய்-உருத்திரனுய்வதிந்து அப்படியே சிவன்றிருவடியிற்சேரும். உருத்திரனுனபிறகுஜநநமரணப்பிரஸங்க மதனிடத்திற்கிடையாது. விஷ்ணுஜந்மம்வரையிலுமே ஜநநமரண ப்ரஸங்கம். ஆகையால், யாமொப்பிய இரண்டுசிவமூர்த்திகளுக் கும் ஜநநமரணங்கள் எமது ஸித்தாந்தத்தில் கேட்கப்படவில்லையெ ன்பதே ஸித்தம். இவர் கண்ணன் இச்சையால் வடிவெடுக்கின்றூர் என்பதற்குப் பகவத்கீதையை ஸாக்ஷிதேடினர். பகவத்கீதைகூஸோ ஹம்பாவனையாற் சொன்னதாகையால், அதிற்போந்த தத்வங்களைச் சிவமகிமையாகவே ஸாதுக்கள்கொண்டிடுவர். இதனை முதற்பாகத் தில் விரித்திருக்கின்றூர் எமதுநண்பர். ஆகையால், விஷ்ணுவினது மகிமையாக அதுசிறந்திடமாட்டாது. இப்படிநமதன்பர்தேடிய ஒவ் வொன்றும் சிதைவுண்டுபோயினமையால், இதனை இம்மட்டினி றுத்தி அவரது ஏனையாபசங்களையும் எடுத்துக்காட்டுவாம்.

இப்பேய்த்தாசர் "சிலவுபநிஷத்துக்களில் காரணம் சிவசம்பு ஈசாநாதிநாமங்களாலே சொல்லப்பட்டிருந்தாலும் அவைகள் நாராய ணபரங்களென்று பசுவதிகரணநியாயத்தாலே முன்னமேசொல்லி ருக்கின்றேம்" என்று கௌரவமாகப் பிரஸ்தாபித்துக்கொண்டார். இவரெடுத்துக்கொண்ட பசுவதிகரணநியாயம் நீச்சதெய்வமாகிய நாராயணனைப்பிரதிபாதிக்கும் உபநிஷத்துக்களின்மாத்திரம் இவரு க்கு உபகாரமேயன்றி இதரதேவதாபரங்களான வுபநிஷத்துக்க ளிற் பிரயோசனப்படாது. இதனை எங்களதுமுதற்பாகத்தில் இனி துகாணலாம். ஒருவனுடைய தோட்டத்தில் மற்றொருவன் கொ ள்ளையடிக்கப்புகுந்தால்சொந்தக்காரன்பார்த்துவிட்டுச் சும்மாவிருப் பனே? காலையொடித்து இழுத்துவேலிக்கப்புறமன்றே எறிந்துவிடு வான்? இனி நமதன்பரெழுந்துதண்டுன்றிக்கொண்டுநடந்து வெளிப் புறப்படுவதுங் கஷ்டந்தான். தமது தெய்வத்தைக் கௌரவித்துப் பேசுங் கம்பீரமானசுருதிகள் கிட்டாமையால், அயலாரதுசொத் துக்களையெல்லாம் அபகரிக்கப்பார்க்கின்றூர்.

எங்ஙனமெனின், சுருதியில்

"சிவஏகோத்யேய:"
"ஸஏகோருத்ரோத்யேய:"
"காரணந்துத்யேயச்சம்பு:"
"த்யாயீதேசாநம்"
"சிவஏவஸதாத்யேய:"

என்னும் வசனங்கள் சிவனைத் தியேயமென்றுவிளக்கின. இ வைகளைப் பார்த்துங்கேட்டும் வயிறெரிந்து இவையாவும் நாராயண

பரமென்று நாணின்றிநவில்கின்றார். இவற்றை ஏகவின்பரமாகச் சாதிப்பவனுக்கு எவ்வளவுஆதரவுண்டோ, அவ்வளவுஆதரவு நமதன்பருக்குமுண்டென்பதை யாம் மறுக்கவரவில்லை. இவ்வசனங்களே, நாராயணருக்குரியனவாயின், இவர் நாராயணர் நியேயமொன்பதைச் சாதிக்கிறேன் எனப் பிரதிஜ்ஞைசெய்துகொண்டு வேறு சிலவசனங்களையெழுதிக்காட்டிக் குழம்பவேண்டிய அவசியமில்லை. அவ்வசனங்களேனும் இவருக்கு உபகாரத்தைச்செய்தனவோவெனின், அவை இவரை நட்டாற்றிலேயேவிட்டன. எங்ஙனமெனின், இவர் "பிரஹ்மவிதாப்நோதிபரம், ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்மா" என்னுஞ்சுருதியைக்காட்டி, இதில் அநந்தம் என்னும்பதமிருக்கையால், இவ்வநந்தபதம் ஸ்ரீகாந்தனையேவிளக்கியது என்றார். நாராயணருக்கு அநந்தன் என்றுபேரேயன்றி அநந்தம்என்றுபேரில்லை. அவ்வநந்தன் என்னும்பெயர் நாராயணருக்குமாத்திரமே யன்றிச் சேஷனுக்கும்பெயர். இந்தவியவஸ்தையால், அநந்தம் என்னும்பெயர் நாராயணருக்குச் சிறந்திலது. அநந்தன்என்னும்பெயரும் விபசரித்துவிட்டது. இவர்நாராயணபரமாகத்துணிந்த அநந்தபதத்தைத் நியேயசப்தம் தொடர்ந்ததுமில்லை. இனிநியேயத்வத்திற்காதாரமாக அந்தச்சுருதியிலுள்ள பிரயோகம "பிரஹ்மவித்" என்பதே. இந்தப்பிரஹ்மசப்தத்தையே நியேயசப்தம் தொடர்ந்திருக்கின்றது. பஞ்சப்பிரஹ்மோபநிஷத்தில் "அவஸ்தாத்ரயாதீதம்-தூரியம்ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம், ப்ரஹ்மவிஷ்ணவாதிபிஸ்ஸேவ்யம்" என்னும் பகுதியால் சிவபெருமான் பிரஹ்மம் என்னும் பெயருடையவர், பிரஹ்மவிஷ்ணுக்களால் ஸேவிக்கப்படுவர் என்று வியக்தமாகியது. இதில், சிவன்பிரஹ்மமும், விஷ்ணு பிரஹ்மோபாஸகருமாதல் சிறந்தது. இவ்வளவேயன்றி விஷ்ணுவேபிரஹ்மமென்று ஏற்படவில்லை. இதனால், பூர்வபட்சியார் தேடிக்கொண்ட "பிரஹ்மவிதாப்நோதிபரம்" என்பது நமதன்பரை நட்டாற்றில்விட்டதுபோல நாராயணரையும் நடுக்கடலிற்றள்ளியதென்க. அதனைத்தொடர்ந்திலங்கிய "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்மா" என்பதும் நாராயணரைக் கீழேதள்ளிச் சிவனுருக்கே முடிசாய்த்தது. "ப்ரஹ்மவிதாப்நோதிபரம்"என்னுஞ் சுருதியைப்போல "ஈசம்ஜ்ஞாத்வாஅம்ருதாபவந்தி" என்னுஞ்சுருதியும் சிவனாரது நியேயநிலையை இனிதுவிளக்கியது. இன்னும் இத்தகைய புலஸஹேதுக்களாலும், பிரஹ்மசப்தம்பொதுஎன்று நமதன்பர் பிரஸ்தாபித்திருக்கின்றமையாலும், அந்தப்பிரஹ்மபதம் நாராயணரையே தொடருமென்று அவர்தேடிய பசுவதிகாரணநியாயம் பல்லையிளித்துக்கொண்டமையாலும், நாராயணரைத் தியர்தா·என்

றேசுருதி கோஷிக்கின்றமையாலும், அந்த நாராயணர் தியேயராதல் அஸாமஞ்சஸமென்க.

இனி, நமதன்பர் "வேதாஹமேதம்புருஷம்மஹாந்தம்" என் கிறசுருதியும் புருஷபதவாச்யனுன நாராயணரையே'பிரதிபாதிக்கிற தென்று ஸங்கோஷித்து, நாராயணரைத் தியேயரென்று சாதித்தார்.

"தமேகம்புருஷம்ருத்ரம்"
"புருஷோவைருத்ர:"
"புருஷம்க்ருஷ்ணபிங்களம்"
"புராதனோஹம்புருஷோஹமீச:"
"சிவ:புருஷஈசானோ"
"தத்புருஷாயவித்மஹே"

என்று பலசுருதிகள் புருஷவாசகம் ருத்ரபரமாகக்கோஷிக் கின்றன. இவ்வுண்மையுணர்ந்தவர்கள் நாராயணரைப் புருஷரெ னவாவது, தியேயரெனவாவது எங்ஙனே ஒப்புவார்கள்? கீதையில் "உத்தம:புருஷஸ்த்வந்ய:" எனவும், "தமேவசாத்யம் புருஷம்ப்ர பத்யே" எனவுங் கண்ணன் சிவனேபுருஷன் என்று விளக்கியிருக்கி ன்றனர். இவைகளுக்கு விஷ்ணுபரமாக அபார்த்தஞ்செய்தல் சுரு திவிருத்தமாகமுடியும். இவைகளைமறைத்து,"ப்ரக்ருதி: பரமோவி ஷ்ணு:" எனவும், "அவ்யக்தரூபஞ்ச ததாசவிஷ்ணும்" "எனவும் பிரதிபாதிக்கப்பட்ட பிரகிருதிரூபிணியாகிய விஷ்ணுவென்னுநாரி யை நமதன்பர் புருஷரெனக்கொண்டாடியது அவிவேகமேயாம். இதற்குமேல், "த்யேயஸ்ஸதாஸவித்ருமண்டலமத்யவர்த்தி - நாரா யணஸ்ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:" என்னும் ஓர்வசனத்தையுத கரித்து, அதில் நாராயணர் தியேயராகப் படிக்கப்பட்டதாக ஸங் தோஷித்தார். இது யோகித்யேயமாகிய முமுக்ஷூபாஸ்யத் வத்தை விளக்கப்போந்ததன்று. சூரியமண்டலத்தில் அந்தராத் மாவாக நாராயணர்வர்த்திக்கின்றார் என்றுபசரித்தது. இதனை உபசாரமென்றதென்னையெனின், சுருதியில் "தத்ஸவித்ருவரேண் யம் பர்க்கோதேவஸ்யதீமஹீ" என்றுகூறி, "ஏஷருத்ரபர்க்காக்யோ ப்ரஹ்மவாதினோவதந்தி" என்று பர்க்கனுகிய சிவனே ஆதித்யாந் தராத்மாவென்று விசதப்படுத்தியிருக்கின்றது. இந்தச்சுருதிகளு க்குமுன்னர் நமதன்பர்காட்டிய ஸாமாந்யவசனம் ஜீவிப்பதெங்ங னம்? அந்தவசனமும் சூக்ஷமப்பார்வையில் சிவபரமாகவே வெளி ப்படும். எங்ஙனமெனின், அதில், "ஹிரண்மயவப்பு:" என்று பெ றப்பட்டிருக்கின்றது. நாராயணர் இரண்மயரோயன்றி இரண்மய

ரன்று. இருண்மயராகிய நாராயணனை இரண்மயனென்று நமதன்பர் சாதிப்பதெங்ஙனம்? சுருதியில் "யஏஷோந்தராதித்யேஹிரண்மய:" எனவும், "ஏஷபூதாநாமதிபதி:" எனவும் போந்தவசனங்களால் ஆதித்யாந்தராத்மா ஹிரண்மயனென்றும், பூதாதிபதியென்றும் வெளிப்படுகின்றது. ஹிரண்மயத்வம் சிருனுக்கேயுரியதென்பதை "நமோஹிரண்யபாஹவே-ஹிரண்யவர்ணாய-ஹிரண்யரூபாய-ஹிரண்யபதயேம்பிகாபதயே-உமாபதயே-பசுபதயே - நமோநம:" என்னுஞ்சுருதி பிரஸித்தப்படுத்தியது. பூதபதித்வமும் அவருக்கேயுரியதென்பதை "ஈச்வரஸ்ஸர்வவித்யாநாம்-ஈச்வரஸ்ஸர்வபூதாநாம்" என்னுஞ்சுருதி பிரகாசப்படுத்தியது. இவ்வுண்மைகளால், நமதுபண்டித ருதஹரித்த ஸாமாந்யவசனம் விஷ்ணுவை ஆதித்யாந்தராத்மா என்றுசாதிக்கும் வலியில்லாதடங்கியது. அன்றியும், சினது அஷ்டதநுக்களில் சூரியனாகிறதநுவில் "ஸூர்யஸ்யோக்ர:" என்றசுருதியானது அச்சிவபரஞ்சுடர் உக்ரநாமமைதன்யமாய்விளங்குகிறது என்று விசதப்படுத்தியது. இத்யாதி பிரபலஹேதுக்களால் நாராயணர் ஆதித்யாந்தராத்மாவாயினதும், தியேயராயினதும் நிரஸ்தம். நமது ஐயங்கார் இவ்வளவிலமையாமல் "தஸ்யயதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்கிறசுருதியானது தியேயன் செந்தாமரைக்கண்ணனேயொழிய விரூபாக்ஷனல்லவென்று தெரிவிக்கின்றது என வோர்பெரும்புளுகு சாதித்தார். இந்தவசனத்தில் தியேயர் நாராயணரெனபதற்கும், விரூபாக்ஷர் தியேயரன்றென்பதற்கும் ஆதாரமாய்நின்ற பிரயோகங்கள் யாவை? நாராயணோபநிஷத்திலுபக்ரமவாக்கியத்தில் ஈசபதமும், உபஸம்ஹாரவாக்கியத்தில் ருத்ரபதமும், தந்மத்யகதவாக்கியங்களில் விரூபாக்ஷபதமும் போதருகின்றன. நாராயணரை உபஸகராகநிறுத்திய இவ்வுபநிஷத்தில் உபாஸ்யரது நாமங்களிலொன்றாக விரூபாக்ஷநாமும் படிக்கப்பட்டிருப்பதையும், "தத்ரவிரூபாக்ஷோஸி" என்று ஸாமவேதமானது ஸ்மரிக்கின்றதையும் நமதன்பர்நாடாமல் புண்டரீகாக்ஷனைப்புகழ்ந்து விரூபாக்ஷனைவெறுத்தது அவரதுவினையேயாம். இந்தவிசாரத்தால் நாராயணருக்குத் தியேயத்வம் சாதிக்கலாமென்று ஆசைகொண்டு அலறியழுத ஐயங்காரதுவாதம் அடியோடேசாய்ந்தது. விரிக்கிற்பெருகும். இங்ஙனநிற்க. சுருதியில்,

"ஏகஏவருத்ரோ நத்விதீயாயதஸ்தே"
"ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்மா"
"ஈசாநஸ்ஸர்வஏகோருத்ர:"
"ஸசிவஏகோதேவ:"

"யஏகோருத்ரஉச்யதே"
"தமேகம்புருஷம்ருத்ரம்"
"சிவஏவகேவல:"
"த்யாவாபூமீஜநயந்தேவஏக:"
"ய:காரணாநிநிகிலாநிகலாஸ்ய யுக்தார்யநிதிஷ்டத்யே
[க:"

என்னும் வசனங்கள் சிவனாரது ஏகத்வநிலையை யெடுத்தி சைத்தன. அன்றியும்,

"ஸர்வோஹ்யேஷருத்ர:"
"ஸர்வம்கல்விதம்ப்ரஹ்மா"

என்னும் வசனங்கள் சிவனாரது பூரணத்வநிலையைப் புகழ்ந் தோதின. இன்னும் பலவுள.

இவ்வகைகளையுமன்றோ நமது ஐயங்கார் கன்னம்வைத்து அப கரிக்க ஆசைப்படுகிறார். இவைகள் நாராயணரது பாரம்யமாக யா ண்டும் உபகாரப்படமாட்டா. சிவனாரது ரூடநாமங்களை இவர்திருடி நாராயணபரமாகக்கொள்வது அழகுமாப்பிள்ளைகளையெல்லாம் என் மாப்பிள்ளைகளென்று கூறிமகிழும் அவிசாரிகதையோடுதானே சே ரும். இதுநிற்க.

இம்மஹாகவி இனித் துரீயசிவனில்லையெனச் சாதிக்கிறே னென்று எழுந்து இடறிவீழ்ந்தார். அதற்கு ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதரவர்கள் பதினேழுவசனங்களைக்கொண்டு துரீயசிவனிரு ப்பைப் பிரஸ்தாபித்தாரெனவும், அவற்றுட்சிலவசனங்கள் கற்பித ங்களெனவும், சிலவசனங்கள் தாமஸங்களெனவும், சிலவசனங்கள் நாராயணபரங்களெனவும், அவை சிவதுரீயத்வத்தை விளக்கும்யோ க்யதைபெறாவெனவும் பிரஸ்தாபித்து ஸந்தோஷித்ததே சான்று. இராமர் சிவபூசைசெய்தாரா? செய்யவில்லையா? என்பதையநுஸரி யாத விஷயங்களையெல்லாந் தொட்டுக்கொண்டு இவரோடுயாம் கா லப்போக்குச்செய்தல் அஸங்கதம். ஆயினும், முக்கியாம்சங்கள் சில வற்றையெடுத்துக்கொண்டு எமதுபட்சமாகிய சிவதுரீயத்வத்தை ஸ்தாபிக்கிறோம். இவர் கல்பிதம், தாமஸம் என்று கற்றுக்கொண் டவை கையிலாகாதவூட்டருக்குக் கைவந்தபழம்பாடங்களாம். இவற் றை விரிக்கிற்பெருகும். இதுநிற்க.

எமதுஞானமணியாகிய தீக்ஷிதஸ்வாமிகளுக்குமேல் கோடி சொல்லத்தக்கயோக்யதை நமதுஐயங்கார் ஆசாரியர்களெனக்கொ ண்டாடும்.பூர்வீகபாஞ்சராத்திரிகளுக்கே இழுப்பாகுமெனின், எம

துகையிலேந்திய எழுதுகோலென்னுஞ் சஸ்திரத்தாலடிபட்டுநொந்து, எழுந்துசெம்மையாகநடக்கமாட்டாதுகிடக்கு மிவர்புறப்பட்டது ஆச்சரியமென்க. தீக்ஷிதரவர்களுதகரித்த எல்லாவாக்கியங்களும் ஸப்பிரமாணமேயாம். இனி நமதன்பரதுஆபாஸத்தைக் கொஞ்சமெடுத்துக்காட்டுவாம்.

இவர் "பரதத்துவத்துக்குப் பிரமன்முதலாகிய மூன்றுசரீரங்களிலும் வேறாயுள்ள துரீயசரீரமுளதென்பதா? அல்லது மூன்று சேதனர்களிலும்வேறாய ஸர்வேசனுயிருப்பா னொருசேதனனுளனென்பதா?" என்றுதொடங்கி, "மூவர்நடுவே ரக்ஷணத்துக்காக அவதரித்தமையால் ஒருசரீரமுண்டென்றும், அதில்வேறுபட்டதாகிய நித்யமாயும், முக்தப்பிராப்யமாயுமுள்ள ஒருசரீரமுண்டென்றும் வேதப்பிரமாணங்களால் சொல்லப்பட்டிருக்கிறது" என்றுமுடித்தார். அன்றியும், "விஷ்ணுஸாத்விகாம்சமென்று சொல்லப்படுவது இராமகிருஷ்ணாதிகளைப்போலே விஷ்ணுபகவானுடைய அவதாரமென்பது எமதுபக்ஷம் எனவும், "மூவர்நடுவேபிரஸ்தாபிக்கப்படும் விஷ்ணு அவதாரவிஷ்ணு என்பதே" எனவும் பிரஸங்கித்தார். இம்மட்டோ, "விஷ்ணுவினுடைய நித்யமூர்த்தியே துரீயமென்பதும், அவருடைய அவதாரமூர்த்திகளில் முந்தினஅவதாரமாகிய விஷ்ணுவே அண்டரக்ஷகரான மூவரிலொருவரென்பதும்ஸித்தம். இந்தவிஷ்ணுவினுடைய துரீயசரீரமே துரீயமுளதெனச்சொல்லும் சுருதிஸ்மிருதியாதிகளுக்குவிஷயம்" எனவும் பெருங்கூச்சலிட்டார்.

நமதன்பரதுஸித்தாந்தம் துரீயம் என்று வேதத்திற்பெறப்படுமிடங்களில் நாலாவதுசரீரத்தையேயன்றி நாலாவது சைதந்யத்தை விளக்கமாட்டாதென வியக்தமாக்குகின்றது. பிரமன் ஒருசைதந்யமும், சிவன்ஒருசைதந்யமும், விஷ்ணு ஒருசைதந்யமுமென ஒப்பியஜயங்கார் பிரமனையுஞ்சிவனையுஞ் சீவர்களாகவும், விஷ்ணுவைப் பரமாகவும் அங்கீகரித்துக்கொண்டார். துரீயவிஷ்ணுவுக்கும், மூவரிலொருவராகிய விஷ்ணுவுக்கும் ஒரேசைதந்யமென்றுரைசெய்தார். இரண்டுசைதந்யங்கள் சீவர்க்களும், ஒருசைதந்யம் அதிஷ்டானபரமும், மற்றொருசைதந்யம் அதனமிசமுமாதல் அவர்மதம். விஷ்ணுவினது இரண்டுசரீரங்களுக்குஞ் சைதந்யமொன்றேயாகையால், மொத்தசைதந்யங்கள் மூன்றேயெனக்கொண்டு நான்கென்பதற்குச் சரீரத்தையே ஒப்படைத்து ஸந்தோஷித்தார். நாலாவது சைதந்யமில்லையென்பது அவரதுஸித்தாந்தம்.

இவர் துரீயம் சரீரமேயன்றிச் சைதந்யமன்றெனக்கூறினமையால், அத்துரீயம் ஜடமாகி அநித்யமாயழியும். ஜடவிஷ்ணுவைக்

கட்டிக்கொண்டமுவதைக்காட்டிலும் விஷ்ணுவென்னு மோர்பொருளில்லையென்பது உசிதமாம். நாலாவதுபரம் விஷ்ணுவெனச் சாதிக்கவந்து அவரை அசேதனமெனத்தூஷித்தது அவரதுவினையேயாம். ஜடமாகிய அதனிடத்துஞ் சைதந்யமுண்டேயெனின், அந்தச் சைதந்யத்தைத்தள்ளி ஜடத்தையே நாலாவதாக வொப்பினமையால், சைதன்யம்அமுக்கியமாயிற்று. சைதந்யம் முக்கியமாயின், அதனையே நாலாவதுபொருளாக அவர் ஒப்பியிருப்பார். அங்ஙனமவரொப்பாமையால் ஜடங்களாகிய தேகேந்திரியபிராணந்தக் கரணங்களுக்குப் பரமகாரணத்வங்கூறும் நாத்திகசிரோமணிகளுக்கு நம்தன்பர் நாயகமாயினர். இவர் நாலாவதுபொருளாகத்துணிந்த ஜடவிஷ்ணுவினது அவதாரமாகவே இரண்டாவதுவிஷ்ணுவையொப்பியிருக்கின்றனர். அவ்விரண்டாவது விஷ்ணுவையோ சேதனமென்றொப்புக்கொண்டனர். சேதனஸ்தானத்திற்கு இதுவே முக்கியமாயினமையால், அமுக்கியமாகிய நாலாவதுசேதனத்தினவதாரமாக இவ்விரண்டாவது சேதனத்தைக்கூறியது அஸங்கதம். அதிஷ்டாநசைதந்யம் இரண்டாவதும், அதனமிசம் நாலாவதுமாக வொப்பின் ஒருருவாறுபொருந்தும். அங்ஙனமொப்பின், இரண்டாவதுசைதந்யமுயர்ந்து, நாலாவதுசைதந்யந்தாழ்ந்து அவர் சாதிக்கவெழுந்ததுரீயத்வம் நாறிப்போகுமென்றஞ்சினார்போலும். இவர் ஒருசைதந்யமே இரண்டுவிஷ்ணுக்களிடத்திலுமொப்பிச் சைதந்யம் மூன்றேயெனச்சாதித்தார். இரண்டுவிஷ்ணுக்களுக்குஞ் சைதந்யமொன்றானபோது அவர்களுடைய ஜடங்களைமாத்திரம் இரண்டாக வொப்பியது என்னை? இவரதுஸித்தாந்தத்தால் தேகம்-தேகி என்னும் வியவஸ்தை ஏற்படுகின்றது. இதனால் தேகத்திலேநின்றுந் தேகிவேறுபட்டு, அத்தேகத்தைப்பிணமாக்குதல்கூடும். இது பதிலட்சணமாகாது. இரண்டுவிஷ்ணுகளுக்கு மிரண்டுதேகங்களென்கையில், அவ்விருதேகங்களுங் காரியப்படுதற்குக் காரணமாய்நின்றவுபாதானம் யாது? இரண்டுசரீரங்களும் ஒருபாதானத்தினின்றும் பிறந்தனவா? தனித்தனி வேறுவேறு உபாதானங்களினின்றும் பிறந்தனவா? வேறுவேறு உபாதானங்களிலிருந்துண்டாயின், இரண்டுபாதானங்களிலிருந்து இரண்டுபின்னதேகங்கள் பிறந்தனவென்னலாம். ஒரேயுபாதானத்திலிருந்து இரண்டுசரீரங்களும் பிறப்பின், அவைகளை இரண்டுசரீரங்களென்றிடல் தகாது. உபாதானம் ஒன்றாயிருப்பினுஞ் சரீரங்கள் இரண்டாகக்காரியப்பட்டமையால் இரண்டென்றதெனின், இந்தநியாயம் விஷ்ணுவினது சைதந்யப்பிரஸங்கத்திலுங்கூடும். அவற்றை அவ்வாறு ஒப்பாததென்னை? சை

தமயத்திற்கும் ஜடத்திற்கும் நியாயமொன்றாயிருத்தலே நாடாது சைதந்யத்தை ஒன்றாகவும், ஜடத்தை இரண்டாகவும் நமதன்பர் கூறியது மதியின்குறைவேயாம். ஒருபாதானத்திலிருந்து இரண்டேயன்றிப் பலசரீரங்களுண்டாகலுமாகையால், அவைகளை ஒன்றேயெனல் கூடாதெனின், இது விஷ்ணுவாகிய ஏகசைதந்யத்தைப்பற்றியதாகையால் ஒன்றென்றிடலே தகுதியாம். சீவசைதந்யங்களாயின், பலசைதந்யங்களுக்குப் பலதேகங்களையொப்பலாம். இவைகளை யோசியாமல் துரீயம் என்றதற்கு நாலாவது சைதந்யமன்று, நாலாவதுஜடம் எனறு பிரஸங்கித்தது அவிவேகமேயாம். இனி விஷ்ணுவினது சரீரங்களுக்குக் காரணமாய்நின்ற வுபாதானம் அவ்விஷ்ணுவுக்குப் பின்னமா? அபின்னமா? அபின்னமென்பாராயின், சைதந்யம்ஒன்று, ஜடம் இரண்டு என்னுமவரதுபிரஸங்கங்கெடும். பின்னமென்பாராயின், சைதந்யத்தைநோக்க அதற்கு யோக்யதைகுறையும். அதனைச்சேர்தலால் சைதந்யத்திற்கும் யோக்யதைகுறையும். துரீயசரீரம் நித்தியமாகையால், அதற்கு உபாதானம்வேண்டாமெனின், விஷ்ணுவினது மற்றொருசரீரத்திற்கு அநித்தியப்பிரஸங்கமும், துரீயசரீரமும், சைதந்யமும் பின்னமா? அபின்னமா? என்னுங்கடாக்களும் நிகழும். அவைகளுக்கு முற்படியே விடைகளுண்டாயின், அவ்விடைகளும் எமது சஸ்திரத்தாலடிபட்டுப்போம். முக்கியசைதன்யத்திற்கு அசாசுவிதசரீரமும், அமுக்கியசைதந்யத்திற்குச் சாசுவிதசரீரமுங்கூறியதோஷமும் பிராப்தமாகும். இத்யாதி தோஷபிராப்தங்களுக்கு இடமுண்டாக நமதன்பரொப்பிய விஷ்ணுவினதுஜடதுரீயத்தை யாம்வெட்டியெறிந்தோமாகையால் ஸாதுக்கள் இனிப் பிரமியாதொழிக

இனி, ஐயங்காரது ஜடஸித்தாந்தத்திற்கு யாதேனுஞ் சுருதிப்பிரமாணமுண்டாவெனச் சற்றுயோசிப்பாம். சுருதியில் "இவமத்வைதம்சாந்தம் சதுர்த்தம்மந்யந்தே" எனவும், "ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ராஸ்ஸம்ப்ரஸூயந்தே நகாரணம்,காரணந்துத்யேச்சம்பு:" எனவும் பெறப்படுகின்றன. இவை நாலாவதுபொருள் சிவம்-சம்பு என்றே தெரிவித்தன. அவ்வளவேயன்றி நாராயணர்-ஜநார்த்தனர் என்றுவிளக்கில. நமதன்பர் நாலாவதுபொருளாகிய துரீயசிவத்தைப் பிரதிபாதிக்குஞ் சுருதிகளைத் தீக்ஷிதஸ்வாமிகள் உதகரித்ததற்கு அவைகளவ்வாறு பொருடரவில்லையென்று புலம்பினரேயன்றித் தமதுஜடவிஷ்ணுவைத் துரீயமென்பதற்காதாரமான வோர்வாக்யசகலமாவது சுருதியிலிருந்து எடுத்துக்காட்டவில்லை. தெங்கின்பாட்டுப்பாடித் திக்விஜயஞ்செய்யப்பார்க்கிறார். மேல்யாம்காட்டியசுரு

தியில் விஷ்ணுவை நகாரணம் என்று ஓதுக்கியிருக்கின்றது. நமதன்பர் இரண்டுவிஷ்ணுக்களுக்கும் ஓரேசைதன்யமெனவும், முக்கிய சைதன்யம் இரண்டாவதுவிஷ்ணுவுக்கேயெனவும் அங்கீகரித்தமையால், நகாரணம் என்னுங்கூட்கம் விஷ்ணுவினது இரண்டுசைதன்யங்களையும் வெட்டிக்கீழேவீழ்த்தியது. ஆண்டு நகாரணம் என்றது ஜடத்தையேயென்பாராயின், அப்போது விஷ்ணுவினது ஜடமேயன்றிப் பிரஹ்மருத்ரர்களது ஜடமும் அதற்குப்பொருளாகும். அன்றியும், நகாரணம் என்றுகழிக்கும் ஜடத்திலுழலுஞ் சைதன்யமும் நகாரணம் என்று கழிக்கப்படும். விஷ்ணுவினது ஜடத்தைக்கழித்து, அவரதுசைதன்யத்தைத்தழுவின் அப்படியே ஏனையிருவரது ஜடங்களையுங்கழித்து அவர்களதுசைதன்யங்களையுந்தழுவுவது ஆவசியகமாகும். இதனால், விஷ்ணுவுக்குத் தேர்ந்தமகிமை ஒன்றுங்காணேம். விஷ்ணுவினது துரீயசரீரம் சிறந்திடுமெனின், அவரது இரண்டுசரீரங்களில் ஒன்றுகிராஹ்யமும், மற்றொன்று அக்ராஹ்யமுமாதல் அஸங்கதம். ஒன்றுகிராஹ்யமெனின், மற்றொன்றுங் கிராஹ்யமாம். ஒன்று அக்ராஹ்யமெனின், மற்றொன்றும் அக்ராஹ்யமாம். ஈண்டு அக்ராஹ்யமென்பதற்கே நமதன்பருக்குச் சுருதிஉபகாரமாயினமையால், அவர்தேடிய இரண்டுஜடங்களுமே அஸங்கதமாயின. இந்த வியவஸ்தையால், நகாரணம் என்று வீசியவெட்டு விஷ்ணுவினது சைதன்யத்திற்கும், அவரது ஜடங்களுக்கும்பட்டு ஊறுபடுத்தியது. நமதுஐயங்காரது ஜடதுரீயஸித்தாந்தம் இப்படியலக்கண்படுவதால் இனியேனும்அதனைஅவர் திலதர்ப்பணம் பண்ணிவிடக்கடவர். இதுகாறும் யாம்செய்துமுடித்த விசாரத்தால் விஷ்ணுவினதுசைதன்யத்திற்காவது, அவரதுஜடத்திற்காவது துரீயத்வத்தை வேதம்ஒப்பினதாக ஏற்படவில்லை. பிரஹ்மவிஷ்ணுருத்ரர்களைப் பிரஸ்தாபித்து அவர்களுக்குவேறாகச் சம்புவை நாலாவதுபொருளாக அதர்வசிகை ஓதியதுபோல் பிரஹ்மவிஷ்ணுருத்ரர்களைப் பிரஸ்தாபித்து அவர்களுக்குவேறாக நாராயணனைநாலாவதுபொருளாகஓர்சுருதி எழுந்து சாதிப்பின், சிறுத்துக்காட்டாரதுமதம் சிறந்திடும். அஃதின்மையால், சுருதிஸித்தமாகிய சிவமே துரீயவஸ்துவென்னும் சைவபட்சமே ஸித்தாந்தமாயிற்று. நாலாவதுபொருள் சிவம்-சம்பு-சங்கரன் என்னுஞ் சப்தங்களால் வேதத்திற்படிக்கப்பட்டமையாலும், சிவனை நாலாவதுபொருளென்றுகூறியவாறு அவரில்வேறாகிய நாராயணனையும் நாலாவதுபொருளென்றுகூறுவது விரோதமாகையாலும், அந்தநாராயணனை நாலாவதுபொருளென்று சாதிப்பது முடியாதகாரியமேயாம். நமதன்பர்சிவனுக்குமேலிட்ட துரீயத்வம் நாராயணரு

க்குச் சாதிக்கவாசைப்படின், ஐந்தாவதுபொருள் நாராயணர் என்று கூறுமோர்சுருதியைத் தேடியெடுத்துக்கொண்டு சபையின்முந்தவேண்டியது. விஷ்ணுவினதுஜடந்தான் தூரியமென்பதற்கும் ஓராதரவு கொண்டுவரவேண்டியது. இல்லையேல், வைவஸ்வதன்மூலையை வந்தித்து, வாய்மாண்டுகிடக்கவேண்டியது. இது நிற்க.

நமதுஐயங்கார்“அவருடைய அவதாரமூர்த்திகளில் முந்தின அவதாரமாகிய விஷ்ணுவே அண்டரக்ஷகரான மூவரிலொருவர்” எனப் பிரஸங்கித்தாரன்றே? அவதாரவிஷ்ணு அண்டரக்ஷகரானால் அநாதிவிஷ்ணு எதற்குரக்ஷகர்? அவதாரவிஷ்ணுவுக்கு இடம்யாது? அநாதிவிஷ்ணுவுக்கு இடம்யாது?வைகுண்டம் என்னும் பரமபதவிருக்கை யாருக்குரியது?ஜடவிஷ்ணுவுக்குஜடலட்சுமியொருத்தியுண்டாகி அதுஒண்டிஜடமா? இவைகளைப்பிரமாணபுரஸ்ஸரமாகவிளக்குவது நமதன்பரதுகடமையன்றே? இந்த ஜடவிஷ்ணுவினது முதலவதாரம் அண்டரக்ஷகவிஷ்ணுவானால், இராமகிருஷ்ணாதியவதாரங்கள் இரண்டாவது மூன்றாவது என வரிசையாக எண்ணிக்கொள்ளவேண்டியதே. அப்படி எண்ணிக்கொண்டால், விஷ்ணுவினது அவதாரம் பத்து என்பது அழிந்து பதினொன்று என ஆகும். பிருகுவினதுசாபந்தான் பத்தவதாரங்களுக்குக் காரணம். எஞ்சிய அவதாரத்திற்கு யாருடையசாபம் காரணம் ? இவ்வவதாரங்களில் முதல்விஷ்ணுவுக்குப் பிறப்பிடம்யாது? வாமனன் அதிதிவயிற்றிலும், இராமன் கோசலைவயிற்றிலும், கிருஷ்ணன் தேவகிவயிற்றிலும் பிறந்தமையால், முதல்விஷ்ணுவுக்கும் பிறப்பிடம்விசாரித்தோம். இவைகளுக்குக் கதிகூறாமல் கைகொண்டமட்டும் எழுதி ஸந்தோஷித்தது அவிவேகமேயாம்.

இவர் இம்மட்டேயமையாமல்“விஷ்ணுஸாத்விகாமிசம்என்று சொல்லப்படுவது இராமகிருஷ்ணாதிகளைப்போலே விஷ்ணுபகவானுடைய அவதாரம்என்பது எமதுபட்சம்” எனவொன்று பிரஸ்தாபித்தாரன்றே? இந்தஅமிசப்பிரஸங்கம் நமதன்பருக்கு * மைத்திரேயோபநிஷத்திற் கிடைத்ததாம். எங்ஙனமெனின், அவ்வுபநிஷத்தில் பிரஹ்மவிஷ்ணுருத்ரர்களாகிய மூவரும் பிரஹ்மத்தினுடைய தநுக்கள் என்று சொல்லப்படுகின்றனர் எனவும், தநு என்பதற்கு அமிசமென்றே பொருள்கூறவேண்டியதெனவும் நமதன்பர் வியாக்யானஞ்செய்துகொண்டதனாலறிக. இது எம்மட்டினிலைபெறுமென்பதைச் சற்றுயோசிப்பாம். அவ்வுபநிஷத்தில் மூவரையுந் தநுக்

* இது மைத்ராயண்யுபநிஷத்து எனவறிக.

கள் என்று பிரஸ்தாபித்திருப்பதாக நமதன்பரே ஒப்புக்கொண்டார். இதற்கு இவர்செய்யுமவியாக்யானம் தலைதூக்குவதன்முன்னர் யாம் விசும்வெட்டுக்கு அதுதப்புமா என்பதை விவேகிகள் சற்றுயோசிக்கவேண்டியது. இதில மூவரையுந்தநுக்கள் என்றுகூறினமையால, இவற்றிற்குச் சைதன்யமே இனிவேண்டற்பாலதாயிற்று. அதுவே துரீயஸ்தானத்தினிற்பதொன்று. இதனுல், துரீயம பிரஹ்மமாகிய சைதந்யமேயாம். தநுக்கள் என்னும் பிரயோகமிருக்கையால், பிரஹ்மதனைநோக்கத் திரிமூர்த்திகளும் ஸ்வதந்த்ரஹீனரென்று ஏற்படுகின்றது. இதனைவிளக்குங்கால் அவர்கள் பசுக்களென்பதேயாம். ஓர்தேகமும் அதில்வசிக்குந்தேகியும் பின்னப்பொருள்களாயிடுதல் போல் திரிமூர்த்திகளும், பிரஹ்மமும் பின்னப்பொருள்களாயின. இவ்வுண்மைகளைவிளக்கவே அவ்வுபநிஷத்து மூவரையும் பிரஹ்மத்தினது தநுக்களென்று பிரஸ்தாபித்தது. இவ்வுண்மையுணர்ந்தபேர் நமதன்பர்தேடிய ஜடவிஷ்ணுவை அவரெடுத்துக்கொண்டவுபநிஷத்துக் கீழேதள்ளிக் கழுத்தையறுத்துவிட்டதாக ஸந்தோஷியாமற்போகார். தநுக்களாகிய ஜடங்களையுடையபொருள் அவற்றைப் போல் ஜடமாயிருத்தல்கூடாமையால், நமதன்பர்தேடிய துரீய ஜடம் நாசத்தையடைந்தது.

இவ்வஸங்காத்மவாதி தனது ஜடதுரீயத்தை மேல்அமிசப்பிரஸங்கத்தால் விரித்தார். அமிசம் அமிசியில்வேருகாது அபேதமாகுமென்ப[illegible]வர்கருதது. இதனைமேற்கொண்டு அமிசி ஜடதுரீயமும், அமிசம் ஸாத்விகவிஷ்ணுவுமாக அவர் சாதிக்கப்புகுந்தார். பிரஹ்மத்தினது ஸாத்விகாமிசம் அந்தப்பிரஹ்மத்திற்கு அபேதமாயிடுதல்போல் அதனது ராஜஸதாமஸாமிசங்களும் அதற்கபேதமாயிடுதல் ஸித்தம். அவ்விருஅமிசங்களும் பிரஹ்மருத்ரர்களேயாம். இதனுல், விஷ்ணுவும்-பிரமனும்-உருத்திரனுமாகிய மூவரும் பிரஹ்மத்திற்கு மூன்றுஅமிசங்களென்று ஏற்படுகின்றனர். இப்படியேற்படுகையால், பிரஹ்மத்திற்கு விஷ்ணுவேஅமிசம் என்பதறுந்து வீழ்ந்[illegible]த்தோஷம் தமதுதலைமேல் வந்தேறிக்கொண்டமையால், அதனை நமதன்பர் இறக்கப்பார்க்கிறுர். அதனை இறக்கிக்கொள்ள இவரால்முடியாது. ஏனெனின், "அவ்வுபநிஷத்திற் படிக்கப்பட்ட பிரஹ்மருத்ரபதங்களுக்கு அந்தரியாமியாகிய நாராயணனேபொருள்" எனவும், அதிலுள்ளவிஷ்ணு "அந்தரியாமியாகிய நாராயணனுடைய அமிசம்" எனவும் இவர்பிரஸங்கித்து இறுமாந்துவிட்டார். இவர் உளறியதற்குச் சுருதிப்பிரமாணம் எங்கே? சுருதியில் மூவரையும் நகரணம் 'என்று ஓதுக்கினமையால், அந்தரியாமித்வமும்,

அமிசத்வமும்சுருதிவிருத்தமாகிய அஸம்பாவிதங்களேயாயின. இவ்வுடவிகாதம் பண்ணிக்கொள்ளாமல் எண்ணியபடிக்கெல்லாம் இவ்வெழுதிக்கொள்வது இவர்போன்ற ஏழைகளே ஒப்பத்தக்கது. நமதன்பரோ பிரமருத்ரர்களைப் பசுக்களாகக்கழித்தமையால், அவரோடு சேர்த்துக் கடையிற்படிக்கப்பட்டவிஷ்ணுவையும் பசுவென்றுகழிப்பதே விவேகிகள்ஸம்மதம். இந்தப்பசுவிஷ்ணுவை நமதன்பர்தேடிய ஜடவிஷ்ணுவினது அமிசம்என்கையால், அமிசியாகிய அந்த விஷ்ணுவும் பசுவாயிடுதலே சிறந்திடும். அன்றியும் அவ்வுபநிஷத்திற்போந்த பிரஹ்மம் ஸத்வரஜஸ்தமசுகளை ஸமஷ்டிகுணமாகவுடையதெனவுங்கொள்ளவருதலால், கேவலம் ஸாத்விககுணமுடையது என்று அவர் ஸித்தாந்தப்படுத்தும் துரீயவிஷ்ணுவை அவ்வுபநிஷத்துத் தெருவிலேபிடித்துத் தள்ளியதென்க.

இனி, பிரஹ்மோபநிஷத்தில் பிரஹ்மம் நாலுபாதமாகப் பிரகாசிக்கின்றது எனக்கூறப்படுதலும் சிவதுரீயத்தை விளக்கும். ஈண்டுப் பாதம் அல்லது அமிசம் என்றது பிரஹ்மத்தினது சக்தியென அறியவேண்டியது. பிரஹ்மாவையதிட்டித்துப் படைத்தும், விஷ்ணுவையதிட்டித்து அளித்தும், உருத்திரனையதிட்டித்து அழித்தும் அந்தப்பிரஹ்மசக்தி வர்த்தித்தல் சுருதிநிஷ்டமாகையால், திரிமூர்த்திகளையும் அமிசம் என்றது இனைத்தென்றுவெளிப்பட்டது. ஒருவன் மற்றொருவனைக் கையாலடிக்கிறான், கையிலிருக்குங்கோலானுமடிக்கிறான். அடிக்கிறவனுக்கு அவனதுகையும், கோலுஞ் சக்திகளாயின. கை அபின்னசக்தியும், கோல் பின்னசக்தியுமாம். அடிக்கிறவனுக்கு அவனதுகை தாதாத்மியஸம்பந்தமும், கோல் பரிக்ரஹஸம்பந்தமுமாம். கையை அவனதுசக்தியென்றவிடத்தும், அந்தக் கையிலுள்ள கோலை அவனதுசக்தியென்றவிடத்தும், இரண்டையும் அவனதுசக்திகளென்றவிடத்தும் ஒருவிரோதமு முண்டாகாதவாறு பிரஹ்மத்தினது அபின்னசக்தியையும், அதனதுபின்னசக்திகளாகுந் திரிமூர்த்திகளாகிய பசுக்களையும் அந்தப்பிரஹ்மத்தினது அமிசங்களென்று கூறுவது நிர்விவாதஙிரஸ்தமென்க. இவ்வுண்மைகளைத் தேராது (நகாரணம்) என்று வேதம்ஒதுக்கிய பிரஹ்மவிஷ்ணுருத்தரர்களையாவது, அவருள் ஒருவராகிய விஷ்ணுவையாவது பிரஹ்மத்தினது அபின்னாமிசமென வாதிப்பது அவைதிகர்களுக்கே அடுக்கும். இவற்றைத் தெளிந்திடாத நமதன்பர் "பிரஹ்மோபநிஷத்தில் துரீய சிவனுள்னென்பதற்காதாரமாக ஒருஎழுத்தைக்காணேம்" என்று கூச்சலிட்டார். துரீயசிவம் இதிற்பெறப்படவில்லையென்று பிரஸ்தாபித்த நமதுநண்பர் "பிரஹ்மம், நாலுஅமிசங்களையுடையதென்

தீக்ஷிதர்சொல்லுகின்றார்.இது அஸங்கதம்") என்றுபேய்க்கூச்சலிட்டார். இவருக்குப் பிராணாதாரமாகத் தேடிக்கொண்ட பசுவதிகரண ந்யாயத்திற்குப் புல்லுடைந்துபோனசங்கதியை யாம் பலருக்குந் தெரிவித்துவிட்டோமாகையால்; இவர் இனிஅதனைத்தொடும்போதெல்லாம் பண்டிதர்கள் பரிகாசமேசெய்வார்கள். அவர்கொண்ட கருத்தின்படிக் கைவல்யத்திற்போந்த பிரஹ்ம-புருஷ சப்தங்கள் நாராயணனைவிளக்கமாட்டா. பிரஹ்மமும்,புருஷனுஞ்சிவபரஞ்சுடரேயாம். இவரே "உமாஸஹாயம்" இத்யாதிபிரயோகங்களால் பிரதிபாதிக்கப்பட்ட பரம்பொருளாம். இதிலுள்ள உமாஸஹாயம்-பரமேச்வரம்-ப்ரபும்-த்ரிலோசநம் - நீலகண்டம் - ப்ரசாந்தம் என்னும் பதங்கள் அந்தரியாமியான நாராயணபரமாகவே நிற்கும் எனவுங்கொஞ்சி நமதன்பர் மகிழ்ந்திருக்கிறார். ஓர்விடபுருஷனைப்பார்த்து இவரில் எனதுபர்த்தா அந்தரியாமியாயிருக்கிறானென்று அவனைக்கூடிமுயங்கத்துணியும்விபசாரியினதுசெய்கையே ஈண்டமைவுடைத்து. இவ்வசனத்திற்பெறப்பட்ட பிரஹ்மயோநிம் - பூதயோநிம் என்ற பிரயோகங்களுக்கு அவர் ஏதேதோ சூளறிவழிகின்றார். அவைகளைப் பிரஸ்தாபித்து வீண்காலக்ஷேபஞ்செய்வது அவசியமன்றெனவிடுத்தாம். பண்டிதர்கள் அவைகளைப்பார்த்தால் அவரதுமதியைப் பாலிசர்மதியினும் அல்பமாகமதித்துப்பாற்றுவர்.பிரஹ்மாவுக்குப் பிறப்பிடமாயுள்ளவர்,பூதங்களுக்குப் பிறப்பிடமாயுள்ளவர் என்பதே அவைகளினுண்மைக்கருத்தாம். பிரஹ்மத்தைப் பிறப்பிடமாகவுடையவர் என்னும் அவர்கூற்றைத்தழுவின், "அசிந்த்யம்-அவ்யக்தம் - அநந்தரூபம்-சிவம்-ப்ரசாந்தம்-அம்ருதம் - ப்ரஹ்மயோநிம்" என்னுஞ் சப்தபங்திகளுக்கு எவ்வாறுபொருள்கொள்வது? இவற்றை நேரோபார்க்கும் ஸாதுக்களுக்கு நமதன்பரது வியாக்யானம் அமேத்யஸ்பர்சம்போலக் குலைநடுங்கப்பண்ணுமெழுன்க. பிரஹ்மவிஷ்ணுருத்ரர்கள் சிவனாலுண்டுபண்ணப்பட்டார்கள் என்று அதர்வசிகை கூறுவதால், பிரஹ்மாவுக்குப் பிறப்பிடமாயுள்ளவர் சிவபரஞ்சுடரொன்பது நிலைபெறும். "ஈச்வரஸ்ஸர்வபூதாநாம்" என்றதேத்யாதி மந்திரங்களால் "பூதயோநிம்" என்றதும் நிலைக்கும்: கேவலம் சிவபரத்வபோதகமாகிய இவ்வுபநிஷத்தில் வந்துவீழ்ந்து தமக்கும் பிறர்க்குமுபயோகப்படாமற்போமாறு கலக்கியுழக்குமிவரை யாமென்னென்று கூறுவோம்? அம்மம்ம! இவர்சிந்தை பாவக்களஞ்சியமோ? பாமரக்கொட்டகமோ? பழவினைப்பொக்கிஷமோ? கொடிது! கொடிது!! இந்தச்சுருதியில் "ஸப்ரஹ்மஸசிவ:"எனவும், "ஸஏவவிஷ்ணுஸ்ஸப்ராண:"எனவும் படிக்கப்படுதலால் 'திரிமூர்த்திகளும் பர

சிவவிபூதிகளாயினர். இதனால், சிவனாரது துரீயத்வம் வியக்தமாயி யது. அன்றியும், "த்ரிஷு-தாமஸு-யத்போஜ்யம்-போக்தாபோகச் சயத்பவேத், தேப்யோவிலக்ஷணஸ்ஸாக்ஷீ - சின்மாத்ரோஹம்ஸதா சிவ:" என்னும்வசனத்தில் ஜாக்ரமுதலிய மூன்றுஸ்தானங்களிலும் புஜிக்கத்தக்கதும், புஜிக்கிறவனும், போகமுமாகிய பொருள்களுக் குவிலட்சணமும், ஸாட்சியும், சின்மாத்ரமுமாயுள்ளது ஸதாசிவப் பொருளென்று விளங்குவதாலும்அவஸ்தாத்ரயாதீதமாகிய மூவரை யுங்கடந்த துரியநிலை வியக்தமாகியது. இவைகளையோராமல் கைவல் யம் சிவனாரதுதுரீயத்வத்தை விளக்கினதில்லையென்று ஐயங்கார் பேசியது அவரைமூடியிருக்கும் அந்ததமஸின்பயனென்றே அறிய வேண்டியது. இவ்வுபநிஷத்பாகத்திற்கு யாம் தக்கபொருள் கூறு கின்றோம். "ஏகாந்தஸ்தானங்களிலே சுகாசனத்திலிருந்து சுத்த ருகி, நேராகியகழுத்துத்தலையுடம்புகளையுடையனாய், அத்யாச்ர மஸ்தனாய், இந்திரியங்களனைத்தையும்அடக்கிப் பக்தியால் தனது ஆசாரியனையிறைஞ்சி, ஹ்ருதயபுண்டரீகத்தைத் துகளற்றசுத்தமாக க்கருதி,அதன்மத்தியிலேதெளிவுடையவராய்,சோகமில்லாதவராய், எண்ணுதற்கரியவராய்,வெளிப்படாதவராய், அநந்தரூபராய், சிவ னாய்,அமிர்தராய், பிரஹ்மயோனியாய்,தத்பதமாய், ஆதிமத்தியாந்த விஹீனராய்,ஏகராய், விபுவாய், சிதாநந்தரூபராய், அரூபராய், அத் புதராய், உமாஸஹாயராய், பரமேசுவரராய், பிரபுவாய், முக்கண் ணராய், நீலகண்டராய், பிரசாந்தராய், பூதயோநியாய், ஸமஸ்த ஸாக்ஷியா யிருப்பவரைத்தியானித்து,அதனால் முனியாகி இருளின் மேற்போவான்.அவர் பிரஹ்மா, அவர் சிவன், அவர்இந்திரன், அவ ரழிவற்றவர், மேலானவர், சுவப்பிரகாசர், அவரே விஷ்ணு, அவர் பிராணன், அவர்காலன், அக்னி, அவர்சந்திரன், அவரே இருந்தது மிருப்பதுமாகிய எல்லாமானவர், என்றுமுள்ளவர், அவரையறிந்து அதனால் மிருத்யுவைக்கடப்பன். முத்திக்கு வேறுவழியில்லை" என் பதேயாம். இதனைத்தரிசித்தபேர் இதில் சிவனாரது துரீயத்வம் பெ றப்பட்டிருக்கின்றதோ? இல்லையோ?என்பதைச் சுலபமாக அறிய லாம். அதர்வசிகை முதலியவற்றால் துரியராகப்போந்த சிவனை இப்பிஞ்சுவைஷ்ணவர் கைவல்யம் துரீயரெனக் கழறினதில்லையெ ன்றுபேசியது அவரதுவைஷ்ணவத்தை எமது தீக்ஷிதஸ்வாமிகள் மண்ணைவெட்டிக்கீழேபோட்டுப் புதைத்துவிட்டதனாலென்க.இது நிற்க.

நமது சிற்றூத்துக்காட்டுவைஷ்ணவர் "அதர்வசிகை துரீயசி வனை ஸ்தாபிக்கச்சக்தியற்றது" எனத்தொடங்கி, அதில் தியேயன்

ஆர் எனப் பிறந்தகேள்விக்குக்"காரணந்துத்யேய:"எனப் பதிலுண் டாகியது எனமுடித்து,"காரணமோ மஹோபநிஷதாதிகளான ப்ரா பக்வாக்கியங்களாலே நாராயணனென்பதாக அறியலாகிறது என அழுதிதொலைத்தார். இதற்குமுன் இவரைப்போல் அழுதவரொருவ ருமில்லை. இவரது ஒப்பாரி உசிதந்தான். இனி இவரழுகையை யாம் ஓயப்பண்ணுகிறோம். இவர்காட்டிய மஹோபநிஷத்திஜுபக்ரம த்தில் "ஏகோஹவை நாராயண ஆஸீந்-நப்ரஹ்மாநேசாந:" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதில் நாராயணரும், பிரஹ்மாவும், சிவ னும் பிரஸ்தாபிக்கப்படனர். இவருள் பிரஹ்மருத்ரர்களைநோக்க நா ராயணருக்கு ஆதிக்யமுண்டாயினதேயன்றிப் பிரஹ்மவிஷ்ணுருத்ரர் களைக்கடந்த சிவனுக்கு மகிமைகுறைந்ததாக ஏற்படவில்லை. இந் தச்சுருதியில் "ஏகோஹவை நாராயண ஆஸீந் நப்ரஹ்மாநேசாந:" என்றிருப்பதோடு (நவிஷ்ணு:) எனவுமிருந்திடின், நமதன்பர்தே டிய ஜடவிஷ்ணுவுக்கு ஒருக்கால்பிழைப்புண்டாகலாம். பிரஹ் மாவும், ஈசானரும், இவர்களுக்குமேலிட்டவராகத் துதிக்கப்படும் நாராயணருமாகிய மூவரும் துரீயசிவனால் படைக்கப்பட்டு அழி கின்றவர்களென்பதை இவ்வுபநிஷத்திற்றானே "ப்ரஹ்மா விஷ் ணுச்ச ருத்ரச்ச, ஸர்வாவாபூதஜாதய:, நாசமேவாநுதாவந்தி"என்று பிரஸங்கித்திருக்கின்றது. அன்றியும், "ஸசிவஸ்ஸஹரிர்விதி:"என்று திரிமூர்த்திகளுஞ் சிவவிபூதிகளாதலுங் கூறியிருக்கின்றது. அத்துரீ யம் இதுவென்பதுதோன்ற,

"தஸ்மாதீசாநோமஹாதேவோமஹாதேவ:"
"பராத்பரதரம் யந்மஹதோமஹாந்தம்
ஸ்வரூபதேஜோமயசாச்வதம்சிவம்"
"சிவஏகஸ்வயம்ஸாக்ஷாத்"
"ஸர்வம்சாந்தம்நிராலம்பம்
வ்யோமஸ்தம்சாச்வதம்சிவம்"

என்னும் வாக்கியங்கள் பிறந்துள்ளன. இனனும பலவுள. இவைகளையெல்லாம் நமதன்பர் அநுவாதங்களென்று அல்றிக்கூவு வர். பிரஹ்மேசாநர்களுக்குக் காரணராய் முதற்கண்வெளிப்பட்ட நாராயணரைப் பின்னர் அவ்விருவரோடுசேர்த்துப் பிறப்பிக்கப்பட் டாரெனவும், நாசமாயினாரெனவும், அவரும் ஏனையிருவரும் விபூதி களாயினாரெனவும் அவ்வுபநிஷத்துப்படித்தலாலும், திரிமூர்த்திக ளுக்கும் மேலானவர் நாராயணரென்று அது படியாமையாலும், அத் திரிமூர்த்திகளுக்கும் மேலானவர் சம்பு என்றுபடித்த அதர்வசிகை க்கு விரோதமாக அது படியாதாகையாலும், 'அநிற்போத்த ஈசாந

மஹாதேவ-பராத்பரதரங்களாகிய சிவவாசகங்களை அநுவாதமென்பது அறியாமையாகவேமுடியும். நாராயணர்தியாதாவாகப்படிக்கப்பட்டவராதலால்,அவருக்குஆதிக்யம்போதர அவ்வுபநிஷத்துப் பிரஹ்மசிவாதிசப்தங்களால் கௌரவங்கல்பித்துபசரித்தவாறறிக. நமதன்பர்காட்டிய மஹோபநிஷத்து மல்லார்துபடுத்துக்கொண்டமையால், அவர் அவ்வுபநிஷத்தால் விஷ்ணுபரத்வஞ்சாதித்து, அதனைக்கொண்டுவந்து அதர்வசிகையோடு முடிபோட்டுவைத்தது அறுந்துபோய்விட்டது. மஹோபநிஷத்திற்போந்த நாராயணனை அதர்வசிகை (நகாரணம்) என்று அடியிற்றள்ளிச் சம்புவாகிய காரணப்பொருளைக் "காரணந்துத்யேச்சம்புঃ" என்று முடியிற்கொண்டு கூத்தாடுவதால் நமதன்பர் சம்புவைமறைத்து நாராயணனைநாடிப்போனது ஸாதுக்கள் நகைக்கவேயிடஞ்செய்தது.ஒருவன்மற்றொருவனைப்பார்த்து உன்குடுமிஎங்கேயென்றுகேட்டால் அவன் என்குடுமி பக்கத்துவீட்டுப்பையனிடத்திலேயிருக்கின்றதுஎன்பதற்கே நமதுநண்பர்தேடியநியாயம் ஒத்திருப்பதாக யாமொதுக்கிறோம்.

இம்மட்டோ, •இப்பேய்மதியார் வரம்பிற்கட்டுப்படாமல் "இதிலுள்ள சம்புசிவாதிநாமங்கள் ரூடியையிழந்து புரோவாதாநுகுணமாக நாராயணனை (வசிக்கிறின) என்றுகொள்ளவேண்டும். தொடக்கத்தில் (புருஷதைவத்ய)என்ற வாக்யத்தாலே புருஷனைப் பிரதிபாதிக்கிறதென்பது ஸ்பஷ்டமாயிருக்கின்றது. புருஷசுருதியாலே நாராயணனென்று விளக்கப்பட்டிருக்கின்றது" என்றற்றொடக்கத்துப் பிரலாபங்களுக்கும் ஆரம்பித்தார். இவரது பிரஸங்கத்தில் (வசிக்கிறின) என்று ஓர்பிரயோகஞ்செய்தார். அது இன்னபாஷையென்று எமக்குவிளங்கவில்லை. இதுநிற்க. சம்புவாதிநாமங்கள் ஏனோ ரூடியையிழந்திடும் ? இவ்வாறுபிதற்றுதல் ஓர்கற்புடையநங்கையைப் பார்த்து இதோவுன்னைக்கைகோத்துநிற்குமிவன் உனதுகணவனைப்போலிருக்கின்றான். உனதுகணவனன்று. நானே உனது மெய்யானகணவன் என்றுபேசி மானமிழந்தமதிகேடனுக்கே• ஒப்பிடத்தக்கது. கற்புடையநாயகி தன்கணவனையே கண்குளிரப் பார்ப்பதன்றி, ஏனையோரைக் காலாலொதுக்குதல் போல அவ்வதர்வசிகை "சிவஏகோத்யேயঃ" என்று சிவனைப் புகழ்ந்தும்,பிரஹ்மவிஷ்ணுருத்ரர்களைப் பிரஸ்தாபித்து "நகாரணம்-ஸர்வமந்யத்பரித்யஜ்ய" என்று வாய்திறந்திகழ்ந்துந் தனதுநிறையைக் காத்துக்கொண்டிருக்கின்றது. இவைகளை நமதன்பர் ஏனோ யோசித்திலர் ? இவைகளையோசியாது அவ்வதர்வசிகை நகாரணம் என்றொதுக்கிய நாராயணனை நமதன்பர் அதற்குப் புரோவாதாநு

குணமாகப்பொருந்தும்என்று புணர்த்தப்பார்த்தது அந்தணர்குலத்த ருங்கொடியொருத்திக்கு அவளருங்கடியால் வரித்தவரனையகற்றி அவளிருக்கும் அக்ரஹாரத்திற்கப்பால்வசிக்கும் அயற்குலமைந்த னைக் கரவாற்சேர்ப்பிக்கமுயலு மறிவிலியின்செய்கையோடமென்றே ஒத்துப்பொலிவெய்தியது? இவ்வுபநிஷத்திலுள்ள புருஷபதம் "தமீ சாநம்புருஷம்" என்னும் புருஷனையன்றி "யோநிர்ஜநார்த்தநஃ' என்னும் பெண்ணாகியநாராயணனைப்போய்ச் சேராது. இவர் பதிவ ரதையைவிபசாரியாக்கவும், பிராஹ்மணப்பெண்ணைப் பிரஷ்டை யாக்கவுந் தலைப்படுதல்போலவே விஷ்ணுவாகிய ஸ்திரீயையும் புரு ஷனுக்கப் பார்க்கிறார். இதுமுடியாதகாரியம்.

இவரிவ்வளவிலமையாமல் சிவபரஞ்சுடரைச்சுட்டி "இவ ரைத் தியேயமொன்றுசொல்வதெங்ஙனம்?" என வோர்பேராச்சரியங் கண்டுகூறினார். இதனை இவரது உள்ளத்தைமூடியிருக்கும் அந்த தமசு யாவருடையகண்களையும் மூடிவிட்டதாக எண்ணியெழுதிக் கொண்டார்போலும். அவ்வுபநிஷத்திற்றானேயன்றோ

"காரணந்துத்யேச்சம்புஃ"

"த்யாயீதேசாநம்"

"சிவஏகோத்யேயஃ"

என்னுந் தியேயவசனங்கள் பொலிந்துகிடக்கின்றன? இவற் றால் எமது சிவபரஞ்சுடர் தியேயராதல்வெளிப்படை. இந்தவுப நிஷத்திலாவது, இவர் புரோவாதங்கள்என்று கட்டிக்கொண்டழும் சுபாலம்-மஹோபநிஷத்துமுதலிய வேறு எந்தவுபநிஷத்துக்களிலா வது நாராயணர் தியேயர் என்றபடிக்கு மோர்வசனத்தைத் தேடி யெடுத்துக்கொண்டு சபையின்முந்த யோக்யதைகெட்டுக்கிடக்கு மிவரது அவகதியையமூந்திப்பாராமல் எமது சிவகதியின்மேற் சின ந்தது அவரது பாவத்தின்கொழுமையேயாம். ஆயின், அவ்வுதர்வசி கையில், "த்யாதாருத்ரஃ" என்றுகூறியிருப்பது என்னையெனின், அது "நாராயணபரோத்யாதா" என்பது போன்றதாம். நாராய ணன்தியாதா, உருத்திரன் தியாதா என்கையால் இவர்களே நகா ரணம் என்றொதுக்கப்பெற்றவர்களாம். "த்யாதாருத்ரஃ" என்ப தற்கு முன்வசனமாக "த்யாநம்விஷ்ணுஃ" என்று கூறியிருத்தலை நமதன்பர் பார்ப்பதற்குக் கண்குருடாய்விட்டதுபோலும். "த்யாநம் விஷ்ணுஃ" என்று இவ்வுபநிஷத்திற் பஷிக்கப்பட்டபடியே நாராய ணத்திலும் "நாராயணபரோத்யாதா-த்யாநம்நாராயணஃபரஃ" என் றுகூறியிருத்தலையும் ஸாதுக்கள்கண்டு ஸந்தோஷிப்பார்கள். இத னால் "த்யாதாருத்ரஃ"என்று குணருத்ரனைப் பிரஸ்தாபித்ததுசனம்

"காரணந்துத்யேயச் சம்பு:" என்றது முதலிய துரீய சிவவாசக சுருதிகளைப் பாதிக்கமாட்டாது. நாராயணர் தியேயரென்று இவ்வுபநிஷத்துக் கூறுமாயின், நமது அன்பர் "த்யாதா ருத்ர:" என்னும் பகுதியை அதற்கு வியாப்பியமாக்கலாம். அவரதிர்ஷ்டம் இங்குமில்லை. எங்குமில்லை. என்செய்வார்பாவம்! இனி இவர் வேறொரு பெருங்காரியஞ்செய்திருக்கிறார். என்னெனின், சம்புசப்தத்திற்கு வைஜயந்தி-வல்லகர்டுஜயந்தி முதலியவைகளால் பல அர்த்தங்களுண்டென்று சாதித்ததேயாம். இதனால், இவர்அடைந்த பிரயோஜனம் ஈதெனவிளங்கவில்லை. இவர்கண்டுபிடித்த பலவர்த்தங்களில் நாராயணருமொருவராக வெளிப்படின், ஒருவாறு இவர் அல்பஸந்தோஷியாகவாவது ஆகலாம். அந்தப்பிரஸ்தாபமே கிடையாது. என்னை? அதற்குப் பிரஹ்மா பொருளாயினரெனின், பிரஹ்மா பொருளானால் விஷ்ணுவடைந்தலாபம் யாது? அந்தப்பிரஹ்மாவை அதேவசனத்தில் விஷ்ணுருத்ரர்களோடுசேர்த்து நகாரணம் என்று ஒதுக்கிவிட்டமையாலும், அவரை விஷ்ணுவுக்குங் கீழ்ப்பட்டவரென்று பலசுருதிகள் கூறுகின்றமையாலும், அவரைச் சம்பு என்றுஅழைத்து, அவரோ துரீயப்பொருளென்று நமதன்பருங்கூறாராகையாலும், குணமூர்த்தியுந் துரீயமூர்த்தியுமாக இரண்டுபிரஹ்மாக்களை வேதம் எங்கும்படியாமையாலும் அவர்தேடிக்கொண்ட வசனங்கள் அவரைத் தெருவிலேயேவிட்டன. இவ்வுண்மைகளையுணர்ந்தபேர் இவர் "இந்தச்சிகையில்சொல்லப்பட்ட விஷ்ணுவினுடையவுற்பத்தி அவதாரமென்பது ஸ்பஷ்டம்" என்று எழுதிக்கொண்டதை எங்ஙனே ஒப்புவரீர்கள்? அவதாரமும், அதிஷ்டானமும் அபேதப்பொருளாகையால், அவதாரத்திற் கங்கீகரித்துக்கொண்டவுற்பத்தி அதிஷ்டானத்தையும் பற்றியழுக்காமற்போகாது. இதனால், சிவனிடத்திலேயே நாராயணர்பிறந்தாரென்பதும், அவர் நகாரணரென்பதும், சிவனேகாரணரென்பதும், அவரோ தியேயரென்பதும் ஸித்தாந்தமாயின. இவர் தமது வழுத்திரட்டினோர் மூலையில் "நாராயணபதம் மூலகாரணபூதனாகிய ஸ்ரீகாந்தனுக்கு வாசகமாயிருப்பினும் அவரது அவதாரமூர்த்தியாகிய நாராயணனென்னுமிருடியை விசேடித்துச்சொல்லும்" எனவும், "ஸ்ரீகாந்த வாசகமான விஷ்ணுபதமும் பரவாசுதேவமூர்த்தியினுடைய வ்யூஹபூதர்களாகிய ஸங்கர்ஷணாதிகளிலொருவராகிய ப்ரத்யும்நமூர்த்திக்கும் வாசகமாம்" எனவும் எழுதியிருக்கின்றார். நாராயண-விஷ்ணுநாமங்கள் நாராயணனது அவதாரத்திற்கும், விஷ்ணுவினதுவ்யூகத்திற்கும் முறையேஅமைந்தவாறு உமாகாந்தவாசகமான சம்பு,

மும் அச்சம்புவினது வ்யூஹபூதர்களாகியமூவருள் பிரஹ்மாவுக்கும் உருத்திரருக்கும்அமரகோசாதிகள் படித்திருக்கலாம்.இவற்றை நம தன்பர் கவனியாமலே வெளிவந்து பரிபவமெய்தினர். இதிலே யா மொருவிசேடங்கண்டோம்.என்னெனின், இவருடையமுதற்பாக த்தில்"மற்றொருபொருளில் பிரயோகிக்கத்தகாத நாராயணபதத்தா லே சொல்லப்படும் ஸ்ரீகாந்தனையே பிரஹ்மமென்றுசொல்வது உசி தம்" என்று எழுதிக்கொண்டது அழிந்துபோனதேயாம். மற்றொரு பொருளில் வினியோகிக்கத்தகாதது என்ற நாராயணபதம் நாராய ணவிருடியின்றலையிலுமேறியதால்,நாராயணரது பிரஹ்மத்வம் விப ரீதப்போய்விட்டது. இருவரும் அபேதமாகையால் பாதகமின் றெனின், நாராயணருக்கு அபகர்ஷகோர்நதவிடங்களி லிவ்வபேதப் பிரஸங்கநழுகிப்போக வதனை அவதாரத்தின்றலைமேலேற்றி ஓடப் போவதென்னே? இவைகளை இனியேனுங்கூர்ந்து யோசித்து அடங் குவாராக.

இனி, இவர் "யதாதமஸ்தந்நதிவாநராத்ரிர்-நஸந்நசாஸச்சிவ ஏவகேவல:" என்னுஞ் சுவேதரவாக்யமும் சுபாலத்திற்கநுவாதமாகி நாராயணனே பிரளயதசையில் விஞ்சியிருக்குஞ் சேதனன் எனத் தெரிவிக்கின்றது எனத் தெரிவித்தார். யதா-ததா முதலிய அறிகுறி கள் அநுவாதத்திற்குரியனவெனவும் ஆதாரங்கூறினர். அன்றியும், இவரோ ("யதாக்னேயோஷ்டாகபால" மென்கிறவிடத்திற்போலே இவ்வாக்யமும் விதாயகமாகலாமாகையாலே சிவனே காரணம்")எ ன்றுசைவர் ஸமர்த்தித்துக்கொள்வதாகவும்பிரஸ்தாபித்தார். இந்தப் பிரஸங்கத்தால் நமதன்பர்சாதித்தது ஒன்றுங்காணோம். யதா என் பதை அநுவாதமென்றேகொள்ளவேண்டிய அவசியமில்லையென் று "யதாக்னேயோஷ்டாகபாலம்" என்கிறஸாட்சிகாட்டிச் சைவர் கள் சாதித்துக்கொள்வதாக நமதன்பர் பிரஸ்தாபித்தாரேயன்றி அந் தஸாக்ஷியை ரத்துசெய்யவில்லை. அதனை அவரழிக்காமையால் யதா-ததா முதலியன அநுவாதத்தினறிகுறிகளென்று அவரெழுதிய து நின்றுவற்றியதாயிற்று. இதனாலும், எங்களதுமுதற்பாகத்தி லிவ்விஷயம் பரிஷ்கரிக்கப்பட்டதனாலும், சுபாலத்திற்போந்த நாராயணர் சிவதுரீயத்திற்கடங்கினமையாலும்சுவேதாசுவதரத்தை அநுவாதமென்று நமதன்பரலறியவாதம் அபவாதமாகவேமுடிந் தது. இவர் இந்த்ஸந்தர்ப்பத்தில் "நாராயணனே பிரளயதசையில் விஞ்சியிருக்குஞ்சேதனன்" என வோர்பிரயோகஞ்செய்தார். இந்த ஸமயத்தில் ஜடதுரீயவிஷ்ணுவைத் தெருவிலேவிட்டார். சேத னன் விஞ்சியிருக்குமென்கையால், இவரது துரீயஜடம் அசேதன

மும், விஞ்சியிராதவஸ்த்துமென்பதற்கு ஐயமுளதேயோ? முன்னே
டுபின்முரணக்கூறுத விபரீதியற்கையென்க. இவரது முக்கியசேத
னன் மூவரிலடங்கினமையால், அவன் நகாரணம் என்று ஓதுக்கப்
பட்டான். இவர்தேடியஜடமுஞ் சேதனமுமாகிய இரண்டும் பிர
ளயதசையில் விஞ்சுதலொழிந்தமையால் சுவேதாசுவதரத்திற்போந்
த (சிவஏவகேவல:) என்னும்வசனம் இவரது கூறப்புநாராயணனது
என்று போராடவந்தது வேரோடறுந்தது. நாராயணன் ஜலசாயி.
இவனைவிழுங்குகிறவன் உருத்திரன். "அர்த்தசந்த்ராக்ருதிஜலம்-
விஷ்ணுஸ்தஸ்யாதிதேவதா, த்ரிகோணமண்டலம்வஹ்நீ - ருத்ரஸ்
யாதிதேவதா" என்று விஷ்ணுருத்ரர்களுடைய யோக்யதையைக்
கூறி, "ஆகாசமண்டலம்வ்ருத்தம் - பரவஸ்த்வதிதேவதா" என்று
யோகசிகோபநிஷத்து முடிவுகூறியது. பரவஸ்து இதுவென்பது
தோன்ற மற்றோரிடத்தில் "ஆகாசமண்டலம்வ்ருத்தம்-தேவதாஸ்ய
ஸதாசிவ:" என்றுகூறியது. இதனால், ருத்ரனுக்குஅடங்கினவர்
விஷ்ணுவெனல் ஸித்தம். இவ்விருவரையுங்கடந்த பரவஸ்து ஒன்
றும் இதிற்கேட்கப்பட்டது. இதனால், நாராயணர்தான் விஞ்சிய
பொருள் என்று நகைக்குநாணாமல் நமதன்பர்கூறியது துக்கிக்கத்தக்
கதாயிற்று. அன்றியு மவ்வுபநிஷத்தில், "விஷ்ணுரூபீமஹாயோகீ-
பாலயேதகிலம்ஜகத்-ருத்ரரூபோமஹோயுஞ்ஜக் - ஸம்ஹரத்யேவதேஜ
ஸா" என்று கூறப்பட்டிருக்கின்றது. இம்மட்டோ, தேஜோபிந்தூபநி
ஷத்து "ரக்ஷகோவிஷ்ணுரித்யாதி-ப்ரஹ்மாஸ்ருஷ்டேதுகாரணம்-
ஸம்ஹாரேருத்ர இத்யேவம்" என்றுகூறுகின்றது. இப்படியே எல்
லாவுபநிஷத்துக்களுங் கூறுகின்றன. ஸம்ஹாரகர்த்ருத்வம் விஷ்
ணுவுக்கு யாண்டுங்கூறவேயில்லை. விஷ்ணுவுக்கு ஸம்ஹாரகிருத்யம்
நைஜமாகாமையினாற்றானன்றே இராமன் உருத்திராம்சத்தைத்
தாங்கி இராவணனை ஸம்ஹரித்தானென்று இராமாயணம்கூறியது.
"நப்ரஹ்மாநேசாந:" என்றது மஹாப்ரளயத்தைச் சுட்டியதன்று
இவற்றையோராது உருத்திரனது ஸம்ஹாரத்திலடங்கிய நாராயண
னை ஸர்வஸம்ஹாரமூர்த்தியாகக் கூறவந்தது நமதன்பரது தெளிவி
ன்மையேயாம். "ப்ரத்யக்ஜநஸ்திஷ்டதிஸஞ்சுகோசாந்தகாலே-ஏ
யேவருத்ரோநத்விதீயாயதஸ்தே-நப்ரஹ்மா நவிஷ்ணுர் நஸூர்யோ
நாக்னிசந்த்ரதாரகா:" என்வெழுந்து மஹாப்ரளயத்தில் விஞ்சிய
சேதனன் சிவன்என்று ஒரு சுருதிகூறியது. "அதகஸ்மாதுச்யதே
மஹேச்வர:-யஸ்ஸர்வாந் லோகாந்ஸம்பக்ஷஸி ஸம்பஜத்யஜஸ்ர
ஸ்ருஜயதிவாஸயதிவா-தஸ்மாதுச்யதேமஹேச்வர:" என்வெழுந்து
ஸகலவிசுவங்களையும் பக்ஷிக்கின்றவனும், ரக்ஷிக்கின்றவனும், ஸ

ஜிக்கின்றவனும், தன்னில் வசிக்கச்செய்கின்றவனுமாகிய காரணத் தாலேயே சிவன் மஹேசுவரனென்று சொல்லப்படுகின்றார் என்று வேறொருசுருதிகூறியது. "யோவிஸ்புலிங்கோஸ்லாடஜேந-ஸர்வம் ஜகத்பஸ்மஸாத்கரோதி - புனச்சஸ்ருஷ்ட்வாபுநரப்யரக்ஷ - தேவ ம்ஸ்வதந்த்ர:ப்ரகடீகரோதி" என மற்றொருசுருதியெழுந்து நெற்றி யிற்கண்படைத்த சிவபரஞ்சுடரே ஸர்வஸம்ஹாரத்தையும், ஸ்ருஷ் டிஸ்திதிகளையுஞ் செய்கின்றானெனக் கோஷிக்கின்றது. "யோந் தகாலே ஸர்வலோகாந் ஸஞ்சஹார" எனப் பின்னொருசுருதியெழுந் து சிவனே ஸம்ஹாரகர்த்தா என்று ஸ்தாபிக்கின்றது. "யஸ்ஸர் வேபரமகாலே ஸர்வாநாத்மந்யுபஸம்ஹ்ருத்ய-ஸ்வாத்மாநந்தேஸு கேமோததே ப்ரகாசதேவாஸதேவ:" என வேறொருசுருதியெழுந்து எவர் பரமகாலத்தில் ஸர்வத்தையுந் தன்னிடத்திலேயே யுபஸம்ஹா ரஞ்செய்து தன்னுத்மாநந்தஸுகத்தில் ஸந்தோஷித்துக்கொண்டி ருக்கின்றாரோ, எவர் தனக்குத்தானே பிரகாசித்துக்கொண்டிருக் கின்றாரோ அவரேதேவர் என்று ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாகிய சிவபரஞ் சுடரை விதந்தோதியது. "பஞ்சக்ருத்யநியந்தாரம்" எனவும், "பஞ் சப்ரஹ்மோபஸம்ஹாரம்-க்ருத்வாஸ்வாத்மநிஸம்ஸ்திதம்" எனவும், வேறொருசுருதியெழுந்து சிவபெருமான் ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹார திரோபவாநுக்ரகங்களைச் செய்பவனெனவும், பிரஹ்மமாகியதனது பஞ்சகிருத்யங்களதிஷ்டித்தலால் பஞ்சப்ரஹ்மங்களென் றுபசரிக் கப்படும் பிரஹ்மவிஷ்ணுருத்ரமஹேச்வர ஸதாசிவமூர்த்திகளைத் தன் னிடத்தி லுபஸம்ஹாரஞ்செய்து ஸ்திரமாகவிருப்பவரெனவும் விச தப்படுத்தியது. அதேசுருதியானது "ஸ்வமாயாவைபவாத்ஸர்வாந்-ஸம்ஹ்ருத்யஸ்வாத்மநிஸ்திதঃ" எனவெழுந்து தனதுசக்தியின் வல் மபத்தால் ஸர்வஸம்ஹாரஞ்செய்து தனக்குத்தானே சிவம்பிரகாசித் துக்கொண்டிருக்கின்றதென ஸ்தாபிக்கின்றது. இன்ன பலசுருதிகள் சிவனே ஸர்வஸம்ஹாரஞ்செய்து விஞ்சியசேதனன் என்று முழங்கு வதற்குமாறாக நாராயணனே விஞ்சியசேதனன் என்றுகூறிச் சுவே தாசுவதரம் சுபாலத்திற்கநுவாதமென்று நமதுஐயங்கார் நாணி ன்றி நாவசைத்தது நடுநிலைமையைக் கடந்ததாயிற்று. இனிப் புரோ வாதம் முந்தியது, அநுவாதம்பிந்தியது என்பது எமக்கும், அவருக் கும், எவருக்குமுடன்பாடேயன்றோ? உபநிஷத்துக்கள் நூற்றெட் டெனவெளிப்பட்டு முதல், இரண்டாவது, மூன்றாவது எனக் கிரம மாகவோடும். இந்தமுறையில் சுவேதாசுவதரம் பதினுலாவது உப நிஷத்து. சுபாலம் முப்பதாவது உபநிஷத்து. பிந்தியசுபாலத்திற்கு முந்தியசுவேதாசுவதரம் எப்படி அநுவாதமாகலாம்? இந்த நியாயத்

தாலும் கடிதன்பரது அநுவாதப்பிரஸங்கம் அவதிப்பிரஸங்கமாயிற று· இன்னும்விரிக்கிற்பெருகும்·

இனி, இவர் "மூலகாரண வஸ்துவினுடைய் ரூபம் உமாப் தித்வாதி லிங்கமுடையதென்பதில் பிரமாணங்களில்லை" எனவொ ன்றுகூறினார். "காரணந்துத்யேயச்சம்பு:" என்றதே யாம்கொண்ட மூலகாரணவஸ்து· இதுவே பிரஹ்மவிஷ்ணுருத்ரர்களைக் கீழேதள் ளி மேலேநிற்குந் துரீயத்தைப்போதிப்பது· சம்பு என்னுநாமத்தை யுடையபொருள்"உமாஸஹாயம் பரமேச்வரம்ப்ரபும்-த்ரிலோசநம் நீலகண்டம்ப்ரசாந்தம்" என்னும் அடையாளங்களோடு வெளிப் பட்டிருக்கின்றது· முந்தியது அதர்வசிகையும், பிந்தியது கைவல் யமுமாம். இந்தக்கைவல்யம் துரீயத்தைப்போதிப்பதென்னும் வாய்மையை மேலேவிளக்கினும்· அன்றியும், மண்டலப்ராஹ்மணத் தில், "புத்திகுஹாயாம் ஸர்வாங்கஸுந்தரம்-புருஷரூபமந்தர்லக்ஷ்ய மித்யபரே - சிர்ஷாந்தர்க்கதமண்டலமத்யகம் - பஞ்சவக்த்ரமுமா ஸஹாயம்-நீலகண்டம்ப்ரசாந்தம்-அந்தர்லக்ஷ்யமிதிகேசித் - அங்கு ஷ்டமாத்ர:புருஷாந்தர்லக்ஷ்யமித்யேகே,, என்பது அங்குஷ்ட மாத்ரமாய் ஹ்ருதயபுண்டரீகத்தில்வசிக்கும் பரவஸ்துவினுடைய அடையாளங்களைப்பிரகாசப்படுத்தியது· இனி, யோகதத்வோபநிஷ த்தில் "த்யாயம் ச்சதுர்முகாகாரம்-சதுர்வக்த்ரம்ஹிரண்மயம், தார யேத்பஞ்சகடிகா:- ப்ருதிவீஜயமாப்நுயாத்" என்று பிரஹ்மாவை யுபாஸித்தலால்பிருதிவியைஜயித்தலும்,"ஸ்மரந்நாராயணம்தேவம்- சதுர்ப்பாஹும்கிரீடிநம் - சுத்தஸ்படிகஸங்காசம் - பீதவாஸஸமச்யு தம், தாரயேத்பஞ்சகடிகாஸ்-ஸர்வபாபை:ப்ரமுச்யதே, ததோஜ லாத்பயம்நாஸ்தி" என்று நாராயணனையுபாஸித்தலால் அப்புவை ஜயித்தலும், "த்ர்யக்ஷந்துவரதம்ருத்ரம்-தருணாதித்யஸந்நிபம், பஸ் மோத்தூளிதஸர்வாங்கம்-ஸுப்ரஸந்நமநுஸ்மரந், தாரயேத்பஞ்சக டிகா-வஹ்நிநாஸௌநதஹ்யதே" என்று உருத்திரனை யுபாஸித்த லால் அக்னியைஜயித்தலும், "தாரயேத் தத்ரஸர்வஜ்ஞ - மீச்வரம் விச்வதோமுகம், தாரயேத்பஞ்சகடிகா-வாயுவத்வ்யோமகோ பவே த், மரணம்நதுவாயோஸ்து" என்று மஹேசுவரனை யுபாஸித்தலால் வாயுவைஜயித்தலும், "ஆகாசேவாயுமாரோப்ய-ஹகாரோபரிசங்கர ம்-பிந்துரூபம் மஹாதேவம்-வ்யோமாகாரம்ஸதாசிவம், சுத்தஸ்படி கஸங்காசம்-த்ருதபாலேந்துசேகரம், பஞ்சவக்த்ரயுதம்ஸௌம்யம்- தசபாஹும்த்ரிலோசநம், ஸர்வாயுதத்ருதாகாரம் - ஸர்வகாரணகா ரணம், ஆகாசதாரணாத் தஸ்ய-கேசரத்வம்பவேத்த்ருவம், யத்ரகுத்ர ஸ்திதோவாபி ஸுகமத்யந்தமச்நுதே" என்று ஸதாசிவமூர்த்தியை·

யுபர்வித்தலால் ஆகாசத்தில் ஓர்கேடுமின்றிவாழ்தலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தச்சுருதி திரிமூர்த்திகளுக்கு வேறாகச்சொல்லப்படும் பரவஸ்துவுக்கு உமாஸஹாயத்வாதி லிங்கங்களை ஸ்தாபிக்கின்றது. இவ்வாறு தூரியஸ்வரூபம் வேதத்திற்கேட்கப்பட்டமையானும், வேதோபப்ரஹ்மணங்களாகிய இதிஹாஸபுராணங்களிலும் அவ்வடையாளங்க ளினிது கேட்கப்படுகின்றமையானும் ஐயங்காரதுபிரஸங்கம் நரியூளையிட்டதற் கொப்பாயிற்று. பாரதசேஷமாகிய ஹரிவம்சத்தில் நந்தகோபனாலே தன்மகனான கிருஷ்ணனுடைய ரக்ஷணையின்பொருட்டுச் சொல்லப்பட்ட கவசத்தில் "விஷ்ணுஸ்தேபூர்வத:பாது - ருத்ரோரக்ஷதுதக்ஷிணம், ப்ரஹ்மாசபச்சிமம் பாய-ஸ்கந்தோரக்ஷத்வதோத்தரம்" என்று பெறப்பட்டது. இதில் பிரஹ்ம விஷ்ணு ருத்ர ஸ்கந்தர்கள் படிக்கப்பட்டார்கள். இவர்களுக்குவேறாக "ஸ்வஸ்திம்வரோதுபகவான்-பிநாகீவ்ருஷபத்வஜ:" என்று மூலகாரணவஸ்துவும் அடையாளங்களோடு படிக்கப்பட்டது. இனி ஸ்காந்தாந்தர்க்கதமாகிய சூதஸம்ஹிதையில் "உமார்த்தவிக்ரஹாசுத்தா-த்ரிணேத்ராசந்த்ரசேகரா, நீலக்ரீவாபாரகந்தா-ப்ரமோதாதாண்டவப்ரியா, ப்ரஹ்மாவிஷ்ணுமகாதேவை - ருபாஸ்யாகுணமூர்த்திபி:" என்று அப்பரமகாரணவஸ்துவை அடையாளங்களோடு வர்ணித்திருக்கின்றது. இன்னும்பலவுள.உபநிஷத்துக்களாலும், உபபிரஹ்மணங்களாலுந் தூரியசிவத்தினடையாளங்களை இனிதுவெளிப்படுத்தினோம். இந்த ரூபவியவஸ்தையாலும், "சிவமத்வைதம் சாந்தம் சதுர்த்தம்மந்யந்தே"—"காரணந்துத்யேயச்சம்பு:" என்று சுருதிவிளக்கும் நாமவியவஸ்தையாலும் எமது தூரியஸித்தாந்தம் நமதுஐயங்காருக்கு நளிர்ஜந்நியை யுண்டுபண்ணுமற்போகாது. இவர் மூலகாரணவஸ்துவினது அடையாளங்கேட்டாரன்றோ? "ஏகோஹவைநாராயணஆஸீத் -நாராயணபரம்ப்ரஹ்மா-நாராயணாத்ருத்ரோஜாயதே-நாஸ்திநாராயணஸமம் நபூதம்நபவிஷ்யதி" என்ற சுருதிகளில் இவரது மூலவஸ்துவினது கரியநிறம், கடுந்தூக்கமுதலிய வியவஸ்தையேற்படாமையால் இவற்றையுமினி நமதன்பர் தள்ளிவிடுவார்போலும். ஐயோ ஏழைமையே! இவரதுமதியை என்னென்போம்?

இனி எமது தூரியசிவத்தினுண்மையை விரிக்கின்றோம். இவரது திருமேனி இவரதுசக்தியேயாம். இது அருவாயும், உருவாயும், அருவுருவாயும்விளங்கும். இவை ஞானவடிவங்களாம். அன்றி இவை சக்தனுக்கு வேறாகாதனவாம். இதனால் ஜடம்வேறு, சேதனம்வேறு என்னும்பிரஸங்கம் இங்குநிகழாது. எம்பெருமானது திருமே

னியை இதுகொண்டே சித்கநத்திருமேனியென்று வேதங்கள்படி த்தன. ஜலமேஆலங்கட்டியாகத் தடித்தல்போல அடியார்களுக்க ருள "நிறுத்துவனிவனந்தமேனி நின்மலனருளினாலே." இது ஒத்து. சுருதியில், "பராஸ்யசக்திர் விவிதைவச்ரூயதே-ஸ்வாபாவகீ ஜ்ஞாநபலக்ரியாச" எனப்போந்த வசனத்தில் (ஸ்வாபாவகீ) என் றது பரனில்வேறுகாத அவனது தாதாத்மியத்தையேயாம். அது வே ஞானம், கிரியை என வெளிப்பட்டது. அதனையே (ஞானபலக் ரியாச) எனபது தெரிவித்தது. பலம் கிரியையிலடங்கும். இவ்வுண் மைகண்டே சிவாகமங்கள் ஞானக்கிரியாஸ்வரூபன் என்று சிவனைத் தெளிவித்தன. சேதனனைஅறிவிக்க ஞானமும், அசேதனத்தை அசைவிக்கக் கிரியையும் பரனது சக்திகளாக வியக்தமாயின. இன் னும் விவிதம் என்பது அருவம், உருவம், அருவுருவம் என்றுகொள் ளுங் கோலங்களுக்குயாம். இதனால், வேதத்தில்"ததரூபமகாமயம்" எனவும், "அகாயமவ்ரணம்" எனவும், "அரூபமத்புதம்" எனவும் போந்த பிரயோகங்கள் ஸாமஞ்சஸமாயின. இப்படியே "யத்தேரூ பம் கல்யாணதமம் தத்தேபச்யாமி" எனவும், "அங்குஷ்டமாத்ரோ ரவிதுல்யரூபஃ" எனவும், "அவ்யக்தமநந்தரூபம்" எனவும், "உமாஸ் ஹாயம் பரமேச்வரம்" எனவும் போந்தவமைதிகளும் ஒப்பாயின. ஈண்டு அவ்யக்தம் என்றதே அருவுருவத் திருமேனியென்க. இவை நாசமாகாத சித்கனமேனியென்பதுபோதரவே"ஸ்திரேபிரங்கைஃ புரூருபவுக்ரஃ" என்னுஞ்சுருதி எழுந்துகோஷிக்கின்றது. இதனால், துரியமாகிய நாலாவதுபொருள் உருவம், அருவம், உருவருவமென் னு மூன்றுமாகலாம். இம்மூன்றிற் றனித்தனியொவ்வொன்றுமாக லாம். அது உருவமென்றபோது அதனை அருவமன்றெனக்கூறு தல் கூடாது. அருவமென்றபோது உருவமன்றெனத்தாபிக்க முடி யாது. உருவருவமென்றவிடத்தும் மேல்நியாயமேசிறக்கும். "செப் பியமூன்றுநந்தங்-கருமேனிகழிக்கவந்த கருணையின்வினைவுகாணே" என்றார் சைவப்பெரியாரும். இது துரியசிவத்தினது சிற்கனத் திருமேனியினது இலக்கணம். இனி மாயாகனத்திருமேனிகள் பிர ஹ்மவிஷ்ணு ருத்ரர்களுக்கெனவறிக. மூலப்ரக்ருதியின் ஸத்வாமி சத்தில் உருத்திரருக்கும், ரஜோமிசத்தில் பிரஹ்மாவுக்கும், தமோ மிசத்தில் விஷ்ணுவுக்குந் தநுவாதிகள் பிரஸித்தம். சாஸ்திரங்களில் ஸத்வாமிசம் விஷ்ணுவுக்குக் கேட்கப்படுகின்றதெனின். அது பஹி ஸ்ஸத்வமென்க. சிவனுருக்குப் பஹிஸ்தமசு பிரமாணஸித்தம். 'பிர ஹமாவுக்கு உள்ளும்வெளியும் ராஜஸம். இவை இரும்பு - வெள்ளி பொன் விலங்குகளாம்.' எந்தவிலங்கும் நடக்கவொட்டாது தடுக

கும் பிரதிபந்தமேயாகையால், இவற்றையுடைய மூவரும் ஒரு வரிலொருவர் கொஞ்சமுயர்ந்தவர்களேயன்றித் துரீயசிவத்தை நோக்க வோர்பொருளாகவே நில்லாரென்க. ஆகையினாற்றானன் றோ (இவர்களை) நகாரணம் என்று வேதம் பிரதிஷேதித்துவிட்டது? இவர்களைக்கடந்த பரவஸ்துவையேயன்றோ "விச்வாதிகோருத்ரோ மஹர்ஷி:" எனவும், "மாயினந்து மஹேசவரம்" எனவும், "ய:பர ஸ்ஸமஹேச்வர:"எனவும் சுருதிகளெழுந்து கோஷிக்கின்றன? விசு வத்தைக்கடந்தவனெனவும், மாயையைநடத்துபவன்-அல்லதுதொ ழிற்படுத்துபவனெனவும், மாயைக்குவேறானவன்-அல்லது மேலா னவன் எனவும் போந்தஅர்த்தபாஹுள்யத்தால் துரீயசிவன் உரு த்திரன் - மஹேச்வரன் என்னும்பெயர்களாற் பிரகாசிக்குந் தனி முதலாகிய உமாஸஹாயத்வாதி லிங்கங்களோடுகூடிய பரவஸ்து வென்பது பசுமரத்தாணியறைந்தாற்போல நாட்டப்பட்டது. கீதை யில் "நிஸ்த்ரைகுண்யோ" என்று கண்ணன்கூறியபொருள் குண மூர்த்திகளைக்கடந்த துரீயசிவமேயாம். அதனையே "ஈச்வரஸ்ஸர்வ பூதாநாம்"என்று மீண்டும் அவர் பிரகாசிப்பித்தனர். அவரது உப தேசத்தைக் கேட்டுத்தெளிந்த அர்ஜுனன் சாங்காறுஞ் சிவபூசை செய்திருந்தானென்பதே அவருபதேசித்தருளிய பரமதத்வஸ்வரூப மிதனைத்தென வியக்தமாக்கிவிட்டது. இவற்றை யினிதுநோக்குவார் துரீயதத்வம் உமாஸஹாயத்வாதி அடையாளமில்லாதது என்று வாய்திறந்த ஐயங்காரை இனி வாய்மாளச்செய்வது வெகுசுலப மென்க. விரிக்கிற்பெருகும்.

இனி, நமதன்பர் "ஒருவேதாந்தத்தில் விதிக்கப்பட்ட பகவ துபாஸநத்துக் கபேக்ஷிதமானகுணம் மற்றொருவேதாந்தத்தில் விதி க்கப்பட்டிருக்குமாகில் அதையுஞ்சேர்த்து உபாஸிக்கவேண்டுமென் பதைக் காட்டவல்லதாம்" எனவொன்று எழுதியிருக்கின்றார். இவர் சிவ சம்பு சங்கர மஹாதேவ ஈசான ருத்ராதிநாமங்களாற்போதருஞ் சுருதிகளையெல்லாம் நாராயணரது அநுவாதங்களென்று அலறுமோ ரஸம்ப்ரதாயத்தைக் கையாண்டுவருபவர். நாராயணரது அநுவாத நாமங்களாகிய சிவசம்புவாதிசப்தஜாலங்கள் கோஷிக்கப்படும் வேறு வேதாந்தங்களில் பஸ்ம ருத்ராக்ஷ ஸ்ரீபஞ்சாக்ஷர சிவபூசைகள் கேட் கப்படுகையால், அவற்றை நமதன்பர் தாமநுட்டிக்கும் பகவதுபாஸ கத்துக்கபேக்ஷிதமானகுணமெனக்கொண்டு ஆசரியாமல்விடுவதென் னையோ? ஊராருண்டைமைக்குப் பேயாய்ப்பறப்பதினாலன்றோ கண் மய்க்காற் கண்டபடியெல்லாம்பேசிக்காலக்ஷிளப்பிக்கொள்ளுகிறார்? பஸ்மருத்ராக்ஷங்களில் நமதன்பருக்கு எவ்வளவுதுவேஷமோ அவ்வ

ளவுக்கு அதிகமான த்வேஷம் சிவ சம்பு மஹாதேவ சங்கராதி நாமவை
பவத்திலும் அவருக்கில்லாமற்போகவில்லை. என்செய்வார்பாவம்! அச்
சிவநாமங்கள் பரவஸ்துவைப்போதிப்பனவாக விளங்கலின், தமது
நாராயணனைப் பரவஸ்துவாக்கிட அவர்தலையி லவர்சுமக்கமுடியாத
பாரமாகி அந்தநாமங்களையேற்றி அபராதத்தை விலைகொடுத்து வாங்
கினாரென்க. சிவா சம்போ மஹாதேவா சங்கரா என்று வாயாரவுச்ச
ரித்து விபூதிருத்ராக்ஷங்களை யுடம்பெல்லாந்தரித்துவாழும் பெரும்
பாக்யம் இவருக்குக்கிடைப்பது ஸாத்யமா? இவற்றை இவரதுதெய்
வமாகிய நாராயணரும், அவரது அவதாரங்களாகிய இராமகிருஷ்ணா
திகளுமேயன்றோ பெரும்பாக்யங்களாகப் பெற்றுவாழ்ந்தார்கள்?
இவர் ஓரிடத்தில், இவரது அபார்த்தப்ரஸங்கஸந்தர்ப்பத்தில் "ப்ர
ஹ்மத்தையுபாஸிக்குமவன் ஆசார்யனுக்ஞையாலே முன்னம் சிவனைத்
தியானித்து, அநந்தரம் விஷ்ணுவை உபாஸிக்கிறான்" எனவும்,
"விஷ்ணுபக்திக்குஅங்கமாகச் சிவனுடையபக்தி ஆவசியகம்" என
வும் வாய்மணக்கப்பேசினார். அதனால், இவர் சிவத்வேஷமும், ப
ஸ்மருத்ராக்ஷாதி சைவசின்னத்வேஷமும் அற்றவராகவேண்டும். இ
வர் சிவனைப் பாபியென்றும், அஹங்காரி என்றும் பலவாறுவைது பா
வத்திற்கு மடிகட்டிக்கொண்ட பரமபுருஷராகப்பிரவர்த்தித்தல் பிர
த்யக்ஷமாகையாலும், இவரினத்தவராகிய பாஞ்சராத்திரிகளுக்குச்
சிவத்வேஷம் பாலன்னமாகையாலும், இதற்குச் சாணிச்சாறு, உப்
புச்சாறு, சடைச்சாறு என்றுவைது கோமயகோமூத்திரங்களையும்,
ஸமுத்திரகங்காஸ்நாநங்களையும் சிவஸம்பந்தமுடையவெனக்கழி
த்து ஏசுமதத்தவருக் கிளையசகோதரராகவெளிப்பட்டு, இவரும் ஏ
னையவைஷ்ணவருந் திரிதலே சான்றாகையாலும் இவரதுபிரஸங்க
ங்கள்யாவும் வீணிரைச்சலாகவே வெறுக்கத்தக்கவாயின. இதுநிற்க.

நமது சிற்றாத்துக்காட்டார் "நாராயணபரம்ப்ரஹ்ம" என்
றது முதலிய சிலசுருதிகளையுதகரித்து, அவையே ப்ரமகாரணவஸ்து
வைப் போதிப்பனவென்று ஸந்தோஷித்தார். அவை லக்ஷ்மீபதித்
வாதிலிங்கங்களைவெளிப்படுத்தாமையானும், துரீயவஸ்துவாகிய சிவ
பராஞ்சுடரை வியாப்பியமாகக்கூறுமையானும், எங்களது முதற்
பாகத்தில் முற்றும் பூர்வபட்சமாய்விட்டமையானும் நமதன்பர் அவ
ற்றைத் திலதர்ப்பணம்பண்ணிவிடவேண்டியதே. இப்பசுபிராயர்
தமதுபாஞ்சராத்திரத்தையும், திருவாய்மொழியென்னுந் தாதபாட்
டையும் அவலம்பித்து அம்மிதுணையாகவாறிழிந்தொத்து நரகாழ்
வாராயிருத்தலை மறைத்து "ஸர்வாகமமயச்சிவ:"—"வ்ரதமேதத்பா
சுபதம்" என்று சுருதிஸித்தமாய்விளங்கும் பாசுபதத்தையும், அவற்

றில்வேறாகாத திராவிடஸூக்திகளையுந் தூஷித்தார். இவற்றாலிவர் கண்டபலன் யாது? எமதுநாயகரவர்கள் "இராமர் சிவபூசைசெய்தது" என்னும்பத்திரிகையில் எங்காவது பாஞ்சராத்திரத்தையும், ஆழ்வார்கள்பாட்டையுந் தூஷித்திருப்பின், இவரது பாசுபதாதிநிந்தைகள் ஆவசியகமாகும். நிர்ஹேதுவாக அவைகளை இவர் தொட்டமையால், யாமும்அவர்ஜோலிக்குப்போகவேண்டிவந்தது. எமதுதோழருந் தமதுமுதற்பாசத்தி லிவ்விஷயத்தைச்செவ்வையாகச் சிங்காரித்திருக்கின்றனர். நாயை எங்கடித்தாலும் அது காலைத்தூக்குவதுபோல் நமதுபாஞ்சராத்திரிகள் எந்தப்பிரமேயம்வந்தாலும் பாசுபததூஷணம், தேவாரதூஷணம், சிவலிங்கதூஷணமுதலியவைகளி லிறங்கியழுவது அவரதியற்கையென்க. அவை எமக்கு வேருதுச்சமென்க. இதுநிற்க.

இப்பண்டிதசிரோமணியார் ஸங்கர்ஷணஅநிருத்த பிரத்யும்நர்களைப் பிரஸ்தாபித்து, இவருள்ஸங்கர்ஷணரிடத்திலிருந்து உருத்திரன்பிறந்தானென்றும், ருத்ரன் ஆதிசேஷனிடத்திலிருந்துண்டானானென்றும் பிதற்றி, இவ்வாறு விஷ்ணுபுராணங்கூறுகின்றது எனவும், இது கூர்மபுராணத்திலும் படிதமெனவும் அஸங்காத்மவாதத்திலாழ்ந்தார். சுருதிவிசாரத்தின்முன்னில்லாது சோர்ந்துகீழே வீழ்ந்து திரும்பிப்பாராதோடியஇவர் பாஞ்சராத்திரஸித்தமான பரிபாஷைகளிலிறங்கித் தமதுஅவைதிகத்தைஸ்தாபிப்பது நரியானது ஸிம்மத்தையெதிர்த்துப் போராடவெழுந்ததற்கே யொப்பாகியது. சிவோத்கர்ஷங்கூறுவதானால் கூர்மபுராணம் அப்பிரமாணமும், விஷ்ணூத்கர்ஷங்கூறுவதானால் அக்கூர்மம் பிரமாணமும் நமதன்பருக்காயிடுதல் கவிதர்மவிசேஷமென்க. சிவோத்கர்ஷங்கூறுங் கூர்மத்தில் விஷ்ணூத்கர்ஷம் கல்பிதமென்பது சொல்லவும்வேண்டுமோ? கல்பிதமாயினும், அகல்பிதமாயினும் நமதன்பர் வேதாவிருத்தமாகநாட்டித் தமதுஸித்தாந்தத்தைக் காத்துக்கொள்வாராக. இஷ்டவிகாதம்பண்ணிக்கொள்ளாமல் தப்புதஸ்தாவேசுகளைச் சிருட்டித்துவிடுத்து வைதிகர்ஸபையில் அவர்முகமிறங்கிப்போவதே அவரதுதவமென்க. சிவபுராணங்களை அப்பிரமாணங்களென்று கொள்ளுமிவரது விஷ்ணுபுராணத்தை வேதவிரோதமாயின், யாம் அடியோடேதள்ளிவிடுவோமென்று அறியாது இவர் அதன்பேரைப் பிரஸ்தாபித்தது மதியீனமேயாம்.

இதுகாறுஞ்செய்தவிசாரத்தால் சுருதிஸித்தமான பரத்துவஸ்தாபகம் ஸ்ரீஉமாகாந்தனிடத்திற்றானே இனிதுஸித்தித்ததமை

யால், நமதுஐயங்கார் தீக்ஷிதரவர்கள்மேலேற்றியகோடிகள் காடி வாங்கிப்போயின. இதனால், நமதன்பர் கல்பிதம்-தாமசம் என்றெடுத்த பாரதம்-பாகவதம்-கூர்மம்-சைவமுதலியயாவும் ஸாமஞ்சஸமேயாயின. இன்னும் பிரஹ்மவித்யோபநிஷத்து எழுந்து "த்ரயக்ஷரஸ்யஸிசிவஸ்யது" என்று சிவனே பரமாத்மாவாதலை ஸ்தாபித்து விட்டது. அதனமிசமாக "அகாரஸ்யசரீரந்து-வ்யாக்யாதம்ப்ரஹ்மவாதிபி:" என்று பிரஹ்மாவையும், "விஷ்ணுச்சபகவான்தேவ-உகார:பரிகீர்த்தித:" என்று விஷ்ணுவையும், "ஈச்வர:பரமோதேவோ-மகார:பரிகீர்த்தித:"என்று உருத்திரமூர்த்தியையும் பிரகாசப்படுத்தியது. அக்ஷரத்ரயாத்மகராகிய ஓங்காரவாச்யர் சிவன் என்று இனிது பரிஷ்கரித்தமையால், பிரஹ்மசிவசப்தங்கள் பரியாயவாசகமெனல் ஸித்தாந்தமாயிற்று. இதனால், சிவனே ஸர்வரக்ஷகரென்னும் தீக்ஷிதருசைவஸித்தாந்தம் நமதன்பரோறெடுத்துப்பார்க்கவும் முடியாமல் "இயல்பென்றுந்திரியாமல்" நிலைபெற்றிருக்கும் ஸத்தியமே வெளிப்பட்டது. இதுநிற்க.

நமதுஐயங்கார் யோகயாஜ்ஞ்யவல்க்யம் சைவர்களுக்கு நமனும் என்று பிரஸ்தாபித்தார். அதனைநிறுத்தவேண்டி அதில் துரீய சிவனைப்பிரஸ்தாபித்து, அநந்தரம் நாராயணனே மோக்ஷகர்த்தா என்று கூறியிருப்பதாக எழுதினார். இதனால், சிவனாது துரீயத்வம் அழிந்தவிதம் யாதோ? துரீயசிவனதுஅமிசமாதனேக்கியே விஷ்ணுவுக்கு ஆண்டு மகிமைகற்பிக்கப்பட்டிருக்கலாம். அமிசத்தை வியத்துகொண்டே அமிசிக்குக் கௌரவங்குறைந்ததாக நம்மவர்கண்டு பிடித்தது விந்தையே. துரீயசிவனுக்குமேலிட்டவர் நாராயணர் என்று ஆண்டுப்படிக்கப்படின், அவரது ஆசைக்குக் கேடுண்டாகாது. அங்ஙனமவர் கண்டுகூறாமையால் அவரது ஆசை நெருப்பினீர்த்துளியாயிற்று.

இவரதுபேராசை இத்தோடேதொலையாமல் "யம்விஷ்ணுரந்தரச்சம்புச்ச, ப்ரஹ்மாலோகபிதாமஹ:, ஸ்துவந்திவிவிதைஸ்ஸ்தோத்ரை:, தேவதேவம்மஹேச்வரம், தமர்ச்சயந்தியேசச்வத், தார்க்காண்யதிதரந்திதே" என்னும் பாரதவசனத்தில் (மஹேசுவரம்)என்னுஞ்சப்தம் பரவாசுதேவனையே தெரிவிக்கின்றது எனவும்; இதற்குச் சிவபரமாக அர்த்தங்கூறுவது சுருதிவிலக்காகுமெனவும் பிரலாபித்தனர். உருத்திரருக்குமேலிட்டவர் மஹேசுவரரோயன்றி அவருக்குக்கீழிட்டவரன்று. விஷ்ணுவோ, உருத்திரருக்குக் கீழிட்டவர். விஷ்ணுவை உருத்திரருக்கு மேலாக்கவேண்டி

மஹேசுவரப்பெயரைத்திருடி அவர்தலையிலேற்றினல், அவர் எங்ஙனஞ்சுமப்பர்? துரீயவிஷ்ணு ஜடமாகையால், வருந்தாமல் சுமக்குஞ் சுமைதாங்கியாக நமதன்பர் தேடிவைத்தார்போலும். ஜடமாகிய வோர்சரீரம் இரத்னமுடியைத்தாங்குதலால் என்னபயன்? சைதன்யமிருந்தாலன்றோ மகிமை? துரீயசைதன்யமாகிய சித்கனஸ்வரூபமே சிவமாகையால், அதற்கே மஹேசுவரத்திருநாமம் உரியதென்க. "தமீச்வராணாம்பரமம் மஹேச்வரம்" என்று சுவேதாசுவதரம் சிவபரஞ்சுடரையேயன்றோ துதித்திருக்கின்றது? ஈசுவரன்-பரமேசுவரன்-மஹேசுவரன்-ஸர்வேசுவரன்-விச்வேசுவரன் என்னுந் திருநாமங்கள் விஷ்ணுவுக்கு இரவலேயன்றிச் சொந்தமாகமாட்டா. விஷ்ணுவுக்கேயன்றிப் பிரஹ்மேந்திரர்களுக்குஞ் சிலசமயங்களில் அவை இரவலாகக் கொடுக்கப்படும். சொந்தக்காரர் அவைகளைத் தரிக்கவருங்காலங்களில் இரவலாளிகள் தூரவிலகவேண்டியதே. துரீயமூர்த்தியினது சாரூப்பியம்பெற்றுத் தவத்திற்சிறந்த உருத்திரமூர்த்திக்குமாத்திரம் அவை இரவலாகா. அவற்றை அவருக்குச் சொந்தமாகவே துரீயமூர்த்தி கொடுத்தருளினர். இந்தவுண்மையை நோக்கினேர் பிரகிருதவிசாரத்தில் குணருத்ரருக்கு மஹேசுவரநாமஞ் சூட்டினுஞ் சூட்டலாம். அவருக்கு அவை ஆகந்துகமேயன்றி ஸஹஜமல்லவாகையால், அவற்றை, ஸஹஜமாகவுடைய பரம்பொருளின் ஸந்நிதியில் அவருக்குச் சூட்டிக்கொண்டாடப் பின்னிடைகின்றனர். துரீயமூர்த்திக்கு அவை எப்போதும் ரூடியும், யோகமுமாம். குணருத்ரருக்குத் துரீமூர்த்திஸந்நிதியில் ரூடியும், பிரஹ்மவிஷ்ணுக்களோடுசேர்கையில் ரூடியும், யோகமுமாம். குணருத்ரருக்குந் துரீயருத்ரருக்குமுள்ள வொருமை திருக்கோயில்களில் வீற்றிருக்கும் சிவமூர்த்தத்திற்கும், சிவசைதன்யத்திற்குமுள்ள ஸம்பந்தம்போல்வதாம். இவ்வாறு விசாரிக்கும்புத்திமான்கள் துரீயமூர்த்தியாகவெளிப்பட்டமஹேசுவரனை ஜடவிஷ்ணுவென்று ஸ்தாபிக்கவந்த ஐயங்காருக்குத் தக்கபகுமானங் கொடாமற்போகார்கள். குணமூர்த்திகள்மூவரும் பசுக்கள். இம்மூவரையுங்கடந்த நாலாவதுபொருள் சிவம், இதுவேபதி. முதன்மூவரும் சிருட்டி திதி சங்காரங்களென்னுங் கிருத்தியங்களை ஜடங்களினிடத்திற்றனே செய்யத்தக்கவர்கள். தேகேந்திரியாதிகளையே படைத்தும், நிறுவியும், கலைத்தும் அவர்கள் தொழில்புரிவர். ஆத்மாக்கள் நித்தியமாகையால், அவற்றைப்படைத்தல்-காத்தல்-அழித்தல் என்னுங்காரியங்களைச் செய்யார்கள். ஆத்மாக்களுக்கு மறைத்தல், அருளல் என்னுங் கிருத்யங்களை நாலாவதுபொருளாகிய சிவமே மஹேசுவரசதாசிவரூபங்களாக வெளிப்

பட்டுச் செய்யாநிற்கும். நாலாவதுமூர்த்திக்குமேல் எத்தனைமூர்த்திகள் கேட்கப்படினும், அம்மூர்த்திகள்யாவரும் அந்த நாலாவதுமூர்த்தியினது சித்கராம்சங்களேயாம். துரீயமூர்த்தியாக அவருள்யாரைக்கூறுவதும் ஸாமஞ்சஸமேயாம். இப்பரமசிவம் பிந்துநாதாதிகளாகிய அருவத்திருமேனிகளையு மெய்துதலால், இவையுந் துரீயமேயாம். இவ்வமைதிகணிலைபெறவே துரீயவஸ்துவை உமாஸஹாயத்வாதி ரூபமாகவும், நாதபிந்துவாதி அரூபமாகவும் சுருதிகள் கோஷிக்கின்றன. இவற்றைத்தேர்ந்திடாமல் தேகாதி ஜடங்களைப்பாலிக்குங் கர்த்தாவாகிய விஷ்ணுவாகியபசுவை ஆத்மநாதராகிய மஹேசுவரராக்கிட நமதன்பர்வருந்தியது மலடிகறந்து மாழ்கியதற்கே ஒப்பாயிற்று. சிவபெருமானே மஹேசுவரர் என்பதைப் பாரதப்பிரமாணத்தைக்கொண்டே இன்னுஞ் சாதிப்பாம்.

"ஈசாநச்சேதநஃகர்த்தா-புருஷ:காரணம்சிவ:
விஷ்ணும்ப்ரஹ்மாசஸௌர்ய:-சக்ரோதேவாச்சஸாந்வயா:
ஸ்ருஜ்யதேக்ரஸ்யதேசைவ-தமோபூதமிதம்யதா
அப்ரஜ்ஞாதம்ஜகத்ஸர்வம்-ததாஹ்யேகோமஹேச்வர:"

என்னும் இந்தவசனம் "ப்ரத்யக்ஜநதிஷ்ட திசஞ்சுகோசாந்தகாலே - ஏகஏவருத்ரோ நத்விதியாயதஸ்தே - நப்ரஹ்மாநவிஷ்ணுர்நஸௌர்யோ நாக்னிசந்த்ரதாரகா:" என்னுஞ் சுருதியினுபப்ரஹ்மணமாகப் பிரகாசிக்கின்றது. இதில் சிவபரஞ்சுடரை ஈசானர்-சேதனர்-கர்த்தர்-புருஷர்-காரணர்-சிவம்-மஹேசுவரர் என்று விதந்திருக்கின்றது. நமதன்பர் இதிலுந்தமதுஜடத்தைநுழைக்கப் பாடுபடுவார்போலும். இதிற்போந்த ஒவ்வொருசப்தமும் ஜடவிஷ்ணுவைத் துரத்தியடிப்பினும் சேதனம் என்னுஞ்சப்தம் அதனைக்கீழே தள்ளிக் கழுத்தை யறுத்துவிட்டது. இவைகளேயன்றி எங்களது முதற்பாகத்தில் பாரதம் கேவலம் சைவபரமென்பது இனிது பிரகாசம்பண்ணப்பட்டிருக்கின்றது. இவற்றைத் தெளிந்திடாத மூடர்களே ஐயங்காரது அல்பபோதத்தால் மயங்கி மடிவார்கள். இனி இவ்வைஷ்ணவப்பிஞ்சு இந்தவசனங்கள் கற்பிதங்களென்று கதிகாண்பதே விஷ்ணுவினது ஜடதுரீயம் பிழைத்தற்காதாரமாகும். இவரதுஜடம் இவரை எந்தவழியில்விடுமோ? அந்த ஜடத்தை இவர் எந்தவழியில்விடுவாரோ? அறிந்திலம். இதுநிற்க.

இந்தப்புத்திமான் விஷ்ணுதர்மம், விஷ்வக்ஸேநஸம்ஹிதை முதலிய நூலத்தைக்கொண்டுவந்து உபநிஷத்துக்களாகிற எமது வாதூலத்தின்முன்காட்டித் தமதுஜடதுரீயத்தைச் சாதிக்கப்புகுந்

தார். அவர்காட்டியவை வேதமூலகத்வம்பெறுமையாலும், வேதத தை விரோதிக்கின்றமையாலும், "ஸலிலாநீவபாடபம்" என மஹோபநிஷத்து எழுந்து விஷ்ணுவுக்குத் தேடிவைத்த கதியையே யடைந்து நிர்மூலமாயின.

இனி இவர் சிவாகமங்களை வேதவிரோதமெனத் தூஷித்தும், விஷ்ணுவானவர் சிவனுடைய சக்தியென்பதைத்தூஷித்தும், சிவன் பிரமனதுதலையைக்கிள்ளி ஹத்திக்குள்ளாயினானெனத்தூஷித்தும், சிவன் பஸ்மாசுரனுக்கு வரங்கொடுத்து ஓடிப்போயினானெனத்தூஷித்தும்,திரிபுரஸம்ஹாரகாலத்திலும்,விஷபாநஸமயத்திலும் சிவன்விஷ்ணுவால் ரக்ஷிக்கப்பட்டானென்று தூஷித்தும் ஸந்தோஷித்தார். இவற்றுள் சிவாகமதூஷணத்தை வெட்டியெறிந்து எமதுதோழர் தமதுமுதற்பாகத்தில் இனிதுபரிகரித்துவிட்டனர். அதற்குமேல் கோடியுண்டானால் வெளிவரட்டும்பார்ப்போம். ஏனையதூஷணங் களில் சிலவற்றிற்கு யாமே மேலிடங்களில் ஸமாதானங் கூறியிருக்கின்றோம். எமதுநாயகரவர்களது நூல்களைப்பார்த்துத் தெளிந் தவர்களுக்கு நமதன்பரதுஆபாசங்கள் வெகுதுச்சமென்க. அவ ற்றை மீண்டுவெருவித்துரைத்தலால் நூல்விரியும். நமதன்பர் சிவனாது ஹத்திநிவர்த்திக்குக் காரணமுரைத்தவிடத்தில் "நாராயண னைப் பிச்சையிரந்து அவருடைய திருவருளால்பெருகிய இரத்தப பெருக்காலே கையில்வைத்திருந்த கபாலநிறைந்து உடைப்பட்டுப் போனதை அம்பிகைக்கரனழுதவண்ணம் மத்ஸ்யபுராணத்தில் காணலாகுமே" என்று அழுதிருக்கிறார். அம்பிகைக்கு அரன்சொன் னார் எனவெழுதவிசையாது அரன் அழுதார் எனப் பிருந்தைக்காக அழுதானடித்தொண்டரழுததை யாம் என்னென்று விதப்பது? நமதன்பர் நாராயணனைப்பிரஸ்தாபித்து "அவருடைய திருவருளால்பெருகிய இரத்தப்பெருக்காலே (சிவன்) கையில் வைத்திருந்த கபாலநிறைந்து" எனவெழுதியது "ஆதிநெடுமாலுதிரமத்தனையுங் கைத்தலத்திற் - பாதிதனிலேநிறையப் பண்ணினரார்?" எனவும் "காதியாயிரமால்களைப்பிழிந்து மாங்கனிபோற்-கோதிவீசினுங் கடல்கவிழ்ந்தனைய செங்குருதி - பாதியாயினுநிரம்புறுக்கபாலபாணியனுய்,மாதுபாதியனவையிடைப்புகுந்தனன்வடுகன" எனவும்போந்த சைவத்திருவாளரதுவாக்குகளை ஸத்தியமென நாட்டியதாயிற்று. நானுமறியேன் அவளும் பொய்சொல்லாள் என்பதற்கிசையவேயன்றோ நமதன்பரதுவாக்கிலும் உண்மைபிறந்து நிலைபெறுகியது ? இவைகளை இனியேனுஞ் சித்தஸமாதானத்துடன் யோசித்துப் பூர்வ பட்சியார் அடங்குவாராக. அன்றியும், ஏசுநாதர் சிலுவையிலறையு

ண்டு தமது இரத்தத்தைச்சிந்தி உலகத்தவரது பாவத்தைப்போக்கி னார் என்று அவரது தாசர்கள்கூறும் அருமையையே நமது நாராய ணதாசராகிய ஐயங்காரது ஸமாதானமுஞ் சேர்ந்திருப்பதாக யாட ஸந்தோஷித்தோம். இதுநிற்க.

இவர் "மூவரில் ஒருவராகிய சிவன் ஜீவாத்மாவென்றும், கர் மபரவசனென்றும், ஸ்ரீராமசந்திரனுடைய பக்தனென்றும் வழியே நடந்து அன்பர்கைஎழுத்துக் கொடுத்தனராகையாலே அதைப்பற் றி நமக்கு ஸந்தோஷமேயாம். அவர் கையெழுத்துக்கொடுத்திருட பது அவர் வரைந்துவிட்ட "வைகுண்டமையங்காரை வாய்மாளட் பண்ணுதல்" என்னும் பத்திரிகையால் வெளியாகும்" என்று எழுதிச் செருக்கினர். "வைகுண்டம்ஐயங்காரை வாய்மாளப் பண்ணுதல்" என்னும்பத்திரிகை எமதுநாயகர் வெளியிட்டதன்று. அதனை வெ ளியிட்டவர் எமதுதோழர் சுப்பிரமணியமுதலியார். அவ்வைகுண் டம் ஐயங்காரென்பவர் நமது சீநிவாஸாசாரியாரது திருக்குமாரர் அவரை வாய்மாளப்பண்ணிய பத்திரிகையில் மூவரிலொருவராகிய சிவனை ஜீவாத்மாவென்று எம்மவர்அங்கீகரித்துக்கொண்டதாக நட தன்பர் பிரஸ்தாபித்தாரன்றோ? அதனால், அவருக்குத் தேறியலாட ம் யாது? குணருத்ரரை ஜீவனென்று ஒப்பியஎம்மவர் தாசரதியைட பரமாத்மாவாக வொப்பின், அவர் ஸந்தோஷிக்கலாம். அவரை யும் சீவனாகவே படித்திருக்கின்றார். சீவனாகிய விஷ்ணுவினது அ வதாரம் சீவனாவதில் தட்டில்லையாகையால், இராமன் சீவனென் பதே ஸித்தம். உருத்திரனும், விஷ்ணுவும், இராமரும் சீவர்களா யினமையால், ஒருசீவன் மற்றொருசீவனை வணங்குதல் பாவமாய யிற்று. குணருத்ரர் இராமனைவணங்கியதுகொண்டே இராமன் பிர ஹ்மமாயிடமாட்டான். உருத்திரனும் இராமனிற் றாழ்ந்துவிடமாட் டான். திரிமூர்த்திகளுங் கற்பங்கடோறும் மாறி மாறி யொருவரி டத்திலொருவர் பிறந்திடுதல் பாராசரபுராணத்தில் கேட்கப்படுகின் றது. விஷ்ணுவானவர் உருத்திரனிடத்து மாத்திரமேயன்றிப் பிர ஹ்மாவினிடத்திலும் பிறந்தியங்குதலை வைதிகநூல்கள் முழங்குகின் றன. இவற்றைத் தெளியாது விஷ்ணுவே பிரஹ்மம், இராமனே பிரஹ்மம், என்று பூர்வபக்ஷிகள் புலம்புவது புதஜநஸம்மதமாகு மோ? பாரதத்தில், "தத்ரவிஷ்ணுர்மஹாதேவ - ஸ்தத்ராக்னிர்வா யுர்ஸஹ, ருஷயஸ்ஸர்வஏவைதே - பிதாமஹமுபாஸதே" என்று சொல்லப்பட்ட ஸந்தர்ப்பத்தில் சிவனும், விஷ்ணுவும், ஏனையோ ரும்பிரஹ்மதேவரை யுபாஸித்துக்கொண்டிருந்த வைபவம் கேட்கப் படுகின்றது. இதனால், விஷ்ணுவைக்காட்டிலும் பிரஹ்மாவை அதி

கராக நமதன்பர் ஒப்புவாரா? இந்நியாயமே இராமனை உருத்திரர் வணங்கினர் என்றவிடத்திலுங் கொண்டொதுங்குவாராக. திரிமூர்த்திகளுஞ் சிவர்க்கஞேயானலும், அவருள் பிரஹ்மர் தாழ்ந்தவர். அவரில் விஷ்ணு உயர்ந்தவர். அவரினும் உருத்திரருயர்ந்தவர். இம்மூவரினும் பரமாத்மாவாகிய பரசிவமுயர்ந்தது. ஆகையால், இராமதாபினியில் இராமனைக் குணருத்ரர் வணங்கியது ஓரவசரமென்றே தெளியவேண்டியது. குணருத்ரருக்கே இராம ரதிகராகாரோனின், அவர் துரீயமூர்த்தியாகிய சிவபரஞ்சுடரின்முன்ன ரோர் பொருளாகவும் படிக்கப்படுதல் யாங்ஙனம்? துரீயசிவனது நிலைமை ஆகாசத்தாமனை என்று கூபமண்டூகமொத்து ஐயங்கார் பிரஸ்தாபித்துவந்தது அடியோடே சாய்ந்துவிட்டமையாலும், உபநிஷத் பிரமாணங்களால் துரீயத்வம் சிவனுருக்கு நிலைபெறுயினமையாலும், இராமதாபினியிற்போந்த இராமஸேவ்யத்வம் துரீயசிவத்தைப் பாதியாமையாலும், நமதன்பர் பிரஸ்தாபித்த வைகுண்டம் ஐயங்கார் வாய்மாண்டேபோயினமையாலும் பூர்வபட்சியார் (நமக்குஸந்தோஷமே) என்றதுகெட்டு அவருக்குத் துக்கமே பிராப்தமாயிற்று.

இனி, நமதன்பர் "சைவபுராணங்கள் அப்பிரமாணங்கள்" என்று பிரஸ்தாபித்தார். அவ்வளவேயன்றி எப்படி அப்பிரமாணமென்பதை நிரூபியாதுவிட்டார். சைவபுராணங்கள் அப்பிரமாணங்களாயின், புராணங்கள் பதினெட்டு என்பதழிந்து, அவை எட்டேயெனச் சிறந்திடும். அன்றி "அஷ்டாதசபுராணுநாம்-கர்த்தாஸத்யவதீஸுதஃ" என்பதும் அழிந்துவிடும், சுருதிநிஷ்டமாகிய சிவபாரம்யத்தையே சிவபுராணங்கள் பிரதிபாதித்தலால் அவை தாமஸமும், அப்பிரமாணமுமாகமாட்டா. சுருதியில், விஷ்ணுவை (நகாரணம்) என்று ஓதுக்கியிருத்தல்போலச் சிவபுராணங்களிலும் ஒதுக்கியிருக்கின்றது. இவ்வுண்மையைத்தோராது சிவபுராணநிந்தையிலிழிந்தது நமதன்பர் சீராழியுங்காவம் கேட்க[illegible]

இவர் இராமதாபிநியுபநிஷத்து, இராமரஹஸ்யோபநிஷத்து, ஸீதோபநிஷத்து முதலியவை இராமரே பரப்ரஹ்மம் என்று தெரிவிக்கின்றனவெனவும், இராமநாமத்துக்கு ஐப்தாக்கள் சிவன் அகஸ்தியர் முதலாயினரெனவும், இராமநாமம் பரமபாவநகரமெனவும், இராமாயணம் விஷ்ணுமகிமையே சொல்வதெனவும், இராமர் அவ்விஷ்ணுவினது அவதாரமெனவும், ஆகையால் இராமர் சிவனைப்பூசித்தாரெனல் அஸங்கதமெனவும் ஓர் அழுக்காரம்பித்தார். இவர்காட்டிய உபநிஷத்துக்களில், "ராமஃபிராம்ம்ஸௌந்தர்ய, ஸீமா

ம்ஸோமாவதம்ஸகாம், பாசாங்குசதநுர்ப்பாண,தர்ாம்த்யாயேத்த்ரி லோசநாம், த்யாயந்நேவம்வர்ணலட்சம், ஜபத்பரணதத்பர:, பில்வ பத்ரை:பலே:புஷ்பை, ஸதிலாஜ்யை:பங்கஜைர்ஹுநேத்'' என்ற பகுதியில் சந்திரசேகரனும், முக்கண்மூர்த்தியுமாகிய முதல்வனே இராமனென்று இனிது படிக்கப்பட்டிருக்கின்றது. நாராயணரது அவதாரமாக இராமாயணத்திற்படிக்கப்பட்ட இராமரிடத்து "ரா மம்த்ரிணேத்ரம் ஸோமார்த்த தாரிணம் சூலிநம்பரம், பஸ்மோத்து ளிதஸர்வாங்கம்-கபர்த்திநமுபாஸ்மஹே'' என்று மூன்றுகண்ணும், உமையொருகூறும், சூலதாரணமும், திருநீற்றெழிலும், திருச்ச டைப்பொலிவுமுடைய சிவபிரானது இராமநாமத்தை ஆரோபண ஞ்செய்தே உபநிஷத்துகள் கொண்டாடினவென்க. அவ்வுபநிஷத் துக்களில் துரீயசிவனுரைதனக்கிமையே சிறந்திடுதல் நமதன்பர் எவ்வளவு சிறப்பித்துக்கூறினும் தமதுதாசரதிக்கு அத்துரீயமூர்த் தியைக் கடந்தொளிருந்தன்மை ஸித்தியாமற்போயிற்று. எங்களது முதற்பாகத்தில் இத்தாசரதியைக்குறித்த பலவிஷயங்களும் வந்து விட்டமையாலும், நமதன்பர் கூறினதையேகூறுகின்றமையாலும், இராமாயணம் விஷ்ணுபாரம்யம்கூறுவதுகொண்டே சிவபாரம்யம் கெடுமென்பது மூடர் கூற்றேயாகின்றமையாலும், அவ்விராமாய ணம் சிவபரத்வம்கூறியதை எமதுதோழர் இனிதுபிரகாசம்பண் ணியிருத்தலாலும் நமதன்பரது துராவலம்பநம் கேவலம் நிஷ்ப்ரு ஹமென்க. விரிக்கிற்பெருகும்.

இம்மட்டோ இவர் வாமனபுராணம்-பவிஷ்யோத்தரபுரா ணம்-மார்க்கண்டேயபுராணம்-கூர்மபுராணம்-சைவபுராணம் - பாக வதபுராணம் என்பவைகளால் சிவாபகர்ஷமும், விஷ்ணூத்கர்ஷ மும் ஸித்திப்பதாக வோர்கூச்சல்போட்டிருக்கின்றார். எத்தனைபுரா ணங்களைத்தேடினும் வேதாவிரோதமாயிருந்தான்மாத்திரமே சிஷ் டர்கள் ஒப்புவார்கள். இவர்கண்டெடுத்த வசனங்களில் சிலகல்பிதங் களும், சில அர்த்தவர்தங்களுமாம். இவர் பிரஸ்தாபித்த புராணங்க ளிற்றானே விஷ்ணுவினது அபகர்ஷமும், சிவோத்கர்ஷமும் பஹுள மாய்க் கிடக்கின்றமையால், பூர்வபட்சியினது பிரஸங்கம் நிரஸ்த மென்க. இம்மஹாபண்டிதர் இவர்காட்டியபிரமாணங்களில் பவிஷ் யோத்தரகண்டம் என்பதற்குப் பவிஷ்யோத்தரபுராணம் என்று எழுதித் தடுமாறிப்போயினார். என்செய்வார்பாவம்! இனியேனும் "ஸாங்க்யம்யோக:பாஞ்சராத்ரம், வேதா: பாசுபதம்ததா, ஜ்ஞா நாந்யேதாநிபஞ்சைவ, ஜ்ஞேயச்சைகோமஹேச்வர:'' என்னும் பா த்மவசனப்படி எல்லாஞானங்களாலும் அடையத்தக்க பரம்பொ

ருள் சிவபரஞ்சுடராயிருத்தலோர்ந்து, எந்தப்பிரமாணத்தாலுஞ் சிவாபகர்ஷமுண்டாகமாட்டாதெனத் தெளிந்து நமதன்பர் குணப்படுவாராக. விரிக்கிற்பெருகும்.

இனி, யாம் ஒன்றுசொல்லுகிறோம். "ஸர்வேதேவா:பசுதாமவாபு:" என்று சுருதியெழுந்து தேவர்க்களையெல்லாம் பசுக்கள் என்று நிர்ணயித்தது. "ஸ்வயம்தஸ்மாத்பசுபதிஸ் ஸம்பபூவ" என்று எழுந்து அத்தேவர்களாகிய பசுக்களுக்குப் பதியாதலைக்குறிக்கச் சிவபெருமானைப் பசுபதியென்று நிச்சயித்தது அன்றியும்; "ஸ்வதச்சிவ: பசுபதிஸ்ஸாக்ஷீ" என்று அவரே ஸர்வஸாக்ஷி என்பதைப் பிரகாசப்படுத்தியது. இம்மட்டோ, "பரமாத்மாதேவதா பசுபதி:, ஸஜ்யோதி:பசுபதி:, ஸ்வயம்பசுபதி: புமான்" என மீண்டும்எழுந்து பரமாத்மாவாகியஅவரே பசுபதி என விசதப்படுத்தியது. இவ்வுண்மைகளை யூன்றிவிசாரியாத நமதன்பர் பசுபதி என்பது சிவனுக்கு இடுகுறிநாமமா? காரணநாமமா? எனத் தொடுத்து, இடுகுறிநாமமாகில் இயக்கனைப் புண்யஜநன் என்பதுபோலாம் எனவும், காரணப்பெயராகில் சுரபதி - நரபதி என்னுமாபோலாம் எனவும் விளக்கி, இந்திராதிகளுக்குச் சுரத்வாதிளுடன் பதித்வமுங் கூடவேயிருப்பதுபோல் சிவனிடத்திலும் பசுத்வமும் பதித்வமுங்கூடியிருக்கலாமன்றோ என்று வீண்பிரஸங்கக்கடையை விரித்தார். இவரது பேய்மதியை யாமென்னென்று விதப்பேம்? பெட்டியாகிய நாராயணனுக்குப் புருஷநாமம் ரூடியாயினாற்போலும், அழிந்து நிர்மூலமாகுந் தேவர்களுக்கும், ஸ்ரீகாந்தனுக்கும் அமரர், அச்சுதன் என்னுநாமங்கள் ரூடியாயினாற்போலும் நமதன்பர் பசுபதிநாமத்தையும் சிவனுக்கு ரூடியாகவொப்பினர். தமக்குப் பின்வருங்கதிதெரியாமல் இவர்தேடிக்கொண்ட யக்ஷன் தன்னுடைய ஸ்தானத்தில் நாராயணனையுஞ் சேர்த்துக்கொண்டுநின்றதை இனியேனும் ஐயங்காரறிந்தடங்குவாராக. இனி எம்பெருமானுக்குரிய பசுபதித்வம் சுரபதித்வம் - நரபதித்வம் போல்வதன்றாம். சுருதியில் "காதபதிம் மேதபதிம் ருத்ரம்ஜலாஷபேஷஜம்" என்றும், "ஆவோராஜாநமத்வரஸ்யருத்ரம்" என்றுங் கூறப்படுஞ் சிவனாது யஜ்ஞபதித்வம் போலவுந்தோன்றாம். சிவன் யஜ்ஞபதியாகுகையில் அவர் யஜ்ஞங்களுக்குப் பதியாதலேயன்றி அந்தயஜ்ஞமுமாதல் யாங்ஙனம்? அப்படியே சிவன் பசுபதியாகுகையில், அவர் பசுக்களுக்குப் பதியாதலேயன்றி அந்தப்பசுக்களிலுமொன்று ஆகவேண்டியந்த ஆவசியகமோ? காதபதி-மேதபதி-யஜ்ஞபதி என்னும் பிரயோகங்களைத்தெளிந்து நமது ஐயங்கார் இனியேனும் ஊளையிடாதொழிவாராக. இம்மட்

டோ, நவநிதிகளுக்கும் பதியாதலால் நிதிபதி எனவும், சதுர்த்தசபுவனங்களுக்கும் பதியாதலால் புவனபதி எனவும், பல தாரைகளுக்கும் பதியாதலால் தாராபதி எனவும் வழங்கும்வழக்குகள் பலவுளவாகையால், அவற்றோடுதானே பசுபதி என்னும்வழக்குஞ் சேர்ந்து நிலைபெறும். நமதன்பர் தமதுபட்சமாகிய சுரபதி-நரபதி-மிருகபதி என்பவைகளோடு கோபதி என்பதையும் அமைத்தாரன்றோ? கோபதி என்னுங்கால் அந்தப்பதித்வம் கோவினிடத்தன்றி அதனைப்பரிபாலிக்குந் தலைவனிடத்துந் தாண்டிச்செல்லுதலால், எடுத்தகட்சியை நமதன்பர் வியபிசரிக்கச் செய்துவிட்டனர். இவரது புத்திநுட்ப மிவ்வளவினதாக, இவருமொருவாதியாகப் புறப்பட்டது ஆச்சரியமேயாம். சுருதியில், "அச்வேப்யோச்வபதிப்யச்சவோநமோநம:" என்றும், "ச்வப்யச்வபதிப்யச்சவோநமோநம:" என்றுங் கூறப்படுதலை நமதன்பர் பார்த்துங்கேட்டுமிரார். இதில், குதிரைகளாயும், குதிரைகளுக்கு எஜமானனாயும், நாய்களாயும், நாய்களுக்கு எஜமானனாயும் விளங்குந்தன்மை பரனிடத்திற்கேட்கப்படுகின்றது. அசுவபதி-சுவபதி என்னும் பிரயோகங்களில் பதி என்னுஞ்சொல்லுக்கு எஜமானத்வமேயன்றிக் குதிரையும், நாயும் பொருளாயிடுதல் அஸம்பாவிதம். இந்தச்சுருதிகளினுடைய தாத்பரியம் குதிரைகளிடத்தும், நாய்களிடத்தும், அவைகளைப்போஷிக்கும் எஜமானர்களிடத்தும் பரன் அந்தர்யாமி என்பதேயாம். இன்னும் "குலாலேப்ய: கர்மாரேப்யச்சவோநமோநம:" என்றுங் கூறப்பட்டிருக்கின்றது. இதற்குக் குலாலர்களையதிஷ்டித்தும், கம்மாளர்களையதிஷ்டித்துங் காரியகோடிகளையுண்டுபண்ணுகின்றவர் பரமாத்மா என்பதே பொருளாம். இந்தவியவஸ்தையால் அசுவபதி சுவபதி என்பனவும் சிவஞரது பசுபதித்வத்தைச் சாதித்துப் பூர்வபட்சியினது அகங்காரத்தைப்புடைத்துப் புடைபெயரச்செய்தனவாயின. மேல் யாமுதகரித்த சுருதிகளில் "பரமாத்மாபசுபதி:" என்று படிக்கப்பட்டமையாலும், "பசுபதிஸ்ஸாக்ஷீ, ஸஜ்யோதி: பசுபதி:" என்னும் வசனங்களால் அதுவேபொருள் வியக்தமாயினமையாலும் சுரபதிநரபதிகளைப்போலப் பசுபதியையுங்கொள்க என்றுஅழுத ஐயங்காரதுவாதம் அழுமூஞ்சிவாதமாயிற்று.

சிவனே பரமாத்மா என்பதை இன்னும் விரிக்கின்றோம். 'த்மாநம் பரமாத்மாநம்-அந்தராத்மாநமேவச, ஜ்ஞாத்வாத்ரிவிதமாத்மாநம்-பரமாத்மாநமாச்ரயேத், அந்தராத்மா பவேத்ப்ரஹ்மா-பரமாத்மா மஹேச்வர:, ஸர்வேஷாமேவ பூதாநாம் விஷ்ணுராத்மாஸநாதந:" என்னுஞ் சுருதியால் பரமாத்மாவையே ஆச்ரயிக்கவேண்

டியதெனவும், அந்தப்பரமாத்மா மஹேசுவரர் எனவும், பிரஹ்மாவும் விஷ்ணுவும் அந்தராத்மாவும், ஆத்மாவுமாகின்றானெனவும், பெறப் படுகின்றது. அன்றியும், "கார்யம்விஷ்ணு:க்ரியாப்ரஹ்மா - காரணந்துமஹேச்வர:" என்னுஞ்சுருதியில் சிவனே காரணவஸ்துவெ ன்பது ஸித்திக்கின்றது. முடிவில் "அத்வைதம்பரமாநந்தம் - சிவம் யாதிதுகேவலம், அதிஷ்டாநம்ஸமஸ்தஸ்ய - ஜகதஸ்ஸத்யசித்கநம்" என்று துரீயவஸ்துவினதுஸ்வரூபம் இனிது வெளியாகின்றது. குணருத்ரருக்கும் துரீயருத்ரருக்கும் நாமரூபவொற்றுமைகேட்கப் படுதலால் குணருத்ரரிடத்தில் பிரஹ்மத்வாரோபணம் ஈண்டுப்படி தமாயிற்றெனக. இதனைக் குணருத்ரபரமாகவே கொண்டாலோ வெனின், அதுவும் குணமேயாம். பிரஹ்மேந்திரர்களைநோக்க விஷ்ணுவுக்குக் காரணத்வங்கேட்கப்படுதல்போல விஷ்ணுபிர ஹ்மேந்திரர்களைநோக்கக் குணருத்ரருக்குக் காரணத்வம் கேட்கப் படுதல் அமைவுடைத்தே. தேகத்தைநோக்க இந்திரியமும், இந் திரியத்தைநோக்கப் பிராணனும், பிராணனைநோக்கக் கரணமும், கரணத்தைநோக்கச் சீவனும், சீவர்க்களில் புல் - பூடு - புழு - மரம் - பட்சி - மிருகங்களைநோக்க மனுஷ்யர்களும், மனுஷ்யர் களைநோக்கத் தேவர்களும், தேவர்க்களில் இந்திரனைநோக்கப் பிரஹ்மாவும், பிரஹ்மாவைநோக்க விஷ்ணுவும், விஷ்ணுவை நோக்க உருத்திரனுங் காரணர்களாக வுபசரிக்கப்படுதல் வேத ஸம்மதம். இந்தநியாயத்தாலும் உருத்திரரே காரணவஸ்துவென்று எழுந்தகூறியசுருதி ஸத்ரியநிலைத்தது. மேலேகூறிப்போந்த பாச பசுக்களாகிய பொருள்களில் உருத்திரன் பதியானசிவத்தை ஸமீ பித்துத் தந்மயமானநிட்டையினின்று அதனோடுவேறறக்கலந்து சிவோஹம்பெறுதலால், அவ்வுருத்திரனையே காரணம் என்று சுருதி கூறியது ஸஹஜமாயிற்று. நாராயணர்முதலியோருஞ் சிவோஹம் பெறினும் அவர்க்கு அந்தர்ப்பாவனையேயன்றிப் பாஹ்யத்தில் தேகம் சிவரூபமானதில்லை. உருத்திரருக்கு உள்ளும்வெளியும் சிவரூபப் பிரகாசம் கேட்கப்படுதலால், அவ்வுருத்திரரையே பரமகாரணர் என்று வேதந்துதித்தலும், உயிர்களவரைவழிபட்டு மோக்ஷமடைத லும் ஸர்வஸம்ப்ரதிபந்நமாயிற்று. இந்தவிசாரத்தால் விஷ்ணு பர மாத்மா என்று ஏற்படாமல் ஜீவாத்மாவென்றே வெளிப்பட்டமை யால், அவரைப்பசுவென்றும், சிவனைப்பதி என்றும் பிரஸ்தாபிக்குஞ் சைவர்களதுபட்சம வேறொன்றிப பொலிவெய்தியது. இவ்வுண்மை போதரவே நமது நாயகரவர்கள் "ப்ரஹ்மவிஷ்ணுஸுரேந்த்ராத்யா:- பசவ:பரிகீர்த்திதா:" என்னும் ஆதித்யபுராணவசனத்தாலும், "ஸர்

வேதேவா:பசுதாமவாபு:-ஸ்வயம்தஸ்மாத்பசுபதிஸஸம்பபூவ'' *என்னுஞ்சுருதியாலும் விஷ்ணுவாதிதேவர்களைப் பசுக்களென்றும், எமது சிவபரஞ்சுடரைப் பசுபதி என்றும் பிரகாசம்பண்ணி ஸித்தாந்தப்படுத்தினார்கள். "அரன்பெருமை-இன்னும்பலகோடி யில்லையோர் யாமிருந்து, சொன்னபொழுதே தொலையுமோ'' என்று இரட்டையர்கள் சிவனாதுபெருமையின் முடிவுகாணமாட்டாது இளைத்தவாறு யாமும் இம்மட்டி லுபரதியடைந்தாம். வேதமுஞ் சொல்லிச்சொல்லி யிளைத்து, "யதோவாசோநிவர்த்தந்தே'' என்று உபசாந்தியடைந்துவிட்டது. அளவிறந்தசுருதிகள் பிரஹ்மம்-பசுபதி-பரமாத்மா-பரம்-சிவம்-சம்பு என்னுந் திவ்யநாமங்களாற் கொண்டாடிமகிழும் ஏமதருட்பெருஞ்செல்வத்தை நமதன்பர்துவேஷித்தது நிஸ்புருஷமெனக. விரிக்கிற்பெருகும்.

இந்தரஹஸ்யங்களைக் கண்டுதெளிந்தபேர் (பசுவென்பதற்கு ஜீவன் என்று பொருளுண்டாகாது, பிரமன் திருமால் முதலினோர் நாலுகால்களையுடைய ஜந்துக்களல்லவாகையால், அவர்கள் பசுக்களாகார், விஷ்ணுவாதியோர் ஸர்வஜ்ஞராகையால் ,வர் பசுவாகமாகமாட்டார்) என்று பெருமைபேசிக்கொண்ட ஐயங்காரது புத்தியைமெச்சி யாதுபஹுமானஞ் செய்வார்களோ தெரியாது. யாம் வஞ்சனையின்றி எம்மாற்கூடியதை ஏண்டுபகரிக்கின்றோம். சுருதியில்"ஸர்வேதேவாஃபசுதாமவாபுஃ'' என்றுகூறியதன் பொருடான் என்னை? தேவர்க்கள் பசுக்கள் என்பதேயன்றோ? அத்தேவர்கள் இவரென்பது போதரவேயன்றோ "ப்ரஹ்மவிஷ்ணுஸுரேந்த்ராத்யா:-பசவ:பரிகீர்த்திதா:'' என்று ஆதித்யபுராணம் இனிதுவிளக்கியது! இவற்றைநேரேகண்டும் நமதன்பரது உள்ளத்திருக்குஅகலாதது அவரது பாவமேயாம். சுருதி "மோஹாந்தஜாதந்தி ஸுரேந்த்ரமுக்யா:'' எனவெழுந்து இந்திரன்முதலியதேவர்கள் மோகத்தால் சிவனையறியார்கள் எனவும்,"யோப்ரஹ்மண: பஞ்சமவக்த்ரஹந்தா'' எனவெழுந்து பிரமனது ஐந்தாவதுதலையைச் சிவனார்சேதித்து மோகத்தையழித்தார் எனவும், "விஷ்ணும்பபந்தோருகபாசேநவீர:'' எனவெழுந்து சிவபெருமான் விஷ்ணுவை நாகபாசத்தாற்கட்டியுருட்டி அவரது அகந்தையை அறுத்தார் எனவும், "ஸுரேசம்புஸ்தீக்ருத்ய மந்மதம் யமஞ்ச'' எனவெழுந்து சுரேசனையும் மந்மதனையும், யமனையும் சிவன் அழித்து அவர்களதுபாசத்தைத் தவிர்த்தார் எனவும் வெளிப்படுத்தியது. அன்றியும், அது "யஸ்யாங்கஜோஹரிருத்ரமுக்யா:'' என்வெழுந்து திரிமூர்த்திகளுக்குஞ் சிவனே உற்பத்திஸ்தானமாயுள்ளவர் எனப் பிரகாசப்படுத்தியது. இவற்றை

பரியாலோசிப்பவர்கள் ஸர்வதேவர்களும் பசுக்கள் என்றுகூறவென் பின்னிடுவார்கள்? இவற்றை நமதன்பரான் மறைக்கமுடியுமோ? அல்லது மறுக்கத்தான்முடியுமோ? இவர் (தேவர்க) என்பதற்குப் பூதகணங்கள்-பிரமதகணங்கள் என்று நவநவமாகப் பிரஸங்கித்து வந்த பித்தவாசகங்கள் இனிப் பண்டிதரவைக்கண் என்னுமோ? மேலுதகரித்த சுருதிகளால் உருத்திரன்-விஷ்ணு-பிரஹ்மா-இந்திரன்-மந்மதன்-இயமன் முதலிய ஸர்வதேவர்களும் பெறப்பட்டமையால், இன்னோர் பசுக்களாதலிற் றவிர்ந்திலர். இவர்களைத் தன் ஞானவழிச்செலுத்தினவராகப் பெறப்படுஞ் சிவனார் பசுபதியாதலிலுந் தவிர்ந்திலர். தேவர்கள் பசுக்கள் என்று சுருதியும், அந்தப் பசுக்களாகியதேவர்கள் பிரஹ்மா-விஷ்ணு-இந்திரன் முதலாயினுரென்று ஆதித்யபுராணமுங் கூறியவுண்மையையே யன்றோ எமது நாயகரவர்கள் தெரிவித்தனர்? அதற்கு நமதன்பர் கூறுங்கியது ர்கு தியோ? சுருதியிற்றானே விஷ்ணுபசு என்பதற்கு ஈண்டு யாம் பிரமாணங்காட்டுகிறோம். நிராலம்போபநிஷத்து "ப்ரஹ்மவிஷ்ணவீசானேந்த்ராதிநாம் நாமரூபத்வாரா ஸ்தூலோஹமித்யத்யாஸவசாஞ் ஜீவ:" என்று கூறுகின்றது. இதற்கு நமதன்பர்செய்வது யாதோ? பிரஹ்ம விஷ்ணு ருத்ரேந்திரர்களை நகாரணம் எனவும், ஜீவர்கள் எனவும் சுருதிகள் கோஷிக்கையால், ஐயங்காரதுவாதம் தொய்யலாடிவிட்டது. அதர்வசிகையும், நிராலம்பமும் பிரஹ்மவிஷ்ணுருத்ரர்களோடு இந்திரனையுஞ்சேர்த்து நிஷேதித்தமையால், அன்னோர் ஒரினத்தவரோயாயினர். நமதன்பர் இந்திரனை ஜீவனென்று ஒப்பியிருக்கின்றாராகையால், அவனோடு ஸமானராக நகாரணம் என்று ஓதுக்கப்பெற்றும், அவனைப்போலவே ஜீவர்களென்று படிக்கப் பெற்றும் பிரதிஷேதிக்கப்பட்ட விஷ்ணுவாதிதேவர்களது யோக்யதையை ஈண்டியாமறிவித்த லவசியமாயிற்று. இவ்வுண்மைதெளிந்தபேர் பூர்வபட்சியினதுபோதத்தை இனி எங்ஙனே மதிப்பார்கள்?

இவர் பசுவென்பது ஜீவவாசகமாகாதென்று புலம்பினாராகையால், அதனையும்விசாரிப்பாம். ஜாபால்யுபநிஷத்தில் "கோஜீவ கஸ்பசு: க ஈசாக:" என்று பிறந்தகேள்விகளுக்கு "அஹங்காராவிஷ்டபரஸம்ஸாரீ ஜீவஸ்ஸஏவ பசு:, ஸர்வஜ்ஞ பஞ்சக்ருத்யஸம்பந்ந ஸ் ஸர்வேச்வர ஈச:பசுப':, கேபசவஇதி புநஸ்ஸம்பூர்வாச, ஜீவா: பசவஉக்தா:, தத்பதித்வாத்பசுபதிஸ்ஸபுநஸ்ஸதமஹோவாச, கதஞ்ஜீவா: பசவ [illegible] ஸதமுவாச யதாத்ருணாசிநோ விவேகஹீநா: பராப்ரேஷ்யா: [illegible] க்ருஷ்யாதிகர்மஸு [illegible] யுக்தாஸ்ஸகலது:கஸ்

ஹாஸ் ஸ்வஸ்வாமிபத்யமாநா கவாதய: பசவ:, யதாதத்ஸ்வாமிந இவ ஸர்வஜ்ஞ ஈச: பசுபதி:" என்னும் விடைகளுண்டாயின. அவை திகப்பழமாகிய ஐயங்காருக்கு இவ்வுண்மைதெரியாதது அதிசயமோ? ஸம்ஸாரியாகிய ஜீவனே பசு எனவும், ஜீவன்றான் பசுவென்று சொல்லப்படும் எனவும், கோவானது அதனது எஜமானனது அதினப்பட்டு அஸ்வதந்திரமுதலியதர்மங்களை யடைந்திருப்பதுபோல ஜீவனும் பானது அதீனப்பட்டு அஸ்வதந்திரமுதலியதர்மங்களை யடைந்திருத்தலால் இரண்டும் பசு என்று வெளிப்பட்டனவெனவும், ஜீவர்களாகியபசுக்களுக்குப் பதி பசுபதிப்பெயரினர் எனவும், அவர் ஸர்வஜ்ஞரும், பஞ்சகிருத்தியஸம்பந்நரும், ஸர்வேசுவரரும், ஈசரும், பசுபதியும் ஆவாரெனவும் வெளிப்படும்வேதார்த்தங்களை இனியேனும் வைதிகர்பாற்சென்று தெளிந்து குணப்படுவாராக. இந்தச் சுருதியில் "பஞ்சக்ருத்யஸம்பந்ந:" என்று சிவனுரைது பஞ்சக்ருத்யம் படிக்கப்பட்டிருக்கின்றது. பஞ்சப்ரஹ்மோபநிஷத்தும் இதனை நிறுத்துகின்றது. சிலமூடர்கள் பஞ்சகருத்யம் ஆகமபரிபாஷை என்றும், வேதத்தில் மூன்றுக்ருத்யமே படிதமெனவும் புலம்புவதுண்டாகையால், அவரோடுசேர்ந்து ஐயங்காருங்கெடாவண்ணம் யாம் எடுத்துக்காட்டியது உபகாரமேயாயிற்று. "சைவம்வேதமயம் யஜேத்" என்னும்வசனம் ஸத்தியமென்பதை இனியேனும் பூர்வபட்சிகள் யோசிக்கவேண்டியது. இம்மட்டோ, நாதபிந்தூபநிஷத்தில், "ருத்ரம் பசூநாஞ்சபதிம்ததா" என்று படிக்கப்பட்டிருக்கின்றது. தேவ்யுபநிஷத்தில் "விச்வரூபா: பசவோ வதந்தி" என்று கூறப்பட்டிருக்கின்றது. பஸ்மஜாபாலத்தில், "பசுபாசவிமோசக: பசவச்சாமாநவார்த்தம்" என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வுபநிஷத்திற்றனே "ருஷயச்சாம்பவா: பாசுபதா மஹாசைவா வேதாவதம்ஸம் சைவம் பஞ்சாக்ஷரம்ஜபம் தஸ்தாரகம்-ப்ரணவம்மோதமாநாஸ்திஷ்டந்தி" எனவும், "தக்ஷிணாமூர்த்திசிவிஷ்ணு: க்ருத்வைவமூர்த்தஞ்சலிமுபாஸ்தே" எனவும் பிரகாசம்பண்ணப்பட்டிருக்கின்றது. அதர்வசிரசில், "வ்ரதமேதத்பாசுபதம் பசுபாசவிமோக்ஷாய" என்று பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. சுவேதாசுவதரத்தில் "ஜ்ஞாத்வாதேவம் முச்யதேஸர்வபாசை:" என்று ஸ்மரிக்கப்பட்டிருக்கின்றது. தக்ஷிணாமூர்த்யுபநிஷத்தில், "பாசேநபத்தம் த்வைதபயாதுரம்" என்று உச்சரிக்கப்பட்டிருக்கின்றது. நீலருத்ரோபநிஷத்தில், "தேஹபாசாபஹாரிஸ்யாத்-ஜ்ஞாத்வாதேவம்ஸதாசிவம்" என்று உணர்த்தப்பட்டிருக்கின்றது. ஸகந்தோபநிஷத்தில், "பாசபத்தஸ்ததாஜீவ:, பாசமுக்தஸ்ஸதாசிவ:" என்று பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கி

றது. இந்தப் பிரவசனத்தால் பதி-பசு-பாச பதார்த்தத்ரயப்பிரஸங்கம் வைதிகமாதல் ஸித்தமாயிற்று. பசுசப்தப் பிரயோகத்தில் விச்வரூப-மாநவ-ருஷய-சாம்பவ-பாசுபத - மஹாசைவ - விஷ்ணுவாதி பதங்கள் படிக்கப்பட்டமையால், "ஸர்வேதேவா:பசுகர்மவாபு: - ஏதாவந்தோவை பசவோ, த்விபாதச்சதுஷ்பாதச்ச" என்னுஞ்சுருதிகள் பசுக்கள் ஜீவர்க்களென்பதைத் தெரிவிக்கும் முக்யாதாரங்களாகிநிலைத்தன. "பிரமன் - திருமால் முதலினோர் நாலுகலைகளையுடைய ஜந்துக்களல்லவாகையால் அவர்கள் பசுக்களாகார். விஷ்ணு ஸர்வஜ்ஞராகையால் அவர் பசுவாகமாட்டார்" என்று ஐயங்கார் அழுதனவும் அழிந்துபோயின. இதுநிற்க.

நீமதன்பர் விஷ்ணுவை ஸர்வஜ்ஞரென்று பிரஸ்தாபித்தாரன்றோ? அதனையுங் கொஞ்சம்யோசிப்போம்.

(அவர்ஸர்வஜ்ஞரானது)

மாயாஜிநத வெட்டுண்டபோது கண்டுபுரண்டழுத மாட்சியினாலோ?

மாயாஜநகன் வெட்டுண்டதைக் கண்டுபுலம்பியசீதைக்குமாப்பிள்ளையாயினதாலோ?

சீதையை அபகரித்துக்கொண்டுபோனவன் இன்னானென்று தெரியாமல் குரங்குகள்காலைக் கட்டிக்கொண்டுகுமுங்கிய ஸ்தோமகனாயினதாலோ?

வாலிசுக்ரீவர்களது அடையாளந்தெரியாமல் வாடிவதங்கிய வள்ளலாயினதாலோ?

நம்மைப்போல் பெண்டிழந்துவருந்துஞ் சின்னகுரங்குக்காக இப்பெரியகுரங்கை நாமிப்போது மறைந்திருந்துமாட்டினால், இது நம்மைப் பின்பு வேடனாகிவந்துமாட்டுமே என்றுதெளியாத மேதாவியாயினதாலோ?

வேடன் சரந்தொடுத்தது தெரியாதிருந்து கொம்பில்வெந்து பிணமாகநாறிக்கிடக்கும் விசேடத்தினாலோ?

அர்ஜுனன் சுபத்திரையை அடித்துக்கொண்டு போனபோது அவன் இன்னானென்றறியாமல் அவன்மேற் போர்க்கெழுந்த * அண்ணனாயினதாலோ?

ஒருவனுக்குத்தம் மற்றொருவனுக்கு தபட்டும் தம்மிலிகலிமெலிந்த அவதாரபாகங்களாயினாலோ

* பலராமர்.

மீன்-ஆமை முதலிய ஜன்மங்களெடுத்துழலத்தக்க பிருகுசா பம் பின்னேவருமென்றுணராமல் அவரது பத்தினியைக்கொன்ற பராக்ரமசாலி யாயினதாலோ?

சிமதுசக்கரத்தை விழுங்கியபூதம் இன்னதுஎன்று தெரியா மல் அதனைப்பெறுமாறு சிவபூதங்களின் முன்னின்றுகெஞ்சிக் கோ ணங்கிக்கூத்தாடி யாயினதாலோ?

தான் மலைப்பாம்பாகப்பிறக்க நேரிடுமேயென்று அறியாமல பொய்பேசியிழிந்த புருஷாரத்தமாயினதாலோ?

வீரபத்திரமூர்த்தி நம்மை நாகபாசத்தாற் கட்டியுருட்டுவா ரென்றறியாமல் தக்ஷயாகத்திற்குத் தலைவராயினதாலோ?

பிறன்பெண்டை விழைதல் பிழையென்றுணராமல் ஜலந்த ரன்பெண்டைக் களவிற்புணர்ந்த காமுகனாயினதாலோ?

அமிர்தத்தைநாடிய நம்மை விஷந்தோன்றிவெதுப்பி நமது வெளுத்தவுடலைக் கறுப்பாக்கிவிடுமேயென்று கருதாது கார்வண் ணனாயினதாலோ?

இத்தகைய ஸர்வஜ்ஞாதிசயங்களுக்கு இருப்பிடமாயுள்ள வர் விஷ்ணுவென்பதை யாம் ஆட்சேபிக்கமாட்டோம். இவரது தெய்வத்தின்கதியை யோசித்துப்பாராமல் எமது அப்பனுடைய ஒப பில்லாமணியைப் பிரஸ்தாபித்து, "பின்விளைவுதரியாமல் விருகா சுரனுக்குவரமளித்துத் திண்டாடியபடியாலும், புருஷோத்தமன் கொண்ட பெண்கோலத்தைக்கண்டு நாரியென்று மயங்கினபடியா லும, ப்ருகுமுதலிய முனிவர்களுடையமுன்பாகத் திகம்பரனாய்ச் சென்று அம்முனிவர்களுடைய சாபத்தினால் குறியிழந்தபடியாலும, சுடலைதேடி நடனம்புரிந்தமையாலும்" என்று தூஷித்தாராகையால், எமது கையிலேலங்கியஇறகை கண்டுகொஞ்சம் யாம் சலியாதோ டச்செயதோம். இவர்புலம்பிய சிவதூஷணங்களுக்குச் சிவபாரம்ய ப்பிரதரிசினி, சைவசூளாமணி முதலியநூல்களில் பரிகாரந்தேடி யருந்தலால், யாம் இம்மட்டில் உபரதியடைந்தாம். இனிமேலும் இவற்றை நமதன்பர்யோசித்துச் சிவநிந்தையிலிறங்காமல் விஷ்ணு ப்ரஹ்மேந்தராதி ஸர்வசேதநபதித்வம் சிவனிடத்தி னிலையிரு ப்பதுணர்ந்து, பசுபதியாகிய அப்பரஞ்சுடர்ப்பிரானைப் பணிந்து அஞ்ஞானபசுவாகிய தமதுபாசநிவர்த்தியைத்தேடி ஸுகிபபாராக விரிக்கிற்பெருகும்.

இனி நமதன்பர் எஜுர்வேதம் ஆருவதுகாண்டத்தில் "ருத் ரோரா வைக்ரூர; ஸோஸ்யத்விதிஸோப்ரவீத் வரம்வ்ரணை அஹமேவ'

பஶூநாமதிபதிரஸாநிதி தஸ்மாத்ருத்ர:பஶூநாமதிபதி: தாம் ருத்ரோ வாஸ்ருஜத்ஸதிஸ்ர: புரோபித்வைதேப்யோ லோகேப்யோ ஸுரா ந் ப்ராணுதத'' என்னும்வாக்கியம் ''சிவன் கொடூரமுள்ளவராகை யாலே வேதியர்களாகிய திரிபுரர்களை அஞ்சாமல் கொல்லத்துணிந்த வரொன்று தேவதைகள் அவ்வசுரர்களைக்கொல்லும்படி சிவனுக்கு உத்தரவுசெய்தார்கள். சிவனார் பாவம்பாராமல் அந்தப்படுகொலை யைத் தாம்செய்வதாகவொப்பி அத்திரிபுரஸம்ஹாரத்திற்குப் பிர திப்ரயோஜநமாகத் தான்பசுக்களுக்குப் பதியாகும்படி வரமளிக்க வேண்டுமென்று தேவதைகள்பால் வேண்டிக்கொண்டார். அவர் கள் அந்தப்படி சிவனுக்குவரமளித்தார்கள். அப்பால் சிவன் முப் புரங்களையுஞ்சுட்டெரித்துத் தேவதாவரப்பிரஸாதத்தினாலே பசுபதி என்னும் பட்டப்பெயர்பெற்றார்'' என்று தெரிவிக்கிறதெனவும், முதற்காண்டத்தில் ''ஆகுஸ்தேருத்ரபசுஸ்தம்ஜுஷஸ்வைஷ'த ருத்ரபாகஸ்ஸஹஸ்வஸ்ராம்பிகயாதம்ஜுஷஸ்வ'' என்னும் வாக் கியம் உருத்ரனுக்குரித்தானபசு ஆகுவென்றும், அதைச் சகோத ரிபோல் இதஞ்செய்யுமவளாகிய அம்பிகையோடு ருத்ரா நீஅடைய க்கடவாயென்று தெரிவிக்கிறதெனவும்விரித்து, ''இதனால் சிவன் முப்புரங்களையழித்ததற்குக் கைக்கூலியாகத் தேவதைகளிடத்திலி ருந்து வரத்தின்மூலமாய்ச் சம்பாதித்தபசு ஆகுவென்பது ஸ்பஷ்ட மாகிறதன்றோ? ஆகுவென்பது சிவனார் மூத்தகுமாரர் ஏறிச் சவாரி செய்யும் வாகனமேயாம்'' என்று பரிகாசஞ்செய்தார். இவரது திருமகனார் வைகுண்டம்ஐயங்கார் வாய்மாண்டுபோனதுபோல இவர் சீர்மாண்டுபோகச் சிலவீண்டுக்கூறுவாம்.

இவர் எழுதிக்கொண்ட வாக்கியத்தின்றலைப்பிலுள்ள ''ருத் ரோவைக்ரூர:'' என்பதும், பின்னர்ப்போந்த ''தஸ்மாத்ருத்ர:பசு நாமதிபதி:'' என்பதும் திரிபுரஸம்ஹாரவிஷயமாக எழுந்தவசனங்க ளாகா. இடையிற்போந்த வசனங்களுக்கு சமதன்பர் தப்பர்த்தஞ் செய்து தமொறியதற்கு அவற்றைஆதாரமாகப் பொருத்திக்கொண் டார். அவரெழுதியவுரையில், (வேதியர்களாகிய திரிபுரர்களை அஞ் சாமல் கொல்லத்துணிந்தவரொன்று தேவதைகள் அவ்வசுரர்களைக் கொல்லும்படிச் சிவனுக்கு உத்தரவுசெய்தார்கள். சிவனார் பாவம் பாராமல் அந்தப்படுகொலையைத் தாம்செய்வதாகவொப்பினார். அவ ர்களைக் கூலிகேட்டார். தேவதாப்பிரஸாதத்தினாலே பசுபதி என் னும் பட்டப்பெயர்பெற்றார்) எனப்போந்த பிரயோகங்களுக்கு அவ ர்தேடிய சுருதியில் ஆதாரமாய்நின்ற பதங்கள்யாவை? இஷ்டவிகா தம் பண்ணிக்கொள்ளாமல் மூலத்திலில்லாத அபார்த்தங்களெழுது

வது அல்பருக்கேஅடுக்கும். இனி அதனுண்மையை யோசிப்பாம. அதில், "அஹமேவபசூநாமதிபதி:" என்று சிவன் தேவர்கள்முன்பு கூறினதாகப்பேறப்படுகின்றது. அந்தத்தேவர்கள் விஷ்ணுமுத லானவர்களே. விஷ்ணுவை அத்தேவகூட்டத்தினின்றும் தப்ப வைக்க ஐயங்காரால்முடியாது. எனெனின், சிவபெருமான் இரதி கரானபோது அவராதுஹஸ்தத்தில் ஜடமாகிய பாணரூபந்தாங்கி நின்றவர் அவ்விஷ்ணுவே. இப்படியே பிர்ஹ்மாமுதலாயினோரும் அவருக்கு ஸாரதிமுதலான ஏவலாளராக அமைந்தார்கள். இப்பெருந்தேவர்களுக்கு முன்னின்று "நானேபசுபதி" என்று சிவன் பிரஸ்தாபித்தமையால், விஷ்ணுமுதலிய பசுக்களுக்கே அவர் பதியாயினரொன்பது ஸித்தம். அதில், "வரம்வ்ரணே" என்று படிக்கப் பட்டமையால், அஹமேவபசூநாமதிபதி: என்பது சிவனார்கேட்ட வரமாகவன்றோ பெறப்படுகிறதெனின், அங்ஙனமாகாது. சிவனார் வரங்கேட்டதுண்டாயின், அவருக்கு அவ்வரங்கொடுக்கத்தக்கவர்கள் அவரிலுயர்ந்தவராகவேண்டும். அவருள் விஷ்ணுவை யோசிக்கின், அவர் சிவன்கையில் அம்பாகச்சமைந்தார். அம்பானது எய்பவனது பரிசம்பெறுதபோது அசையவும் யோக்யதையற்றுக் கிடக்கும். அசைவித்தாலே அசையும். இதனால் சிவனாரதுஸந்நிதியில் விஷ்ணுவினது அளவு ஏற்பட்டது. பிரஹ்மாவோ எனின், அவர் சிவனுக்கு ஸாரதியாயினர். சாரதியினதுயோக்யதை எஜமானனுடைய ஆஜ்ஞையைப் பின்செல்லத்தக்கது. இதனால், சிவஸந்நிதியில் பிரஹ்மா அஸ்வதந்திரரென்பது ஸித்தித்தது. பெரியதேவர்கள்களையே இவ்வாறுமுடிந்தால் நாரியாகிய சேஷனையும், குதிரைகளா[illegible]தங்களையும், இரதமாகிய பூமியையும், இரதாங்கங்களாகிய ஏனையதேவர்களையும் சிவஸந்நிதியில் ஓர்பொருளாகவும் மதித்தல்கூடுமோ? இவர்கள்யாவரும் இரதிகரும், கியாயமகருமாகிய சிவனாரது ஆணையில்அடங்கினவரோயாயினர். இந்த முடிவால் பிரபுவாகியபரமேசுவரர் ப்ருத்யர்களாகிய விஷ்ணுமுதலாயினோரை வரங்கேட்டாரென்பது அஸங்கதமேயாம். இனி "வரம் வ்ரணே" என்புதற்குக் கதியென்னையெனின், அதனையோசிப்பாம். சுருதி "ப்ருதிவ்யோபவ, ஆபச்சர்வ, அக்னேருத்ரோ, வாயுர்ப்பீம, ஆகாசஸ்யமஹாதேவ, சூர்யஸ்யோக்ர:, சந்த்ரஸ்யஸோம, ஆத்மாந:பசுபதி:" என்றுகூறுகின்றது. இதில் சிவனாரதுஅஷ்டமூர்த்தங்கள் கேட்கப்படுகின்றன. இவ்வஷ்ட மூர்த்தத்துள் ஒவ்வொருதநுவுக்குஞ் சைதந்யங்கூறிவந்து ஆத்மாவைப்பிரஸ்தாபிக்கையில், அதனைத் தநுவாகவுடையசைதந்யம் பசுபதி என்று

படிக்கப்படுகின்றது. ஆத்மாவுக்கு ஆத்மாவாயுள்ளது பரமாத்மா
என்னும் பெயர்பெறும். ஈண்டு ஆத்மாவைப் பசு என்றுகொண்
டே பரமாத்மாவைப் பசுபதி என்று வேதம்படித்தது. இதனால், பசு
பதி என்பது சிவனாது சேதனபதித்வத்தையே வியக்தமாக்கியது.
ஜீவா: பசவ உக்தா:" எனவும், "தத்பதித்வாத் பசுபதி:" எனவும்
பிரமாந்தசுருதிகளை முன்பே உதகரித்திருக்கின்றோம். இவற்றால், சிவ
னுக்குப் பசுபதித்வம் ஆகந்துகமெனலழிந்து ஸஹஜமென்பதே
பத்தியமாயிற்று. இந்தச்சுருதிகளோடுதானே "அஹமேவபசூநா
மதிபதி:" என்னுஞ் சுருதியுஞ்சேர்ந்து நிலைபெறும். இவற்றோடு
ராணமும் மூரணாது. இங்ஙனமாக, நமதன்பர் பசுபதித்வம் சிவனு
க்கு வந்தேறியென்று சாதிக்கவகைதேடியது என்னமதி? தேவர்க
ளுக்கு "ஸர்வேதேவா: பசவோ ஈமவாப:" என்று வேதம்பேரிட்டமை
யாலும், அத்தேவர்களைப்பார்த்து "அஹமேவபசூநாமதிபதி:" என்
று சிவனார்கூறினமையாலும், விஷ்ணுவாதிகளை "அத்யாஸவசாஞ்சீ
:" என்று சுருதி நிச்சயித்தமையாலும் இவற்றிற்கு விரோதமாக
வொன்றைச்சாதித்தல் கூடாது. ஆகையால், தேவர்க்களிடமிருந்
து பசுபதித்வமாகியவரத்தைச் சிவனார்வேண்டினார் என்பதற்குப்
பின்வருமாறு பொருள்கோடலே அமைவுடைத்து. பசுக்கள் பாச
பத்தர்களாகையால் அவர்கள் தங்களுக்குப்பதியாகிய சிவனைமறந்
து தற்போதத்தால் தங்களையே பதிகளெனவகங்கரித்துச் சிக்ஷை
கைக்ஷகளையடைதல் அநுபவஸித்தம். இரணியன் - சூரன் - தக்ஷன் -
இந்திரன் - பிரஹ்மா - விஷ்ணு முதலினோரே இதற்குஸாட்சிகள்.
இவர்களில் இரணியன் - சூரன் - தக்ஷன் என்பவர்களதுகதைகளை யா
ருமறிவார்கள். இனி இந்திராதிகள் அகங்கரித்தகதைகளே தெரி
த்தக்கவை. இந்திராதிகளுடைய அகந்தையைச் சிவன் ஒரு யக்ஷ
ரூபந்தாங்கிவந்து அடக்கியகதை சூதஸம்ஹிதையிற் கேட்கப்படுகின்
றது. அதிற்றானே திருமாலகப்பாவத்தை நந்திபிரான்தவிர்த்தருளி
யகதை படிக்கப்பட்டிருக்கின்றது. பிரஹ்மவிஷ்ணுக்கள் நானே
பரம் நானேபரம் என்று சண்டையிட்டுச் சிவனாது அடிமுடிதேடி
யலுத்ததும், பிரஹ்மாவினது அகந்தை அவரது சிரசகண்டிக்கப்பட்
டதாலழிந்ததும் வேதபடிதயாயுள்ளன. இன்னனபலவுள. இன்
னோர் ஜீவர்களேயாகையால் இவர்களுக்கு இவ்வகந்தை அடிக்கடிப்
பாசிபோல்வந்துமூடுவது ஸஹஜம். அவ்வப்போது இவர்களைச் சி
க்ஷிப்பதும், இரக்ஷிப்பதும் சிவனாதுஅருளியற்கை. இதுநிற்க.

திரிபுரர்களால் தேவர்கள் பெருந்துன்பமடைந்து சிவனை
அடைக்கலம்புகுந்து எங்களைரக்ஷிக்கவேண்டுமென்று இரந்தார்கள்.

அதனைக்கேட்டசிவபிரான் திருவுள்ளமிரங்கி உங்களை நீங்கள் பதி என்று கொண்டிருப்பதை எமக்கு அர்ப்பணம்பண்ணி விடுவீர்களானால், நாம் திரிபுரஸம்ஹாரம்பண்ணி உங்களைரக்ஷிக்கின்றோம் என்றுகூறினர். அதாவது நீவிர் பசுக்களென்பதை மறந்து நம்மையே பதிகளெனத் தனித்தனி மயங்கியிருக்கின்றீர்களாகையால், அந்தத்தீயவெண்ணத்தை மாற்றிவிடுங்கள் என்பதாம். அப்படி அவர்கள்செய்வதனால் அவர்களது சொந்தமாகிய பசுத்வத்தைத் தெளிந்து சிவனாரதுசொந்தமாகிய பதித்வத்தை அவருக்கு அளித்தவராகத் தட்டில்லை. இவ்வுண்மைதேர்ந்தவர்கள் சிவனார்கேட்டவரமினைத்தென்று அறியாமற்போகார். சிவபெருமான் இதமாகப் பேசித் தேவர்களைக் குணப்படுத்தினமையால், வரத்தைக்கோரினார் என்றுபடிக்கப்பட்டது. ஒருபிதா தனதுபிள்ளையைப்பார்த்து நானே உனதுபிதா என்னும்வரத்தை எனக்குக்கொடு என்று கோரியதாக நாம் ஒப்புவோம். இதற்குப் பொருளென்னை? என்னிடத்தில் பிதா என்கிற மரியாதையும் அச்சமுமின்றி இதுகாறும் நீ கெட்டலைந்தது போல் இனியுங்கெடாமல் பிதா என்னும்உரிமையை என்னிடம் பாராட்டி எனதுகட்டளையினின்று சுகிக்கக்கடவாய் என்று இதங்கூறினதாகவேயன்றோ முடியும்? இதனால் பிதாவுக்குக் கௌரவங்குறைந்துவிடுமோ? பிள்ளை க்ஷேமப்படுவதேயன்றோ பிதாவுக்கு முக்கியம்? இப்படியே பசுபதியாகிய சிவன் பசுக்களை இதஞ்செய்தால் தமதுவசப்படுத்திக்கொண்டாரென அறிக. பசுக்கள் தமது அகங்காரவடிவமாகிய ஸ்வதந்திரமொழிந்து தாம் பாரதந்திரரென்று அங்கீகரித்துக்கொண்டமையே அவர்கள் பசுபதித்வம் ஆகிய வரத்தைச் சிவனாருக்களித்ததாம். எனவே, சிவனே சுதந்திரரெனத் தெளிந்து அவருக்கு யாவருமோரோகாலத்தில் ஊழியர்களாகநின்று அடங்கினமையே முடிவாயிற்று. பசுவைநோக்கப் பாசத்துக்கு இயக்கமின்மையும், பதியைநோக்கப் பாசத்துக்கும் பசுவுக்கும் இயக்கமின்மையும் ஸித்தமாகையால், சிவஸந்நிதியில் விஷ்ணுவாதி சேதநங்களும், பூம்யாதிஅசேதநங்களும் இயங்கப்பெற்று முறையே பசுவும் பாசமுமாக வெளிப்பட்டன. சிவன் அவற்றை இயக்குந் தலைவராகிப் பசுபதி என வெளிப்பட்டனர். நமதன்பர் பிரஸ்தாபித்த திரிபுரஸம்ஹாரப்பிரஸங்கத்தாற் போதருமுண்மையை ஈண்டியாம் பிரகாசப்படுத்திவிட்டோமாகையால், இனிச் சிவனாருக்கு அபகர்ஷந்தேடிய ஐயங்காரது முகம் அதோமுகமாகவேண்டியதே. இவ்வுண்மைதெளிந்த விவேகிகள் "அஹமேவபசூநாமதிபதி:" என்னுஞ்

சைவநலத்தையறிந்து ஆநந்தியாமற்போகார். விரிக்கிற்பெருகும். இதுநிற்க.

நமதன்பர் சிவனுருக்குத் தேவர்களளித்தவரம் "ஆகுஸ்தே ருத்ர" என்னும்வசனப்படி பெருச்சாளி ஆகியபசுவுக்குப் பதியாவ தொன்றேயெனப் பிரஸங்கித்தாராகையால், அதனையும் சற்றுயோ சிப்பாம். இவர் திரிபுரஸம்ஹாரத்துக் காதாரமாகத்தேடிய பிரமா ணம் எஜுர்வேதம் ஆறுவதுகாண்டம். அந்தஸம்ஹாரத்தைமெச்சி அவருக்குக் கூலிகொடுக்கத்தேடிய பிரமாணம் எஜுர்வேதம் முதற் காண்டம். முதற்காண்டத்தில் ஸம்ஹாரமும், ஆறுவதுகாண்டத் தில் அதற்குக்கூலியும் பிரஸ்தாபிக்கப்படின், ஒருவாறு அமையும். அங்ஙனமில்லாமையால், ஐயங்காருக்குப் புலம்பலே பிரயோஜன மாயிற்று. இவர்தேடிய முதற்காண்டம் யாகவிஷயத்தைக் கூறுவது, அதில் திரிபுரஸம்ஹாரப்பிரஸங்கமே கிடையாது. திரிபுரஸம்ஹா ரத்தைக்கூறும் ஆறுவதுகாண்டத்தில் ஆகுவினது பிரஸ்தாபமே கிடையாது. நமதன்பர் மொட்டந்தலைக்கும் முழங்காலுக்கும் முடி போட்டுவைத்தார். அந்தமுடி அறுந்துபோகாமல் நிலைப்பதெங்ஙு னம்? ஆகுவைப் பிரஸ்தாபித்தகாண்டம் யஜ்ஞவிஷயமாகையால், அதில் "ஹேருத்ர! உனக்கு ஆகுபசு. அதனைக்கிரகித்திடு" என்றது ஸாமஞ்சஸமேயாம். சிவனைக்குறித்து யாகஞ்செய்யுங்கால், யாக பசுக்கள் அஜம், கோ, அசுவம், நரன் எனப் பலவிதமாகச்சிறக்கும். "ரௌத்ரீர்கவ்கேள:" என்னும்வசனம் கோவானது ருத்ரஸம்பந் தம் என்று தெரிவித்தது. "அயம்ஸோம:கபர்த்திநேக்ருதம்" என் னும்வசனம் ஸோமலதை கபர்த்தியாகிய சிவனதுஸம்பந்தம் என்று தெரிவித்தது. "இமம்பசும்பசுபதே" என்னும்வசனம் ஹேபசுபதி! இந்தப்பசுவை உன்பொருட்டேகட்டுகிறேன் என்றுதெரிவித்தது. "ரௌத்ரம்ஹவி:" என்னும்வசனம் அவிசுஉருத்திரஸம்பந்தம் என் று தெரிவித்தது. "இவற்றோடொன்றாகவே ஆகு உனக்குப்பசு என்னுஞ் சுருதியுஞ்சேர்ந்து கதம்பெற்றது. ஆகு என்பது பெருச் சாளி, காட்டுப்பன்றி என்னும்பொருள்களைத் தரலால், ஈண்டு ஆகுஎன்பது வராகமேயாம். அவ்வராகம் விஷ்ணுவேயாம். வராக ரூபியாகிய விஷ்ணுவை யாகப்பசுவாக்கித் தேவர்கள் யாகஞ்செய் தார்களென்று "யஜ்ஞேநயஜ்ஞமயஜந்ததேவா:" என்று சுருதி படித்தமையால், ஆகுஸ்தானத்தில் விஷ்ணுவாகிய வராகபசுவே நிலைத்தது. நமதன்பர் ஆகுவைப் பிரஸ்தாபித்துச் சகோதரி போல் 'இதஞ்செய்யுமவள் அம்பிகையென்று தெளிபொருள் நிட் டினரன்றோ? ஆகு என்னும்வராகம் விஷ்ணுவாயினமையால், அ

ம்பிகைக்கு ஸகோதரியாகக் கூறியது ஸாமஞ்சஸமாகலாம். எமது கருத்தோவெனின், ("ஹேருத்ர இந்த ஆகு உனக்குப்பசு. இதனை நீகிரகித்திடு. ஸ்வஸ்ரு ரூபியான அம்பிகையோடுகூடிய ஹேருத்ர! இந்தப் புசபாகத்தைக் கிரகித்திடு" என்று விளக்குவதேயாம். சிவசக்திகள் முன்னும்பின்னுமாகப்பிரஸ்தாபிக்கப்படும் ஹேதுவால் சிவத்துக்குச் சக்தியைச் சகோதரி என்று உபசரித்ததாயிற்று. மனைவி என்பதும் இதுபோன்றதேயாம். இன்னும் புத்திரி என்பதுங் கூடும். மூன்றுவிதமும் ஸாமஞ்சஸமாயினமையால், ஈண்டுச் சகோதரி என்றது ஸர்வஸம்பிரதிபந்நமாயிற்று. இந்தவுண்மையால் நமதுஐயங்காரதுவாதம் அஸங்காத்மவாதமாயினதே ஸித்தம். இது நிற்க.

இவர் தேவர்கள் சிவனுக்குக்கொடுத்த பெருச்சாளியின்மேல் அவரதுமூத்தமகனார்ஏறிச் சவாரிசெய்கின்றார்என்று இழிவுகூறினாராகையால், அதனையுங்கொஞ்சம் யோசிப்பாம். பெருச்சாளி அசுத்தஜந்துவென்பது நமதன்பரதுகருத்து. இவரதுதெய்வமாகிய நாராயணர் ஏறித்திரியும் பருந்து என்ன சுத்தஜந்துவோ? சுடுகாட்டிற் பிணங்களைப் பிடுங்கித்தின்னும் ஈனஜந்துஅது என்பதை இனியேனும் யோசிப்பாராக. கிளி-மயில்-புறவு-நாகணவாய் முதலியபட்சிகளைப்போல அருமைபாராட்டத்தக்கதோ அது? மூஷிகத்தை நமதன்பர் தூஷித்தமையால் பருந்தின்செய்லை யாம் பரக்கத்திட்டினும். சிவனாரது பசுபதித்வத்தையழிக்க இவர்பட்டபாடெல்லாம் பாழாய்விட்டதோடு விஷ்ணுவின் றலையிலேறிய பச்சுத்வம் இறங்கவழியில்லாமலேபோய்விட்டது. ஆகுவாகியபசுவுக்கே சிவன்பதி என்று அவர் தேடியகதியும் நாராயணமாகியவிஷ்ணுவைத் தொடர்ந்துபற்றி அவருக்கு அநிஷ்டத்தையே யுண்டுபண்ணியது.

இனிச் சிவன் ஆகுவுக்குப் பதியாதல்கொண்டே பசுபதிப் பெயர் தாங்குவரானல், பருந்துக்கும் குரங்குக்கும் பதியாகிய நாராயணர் பசுபதிஆகாத்து என்னோ? ஆகு-பசு எனபன பர்யாயபதங்களாயின், ஆகுபதி அல்லது பசுபதி என்றழைக்கலாம். அவை பரியாயங்களாகாமையாலும், பசுவாகிய பருந்தையும், குரங்கையு மூர்வாரைப் பருந்தின்பதி-குரங்கின்பதி என்பதேயன்றிப் பசுபதி என்பது வழக்கின்மையாலும் ஆகுவையூர்ந்திடுவாரை ஆகுபதி என்பதேயன்றிப் பசுபதி என்று பண்டிதர் கூறிப் பரிசமெய்தாரென்க. தேவர்கள் சிவனுக்குக்கொடுத்த ஆகுவை அவர் விநாயகருக்குக் கொடுத்திருப்பின், அவ்வாகுவை அங்கீகரித்தலால் சிவனாருக்குவந்த பசுபதிப்பெயர் விநாயகருக்கும்வரவேண்டும். சிவனுக்கு ஆகுவாகனர்

என்னும்பேரில்லை. விநாயகருக்குப் பசுபதி என்னும்பேரில்லை. சிவனாரதுபசுபதித்வம் ஆகந்துகமாகாமையால், அது விபசரிக்கமாட்டாதென்க. "அஹமேவபசூநாமதிபதிஃ" என்று கம்பீரமாகப் படிக்கப்பட்டிருக்குஞ் சிவவாசகத்தினருமை வெகுபுண்ணியமுடையார்க்கே விளங்கும். வேதம் எமக்குப்பிரமாணம் என்று சொல்லிக்கொண்டு, அதனை இஷ்டம்போலெல்லாம் நிலைகுலைந்திட்டச்சிதைத்துச் சீரழிப்பதும் ஒருவைதிகமா? சிவாபராதிகள் கூட்டுறவு அம்மம்ம நஞ்சினுங்கொடிது!

இனி, நமதன்பர் சிவனாருக்குத் தேவர்கள்கொடுத்த கூலியாகப் பசுபதித்வத்தைச் சாதிக்கத்தேடியசுருதியில், "தாந் ருத்ரோவாஸ்ருஜத்" என்று படிக்கப்பட்டிருக்கின்றது. இதற்கு அந்தப்பசுக்களை உருத்திரர் சிருஷ்டித்தார் என்று பொருளுண்டாகின்றது. அன்றியும், "ஸுராந்ப்ராணுகத" என்னும் பகுதியால் சிவனார் திரிபுரங்களைப்பேதித்துத் தேவர்களைரக்ஷித்தார் என்று தெரிவிக்கின்றது. இவற்றுள், அந்தப்பசுக்களைச் சிருஷ்டித்தார் என்பது விஷ்ணுவைபாணமாகவும், பிரஹ்மாவைச் சாரதியாகவும், மற்றவர்களை மற்றும் ரதாங்கங்களாகவும் சிவனார் அமைத்துக்கொண்டமையேயாம். தேவர்களை ரக்ஷித்தாரென்பது திரிபுரங்களை நகையாலழித்து அவர்களதுபயத்தைப் போக்கினாரென்பதேயாம். இதன்விரிவைச் சிவார்க்யரத்நாவளி 2-வதுபாகத்திற் கண்டுதெளிக. இவ்வுண்மைகளால், "அஹமேவபசூநாமதிபதிஃ" என்றசுருதி சிவஸர்வோத்தமத்தைப் பிரதிபாதித்ததெனலே சரதமாயிற்று. இதனருமையை அழிக்கத்தலைப்பட்ட ஐயங்காரதுமனோரதம் இனிஜீவிப்பதெங்ஙனம்? ஜீவிப்பது கஷ்டமேயாம். இதுகாறும் யாம்விவகரித்த சுருதிகளையன்றி "ப்ரஹ்மாதிஸ்தம்பபர்யந்தாந்-பசூந்பத்வாமஹேச்வர:" எனவும், "யூயந்துபசவஸ்ஸர்வே, பசூநாம்பதிரீச்வர:" எனவும், "ஸ்வதஸ்ஸித்தம்பதித்வம்மே, யுஷ்மாகம்பசுதாபுந:" எனவும்போந்த சுருதியுப்ப்ரஹ்மணங்களுஞ் சிவனாரதுபசுபதித்வத்தை இனிது பிரகாசப்படுத்தின. அன்றியும், "நதஸ்மாததிகம்கிஞ்சித்-தத்வம்தத்வித்திசாங்கரம்" என்று ஆதித்யபுராணம் மேலானசிவதத்வமே அடையத்தக்கது என்பதனை நிரூபணஞ்செய்தது. இச்சிவபரஞ்சுடரை

"அநுபமம் சிவம்சாந்தம்"

"சாந்தம் சாச்வதம் ஸதாசிவம்"

"சிவம் ப்ரசாந்தம்"

"நீலகண்டம் ப்ரசாந்தம்"

"ஸத்வஸ்யைஷப்ரவர்த்தக:
ஈசானோஜ்யோதிரவ்யய:"

என்று உபநிஷத்துக்களெழுந்து கோஷிக்கின்றன. இவ்வுண்மையைத் தெளிந்தவர்கள் "ருத்ரோவைக்ரூர:" என்னும்வசனத்தால் சிவாபகர்ஷஞ் சாதிக்கத்தலைப்பட்ட ஐயங்காரது காதைப்பிடித்தாட்டாமற்போகார்கள். சாந்தமும், க்ரூரமுமாகிய இரண்டுக்கும் ஸ்ரீசிவபெருமான் கர்த்தா என்பதே முடிவு. ஸ்ரீபரமேசுவரர் பஞ்சக்ருத்யஸம்பந்நராகையாலும், "ஏகாவஸ்தோவைபசவோ த்விபாதச்சதுஷ்பாதச்ச - தஸ்மாத்ருத்ர:பசூநாம்பதி:" என்ற சுருதியின்படி அவர் ஸர்வசேதநபதியாகின்றமையாலும், அப்பசுக்களுக்குச் சிக்ஷா ரக்ஷணைகள் செய்வது அவரது கருணையாகின்றமையாலும், அவரை "சங்கரோபக யாஜ்ஞேயோ ரக்ஷகஸ்ஸதா: ப்ரஜா:" என்று சுருதி கூறுகின்றமையாலும் அவர்பாலேற்றியக்ரூரசாந்தங்கள் அவரது கல்யாணகுணங்களேயாயின. இவற்றையுணராத ஐயங்கார் சிவனைக்குரூரன் என்று தூஷித்துவிட்டதுகொண்டே அச்சிவனாரது குடியொன்றும் முழுகிப்போகவில்லை. இவ்வளவேயன்றி நமதன்பர் பின்வசனங்களையும்பார்த்து அடங்குவாராக.

"ஜ்யோதிர்மயச்சிவ:"
"ஸர்வாநந்தமயச்சிவ:"
"ஜகத்வாரதேவம் ஸதாசிவம"
"ஸவ த்மாநஞ்சசிவம்த்யாயேத்"
"ஏக ஏவசிவோநித்ய
ஸ்ததந்யத்ஸகலம்ம்ருஷா"

என்னுமிந்தச்சுருதிகள் சிவனாரது பரமகாரணத்வம் போதரவே இனிதுவிளக்குகின்றன. இவற்றைத் தெளிந்தடங்குதலின்றிப் பூர்வபக்ஷிகள் எண்ணியபடி வதிலென்னையன்? இனியேனும் நமதன்பர் சிவனே பரம்பொருளெனத்துணிந்து பசுபதியாகிய அவரது ஸ்ரீபாதத்தைப்பூசித்து க்ஷேமமடைவாராக.

இவ்வஸங்காத்மவாதி இத்தோடேதோன்றாமல் "நம்சிவனார் கூர்மத்தையும் வராகத்தையுங்கொன்று அதினுடைய அவயவங்களையும், பிரமன்தலையையும் தன்னுடம்பில்தரித்திருப்பதாகச் சொல்வதின் கருத்தென்னை? அபிராதியைச் சிக்ஷித்தபெருமைதோன்ற, அந்த அவயவங்களைச் சிவபெருமான் தரித்திருக்கிறாரென்று சொல்வீரேல் அரசன் ஒருவனைக்கொலைவாங்கினால் அவனுடைய உடல் முதலானதுகளைத் தரிப்பது அவசியந்தானோ? உள்ளதுசொன்னால்

கோபம்வரும்" என்று பரிந்தழுதார். இவர் ஒருபோது ஏசுமதத் தவனை யெதிர்த்துப் பேர்பெற்றவர். அதனால் இனி ஒருவேளை அவர்கள் நம்மையெதிர்த்து (பஞ்சஜநாசுரனைக்கொன்று அவனுடைய எலும்பையே பாஞ்சஜந்யம் என்னுஞ் சங்கமாக்கி நாராயணர் தரித்திருப்பது எதன்பொருட்டு) என்றுகேட்டால் நாம் என்னபதில்சொல்வது என்றுஏங்கியே அத்தகையகேள்விகள் எம்மைக்கேட்டார். அவர்கேட்டவற்றுள், சிவனார் பிரஹ்மகபாலந்தரித்திருப்பது "விஷ்ணோரபிசிரோபித்வா-லலாடேசூலபாதநாத்" என்ற சுருதிவசனப்படி அவர் விஷ்ணுவைச் சூலத்தினால் நெற்றிமீதுகுத்திவாங்கிய ரக்தத்தைப் பிடித்துவைத்ததற்கேயாம் என்று ... யாம் தெரிவித்தோம். மற்றசங்கைளும் நிவராணமாகவேண்டின் "க்ருபயா பகவாந்விஷ்ணும்-விததாரநகை:கரை:,சர்மாம்பரோ" என்னுஞ்சுருதியினது அர்த்தமாகிய (சிவனார் ... லின்தோலைமாத்திரம் நகங்களாற்கிழித்து அரையில் வஸ்திரமாகக் கொண்டவர்) என்னுஞ் சிவமகிமையை முதல்ஒப்பி வெளிவருவாராக. அவரங்ஙனம்வெளிவரின், அநந்தரம் சிவனார் மீனினதுகண்ணையும், ஆமையினதுஓட்டையும், பன்றியினதுகொம்பையும், வாமனனதுஎலும்பையுந் தரித்தார் என்றுகூறுஞ் சுருதியையுங்காட்டி அவைகளை அச்சிவபெருமான் என்றரித்தார் என்னுங்காரணத்தையும் நமதன்பருக்குணர்த்துவோம். இவைகளையுணர்ந்தார் ஒப்பாதபட்சத்தில் சிவபுராணங்களைத் தாமஸங்களென்று தள்ளியமுவது போல் இவ்வுபநிஷத்துகளையுந் தாமஸோபநிஷத்துக்களென்று தள்ளிநான்வேதபாஷ்யன் என்று இனி அவர்வெளிவரவேண்டியதே.

இவரதுதெய்வமாகிய நாராயணர் பிருந்தாவனத்தில்பசுக்களைக் கொளுத்திய சுடுகாட்டுச்சாம்பலின்மூலைத்த பச்சைத்தழையைத் தரித்திருக்கும்விஷயத்திலும், அவர் முரனைக்கொன்றதனால் முராரி என்றும், கம்ஸனைக்கொன்றதனால் கம்ஸாரி என்றும் பேர்பெற்றிருக்கும்விஷயத்திலும் இவருக்கு ஸந்தேகமிருக்கலாம். சுடுகாட்டுத்தழையை அவர்தரித்தது காமமாகியகவலைக்கடலில்வீழ்ந்து கரையேறமாட்டாத காரணம்பற்றியேயாம். இதற்கு வேறுகாரணமிருந்து நமதன்பர்கூறின், எமக்குஸந்தோஷமே. முராரி-கம்ஸாரி விஷயமோவெனின், அரசன் ஒருவனைக்கொலைவாங்கினால் அவனைக்கொன்றவிரோதி என்னும்பொருடோன்ற ஒருபேர்தாங்குவது ஆவசியகமோ? என்றுகடாவிநமதன்பர் ஒழிக்கவேண்டியதே. நமதுஐயங்கார் விஷ்ணுவினதுபேரையழிக்க வெளிவந்தது அவ்விஷ்ணுமூர்த்தியினது தவங்

தான்போலும். இனி அவ்வஸங்காத்மவாதியினது அவிவேகத்தைக் கண்டு விவேகிகள் நகையாமற்போகார்.

இம்மட்டோ, நமதன்பர் நியாயசாஸ்திரத்திலுங் கொஞ்சம் நுழைந்தார். எங்ஙனமெனின், "துரீயசிவனாகியபக்ஷமும், இராமர் செய்ததாகச் சொல்லப்படும் பூசையாகியஏதுவும் உம்மாலும்நம் மெதிரிகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கவேண்டும். வாதிபிரதி வாதிகளுக்கு மலையிலும் புகையிலும் விவாதமில்லை. விவாதமுள்ளது நெருப்பில்மட்டும். அதுபோல் துரீயசிவனிலும் இராமன் செய்ததாகச் சொல்லப்படும்ஏதுவிலும் வாதிப்பிரதிவாதிகளுக்கு விவாதமின்றி நீர் சாதிக்கப்புகும் மேன்மையின்மட்டும் விவாதமிருக்குமாயில் அதைச்சாதிக்க உமக்கு அதிகாரம்கிடைக்கும். அநுமாநாங்கங்களாகிய பக்ஷஸாத்யஏதுக்கள் மூன்றிலுமே பிரதிவாதிகள் உமக்கு எதிரிகளாயிருக்கின்றார்கள்" என்று தமதுகையைக்காட்டியிருக்கின்றார். இதனையும் எமது நியாயசாஸ்திரங்கொண்டு பேசுப்பாம்.

இவர் மலைதுரீயசிவனாகவும், இராமன் அச்சிவனைப் பூசித்ததாகச்சொல்லப்படுவது புகையாகவும், அவர் பூசித்ததனாலேற்படுஞ் சிவபரத்துவம் நெருப்பாகவும் நிரூபித்து, துரீயசிவன் பக்ஷமும், இராமனதுசிவபூசை ஹேதுவும், சிவனாரதுபரத்வம் ஸாத்யமுமாதலை விளக்கினார். மேல் துரீயசிவன் வேதத்திற்பெறப்படாமையால் மலையாகிய பக்ஷவிரோதமும், மலையில்லாதபோது அதிற்புகையுண்டாகாதாகையால், அச்சிவனை இராமன் பூசித்ததாகச்சொல்லப்படும் ஹேதுவிரோதமும், மலையும்புகையுமில்லாதபோது நெருப்பைக்காண்பது கூடாதாகையால் சிவனார் பரதத்வமாயினரென்னும் ஸாத்யவிரோதமு முண்டாவதாகவுஞ் சாதித்தார். நமதன்பர் துரீயசிவனிருப்பு ஆகாசத்தாமரை என்றுசொன்னது கண்ணுங்காதுமிழந்த காடன்கதையோடுதானே சேரும். எங்ஙனமெனின், கண்ணுங்காதுங் கெட்டவொருவனுக்கு ஓரரியமாணிக்கத்தைக்காட்டினும், அதன் பெருமையையெடுத்துஅவனுக்குரைப்பினும் பயன்படாவாறு துரீயசிவனிருப்பு நமதன்பரால் வேதங்களிற்பார்க்கப்பெற்றும், ஸாதுக்கள்வழியாகக் கேட்கப்பெற்றும் அவருக்குப் பயன்படாதொழிந்தது. குருடனுக்கு அம்மணிபிரயோஜநப்படாமற்போயினும், மற்றையருக்குப் பிரயோஜநமாகத் தட்டில்லையாகையால், துரீயசிவனை நமதன்பரொப்பாதது எமக்குத்தீங்குசெய்திலது. "ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரேந்த்ராஸ் ஸம்ப்ரஸூயந்தே நகாரணம், காரணந்துத்யேயச்

சம்பு:" என்று துரீயசிவனை அதர்வசிகை இனிது சாதித்தமையால், அதனுண்மையை மத்யஸ்தர்கண்டு ஸந்தோஷிப்பதேபோதும். நமதன்பர் துரீயசிவம் உமாஸஹாயத்வாதி லிங்கங்களோடுகூடியதென்பதற்குப்பிரமாணமில்லையென்று அமுதத்தைக் கைவலயம், மண்டலப்ராஹ்மணம்,யோகதத்வமுதலிய வுபநிஷத்துகளா லோயப்படுத்தினோம். மந்தமதிகள் தெளியுமாறு ஈண்டுமொருசுருதியை யெழுதுகிறோம்.

(பஸ்மஜாபாலம்)

"கைலாஸசிகராவாஸ மோங்காரஸ்வரூபிணம் மஹாதேவ முமார்த்தக்ருதசேகரும் ஸோமஸூர்யாக்னிநயந மநந்தேந்துரவிப்ரபும் வ்யாக்ரசர்மாம்பரதரம் ம்ருகஹஸ்தம் பஸ்மோத்தூளிதவிக்ரஹம் திர்யக்த்ரிபுண்ட்ரரேகாவிராஜமாந பாலப்ரதேசம் ஸ்மிதம்ஸம்பூர்ணபஞ்சவிதபஞ்சாநநம், வீராஸநாரூட மப்ரமேய மநாத்யந்தம் நிஷ்களம் நிர்க்குணம் சாந்தம் நிரஞ்சந மநாமயரும் ஹும்பட்குர்வாணரும் சிவநாமாநுகீசமுச்சாரந்தரும் ஹிரண்யபாஹுரும் ஹிரண்யரூபரும் ஹிரண்யவர்ணரும் ஹிரண்யநிதி மத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்மவிஷ்ணுருத்ராதீதமேக மாசாஸ்யம் பகவந்தரும் சிவம்ப்ரணம்ய"

எனவெழுந்து சிவனை அத்வைதம் - சாந்தம் - சதுர்த்தம் - ப்ரஹ்மவிஷ்ணுருத்ராதீதம் - கைலாஸசிகராவாஸம் - உமார்த்தக்ருதசேகரம் - ஸோமஸூர்யாக்நிநயநம்-வ்யாக்ரசர்மாம்பரதரம்-ம்ருகஹஸ்தம்-பஸ்மோத்தூளிதவிக்ரஹம்-பஞ்சாநநம் - மஹாதேவம் என்பனவாதி அடையாளங்களுடையவனெனத் துதிக்கின்றது. இத்தகையசுருதிக ளின்னும்பலவுள. இவற்றை நேரேதரிசித்தவர்கள் இனி ஐயங்காரது அந்தகாரத்திற்கே துக்கியாகிற்பர். இந்தவியவஸ்தையால், துரீயசிவனிருப்புச் சுருதிஸித்தமெனவேற்பட்டுப் பூர்வபட்சியினதுவாதம் புலம்பலாகவே முடிந்தது.

இனி யாமொன்று கூறுகின்றோம். வேதம்=பட்டயாகிய ... துரீயசிவனிருப்பு=ஹேதுவாகிய புகை.அவரதுபரத்வம்=ஸாத்யமாகிய நெருப்பு. இவ்வாறுதெளிந்தவர்கள் இராமனது பூசையாகிய ஹேதுவால் சிவபரத்வமாகிய ஸாத்யத்தைத் துரீயசிவனாகிய பட்சத்தில் சாதிக்கவிரும்பார்கள். தருமன்-பீமன்-அர்ஜுனன் - வாலி-இராவணன் முதலினோர் சிவபூசைசெய்தது சிவபரத்வத்திற்கு ஹேதுவாயிடினன்றே அவரோடெண்ணப்படும் இராமனது சிவபூ

சையும் அதற்கு ஹேதுவாயிடும்? இவர்களுக்கும் இராமனுக்குமு ள்ள ஸாம்யாதிசயத்தை எங்களதுமுதற்பாகத்திலாங்காங்குக் கண்டுதெளிக. அன்றியும், "தஸ்யாம்ராஜர்ஷய: புண்ய:" என்னும் பாரதவசன்மானது எமதர்மராஜன்சபையில் யயாதி-நகுஷன் - புரூரவன்-மாந்தாதா-ஸோமன்-லட்சுமணன் - பிரதர்த்தன் முதலியோரு டன் இராமனு மவ்வியமனை யுபாஸித்துக்கொண்டிருந்தானென்று தெரிவிக்கின்றது. இராமன்முதலியோர் பூசித்ததினால் இயமன் பரத்வமாயிடினன்றோ அவ்விராமனது சிவபூசையைச் சிவபரத்வத்திற்கு ஹேதுவாகத்தேடிய நமதன்பர் ஸந்தோஷிக்கலாம்? இதனால், நமது ஐயங்காருக்கு ஒருநலனுமுண்டாகாமையால், அவர் தேடியவநுமாநாங்கங்கள் அவரைத் தெருவிலேயே தியங்கவிடுத்தன.

இராமன் சிவனாரது சேவகன் என்பதை "அத்ரபூர்வம்" என்னும் வசனத்தில் அவ்விராமன்பிரஸ்தாபித்த மஹாதேவ-பிரபு பிரஸாத சப்தங்கள் தெரிவித்தன. சிவன் இராமனுக்கு ஸேவ்யன் என்பதை "க்ருதாபிஷேக:" என்னும் வசனத்தில் "பகவானிவேச:" என்பதும், "சைவபச்யாமி" என்னும் வசனத்தில் "பூஜயாமீமா ஹேச்வரீம்" என்பதுந் தெரிவித்தன. இவ்வுண்மையை "சிவபூஜ ரதச்சைவ" என்னும் இராமஸஹஸ்ரநாமமும், "ப்ரதிஷ்டாப மஹாதேவம்" என்னும் ஆதித்யபுராணமும், "ஸேதுமத்யேமஹ தீர்த்தே" என்னும் பராசபுராணமும், "ஸேதுமத்யே" என்னு சூதஸம்ஹிதையும் நிலைபெறுவித்தன. ஐயங்காரது அபிப்பிராய தை யாம்முழுவினும் எமது சித்தாந்தங்கெடாமல் தூரியசிவனுகி பட்சமும் இராமனது சிவபூசையாகியஹேதுவும், சிவபரத்வமாகி ஸாத்யமும் இனிது ஸித்தித்தன.

இனிப்பூர்வபட்சியினது பட்சஸாத்யஹேதுக்களைத்தகை மினமின்று கொஞ்சம் யோசிப்பாம். மலையினிடத்துக்காணப் படும் புகைமுந்தியதா? நெருப்புமுந்தியதா? என விசாரிக்கையில் நெருப்பே முந்தியது. நெருப்பிலிருந்தே புகைகிளம்பியது. அந்தப் புகையைக்கொண்டே அதுதோன்றிய இடத்தைக்கண்டது. இத னோடு நமதன்பர்தேடிய ஹேதுஸாத்யங்கள் பொருந்துமாறு எங்ஙனம்? சிவனாரது பரத்வம்முந்தியதா? இராமனது சிவபூசைமுந்திய தா? சிவனாரதுபரத்துவம் முந்தியதெனின், அப்பரதத்வப்பொருளை இராமன்பூசித்தது நிராக்ஷேபம். இராமனதுசிவபூசையேமுந்திய தெனின், முந்தியதுஸாத்யமேயன்றி ஹேதுவாகாது. இனிப்பட் சமாகிய மலையைவிசாரிக்கின், தூரியசிவனிருப்பை ஆகாயத்தாமரை

## ஆபாசவிளக்கம்.

யென்றுஅகற்றினார். அத்தூரீயசிவனிருப்பு அவருக்கங்கீகாரமில்லாவிடினும் மூவரிலொருவராகிய சிவனது இருப்பைப் அவரங்கீகரித்தலால், சிவன் என்னும் பட்சமாகியமலை இல்லாமற்போகவில்லை. அந்தச்சிவனும் இராமருக்கதிகரோயன்றி வேறில்லை. இதனால் பட்சனை த்யஹேதுக்கண் மூன்றிலுமே நமதன்பர் தடுமாறிப்போயினார்.

இனி இராமர்சிவபூசைசெய்தார் என்பதைச் சிவனாரது மேன்மையின்பொருட்டு எமதுநாயகர் பிரஸ்தாபித்ததாக நமது அன்பர்கொண்டதுந் தவறு. பார்த்தன் சிவபூசைசெய்தான். அப்படியே பாணனுஞ் சிவபூசைசெய்தான். அவை சிவனாரதுமேன்மைக்கு ஆதாரமாயிடினன்றோ அதற்கு இராமனது சிவபூசையும் ஆதாரமாயிடும்? சிவப்ரஸாதத்தையடைந்த நல்லோர்களது புண்ணியசரிதங்களெனக்கொண்டே யாவருடைய கதைகளையும், அன்னோர்செய்த சிவபூசைகளையும் ஸூதுக்கள் துதித்துவருகின்றனர். சிவனடியார்களது பெருமையைப் புகழ்ந்துதுதிப்பது அடியவர்பூசை யாகின்றமையால், இராமர்சிவபூசைசெய்தார் என்று நாயகரவர்கள்சாதித்தது, இராமரது பெருமையையெடுத்து விரித்ததாகவே முடிந்தது. யாமும் அவரது உபதேசவுறுதியால் ஜங்கமவழிபாடாகிய அச்சிவபுண்ணியத்தையேபரிபாலித்தோம். இவ்வுண்மைகளை இனிதாய்ந்து நமதன்பராகிய சிற்றூக்காடு ஸ்ரீநிவாஸாசாரியரும், அவரினத்தவராகிய ஏனைய பாஞ்சராத்திரிகளுஞ் சிவநிந்தையிலிழிந்து சீரழிந்துபோகாமல் சுருதிஸித்தமாகிய சிவபாரம்யத்தையும், அச்சிவபரஞ்சுடரை இராமபத்திரர்பூசித்துப் பிரஹ்மஹத்திநீங்கி இன்புற்றார் என்னும் புண்ணியசரித்திரத்தையும் இனிதாய்ந்துதெளிந்து உய்ப்பாராக. இது ஸாதுக்களுடைய க்ஷேமார்த்தம் உலகினீடுவாழ்க.

### வாழ்த்து.

"வாழி சோபநம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தரு டோற்றமுஞ் சோபநம்
ஆழி போலரு ளையன் மவுனத்தா
லேழை யேன்பெற்ற வின்பமுஞ் சோபநம்"

திருச்சிற்றம்பலம்.